# மண்ணாசை

## சங்கரராம்

சங்கரராமின் 'மண்ணாசை'யுடன் தமிழ் நாவல் இலக்கிய அந்தஸ்தும் கனமும் பெற்றது. - க.நா.சு.

சங்கரராமின் 'மண்ணாசை'யுடன் தமிழ் நாவல் இலக்கிய அந்தஸ்தும் கனமும் பெற்றது. - க.நா.சு.

சங்கரராம் என்ற டி.எல்.நடேசன் தமிழ் நாவல் இலக்கியத்தின் முன்னோடி. The Children of the Kaveri (1926), The Love of Dust (1938)) என இரு நாவல்களை ஆங்கிலத்தில் எழுதினார். The Love of Dust நாவலை மண்ணாசை என்ற பெயரில் அவரே தமிழில் எழுதினார். இந்த நாவல் பற்றி 'விமரிசனக்கலை' நூலில் குறிப்பிடும் க.நா.சு., “சங்கரராமின் 'மண்ணாசை'யுடன் தமிழ் நாவல் மீண்டும் ராஜம் ஐயர், மாதவையா இவர்கள் எழுதிய நாவல்களைப்போல இலக்கிய அந்தஸ்தும் கனமும் பெற்றது. … சங்கரராம் பின்னர் பல நாவல்களை எழுதினார் என்றாலும், அவை மண்ணாசையின் இடத்தை எட்டியும் தொடவில்லை.” என்கிறார்.

## உள்ளடக்கம்

# 1. ஆலங்கட்டி மழை

காற்றோ, மழையோ, வெயிலோ, நிழலோ, குழந்தைகளுக்கு எப்பொழுதும் வெட்டவெளியில் விளையாடுவதுதான் இஷ்டம். முன்ஜாக்கிரதையுள்ள பெற்றோர்கள், இதற்கு இடங்கொடுக்க மாட்டார்கள். ஆனால், வீரமங்கலம் கிராமத்திலிருக்கும் பெற் றோர்களோ, இதற்கு நேர்விரோதம். அவர்கள்மேல் தப்பில்லை; அவர்களுடைய குழந்தைகள் அடங்காப்பிடாரிகள்; சொன்னாலும் கேட்கமாட்டார்கள்.

வீரமங்கலம், காவேரிக்கரையோரமுள்ள ஒரு சிறு கிராமம். அதற்கும் ரெயிலடிக்கும் 10 மைல் தூரம் இருக்கும். இந்த 10 மைலில், காவேரியே 1 மைல் தூரம்; 5 மைல் காட்டுப்பாதை; பாக்கி 4 மைல், வண்டிகள் போக்குவரவுக்கு வசதியுள்ள ரஸ்தா. இப்படிப்பட்ட ஊர், இந்தக் காலத்தில்கூட நவீன நாகரிகங்களிலிருந்து தப்பித்துக் கொண்டிருக்கிறது என்றால், அதில் ஒன்றும் ஆச்சரியமில்லை; அதனுடன், சுமார் இருபத்தைந்து வருஷங்க ளுக்குமுன், புராதனமான கிராமவாழ்க்கையிலிருந்து எள்ளளவும் பிசகவில்லையென்று சந்தேகமின்றிக் கூறலாம்.

வீரமங்கலத்துக் குழந்தைகள் அடங்காப்பிடாரிகளென்று முன்னமே சொன்னோம். அவர்களுக்குக் காற்று, மழை என்றாலே, ஒரே கொண்டாட்டம். ஏனென்றால், ஊரெல்லாம் தென்னஞ் சோலையாதலால், காற்றுக்குத் தென்னை நெற்றுக்களும் பழுத்த மட்டைகளும் உதிரும். இவைகளைப் பொறுக்குவதற்கு அச்சிறுவர்கள் பயமற்று இங்குமங்கும் ஓடித் திரிவார்கள்.

அதிலும் வெயிற்காலத்தில் ஒரு புயற்காற்று அடிக்க ஆரம்பித்தாலோ, அவர்களுடைய ஆனந்தத்திற்கு அளவே இல்லை. கோடை மாம்பழக் காலமல்லவா? மாம்பழத்துக்கு ஆசைப்படாத குழந்தை எது? வீரமங்கலத்திலோ, மாமரத்துக்குப் பஞ்சமே இல்லை. மூலைமுடுக்கெல்லாம் மாமரந்தான். வாய்க்கால் கரை யெல்லாம் மாமரந்தான். ஆனால், யாரோ கஷ்டப்பட்டுப் பயிரிட்டதாக நினைத்துக்கொள்ள வேண்டாம்.

எந்தக்காலத்திலோ, யார் பழத்தைத் தின்று கொட்டையை எறிந்தார்களோ, மரங்கள் மட்டும் வளர்ந்துவிட்டன. காயோ பழமோ, தேவையானவர்கள் தங்களுக்கு இஷ்டமான மரங்களில் பறித்துக் கொள்ளலாம்; கேட்பார் இல்லை. ஆனால், நாரில்லாத பழம் மட்டும் மருந்திற்குக் கூடப் பார்க்க முடியாது. இதனால், வீரமங்கலத்துக் குழந்தைகளுக்கு யாதொரு குறைவும் இல்லை.

ஒட்டு மாம்பழத்தை அவர் கள் எப்பொழுதும் தின்றிராவிடினும், உள்ளூர்ப் பழத்தின்மேல் அவர்களுக்கு ஆசை அதிகமென்பதைத் திண்ணமாகச் சொல்லலாம். ஏனெனில், இவைகளுக்கு இனிப்பும் அதிகம்; ஒருமணி நேரத்திற்குக் குறையாமலும் ஒரு பழத்தைச் சாப்பிடலாம்; இல்லாவிடில், சடைசடையாய் நார் இருப்பதன் பயன் என்ன?

இக்குழந்தைகளின் மாம்பழ ஆசையெல்லாம், ஒரு கோடை நாள் பிறபகலில் நிறைவேறிற்றென்றே சொல்லலாம். இருண்ட மேகங்களால் ஆகாயமெல்லாம் கருக்கல் மேலிட்டிருந்தது. இடியும் மின்னலும் இவ்வளவென்று சொல்லமுடியாது. பிரம்மாண்ட மான மழை பெய்வதற்கு வேண்டிய குறிப்புக்கள் இருந்தன. ஆயினும், மேகங்களைத் துரத்தி மழையைத் தடுப்பதற்கு ஒரு பெருங்காற்றுக் கிளம்பிற்று. அவ்வளவுதான்; குழந்தைகளெல்லாம், மாமரங்களிடம் ஓட்டம் பிடித்தார்கள். காற்றின் அகோர வேகத்தால் மேகங்கள் சிதறிப் போயினவே யொழிய, ஒருதுளி மழைகூடக் கீழே விழவில்லை. மரங்களெல்லாம் தவித்துத் தடுமாறித் தலைவிரித்தாடின. அப்பொழுது உதிர்ந்த மாம்பழங்களுக்குக் கணக்கே இல்லை. அரைப்பழம், முழுப்பழம், அணில் கடித்த பழம் — எல்லாவிதங்களும் பழமாரியாய்ப் பொழிந்தன. ஒவ்வொரு குழந்தைக்கும் தான் தூக்கமாட்டாத அளவு பழங்கள் இருந்தபோதிலும், ஒன்றுக்காவது மரங்களை விட்டுவர இஷ்ட மில்லை.

காற்றுச் சற்றுக் குறைவுபட்டது. உடனே மழை பெய்யத் தொடங்கிற்று. கேவலம் மழைக்கு வீரமங்கலத்துக் குழந்தைகள் பயந்தவர்கள் அல்ல. ஆனால், வர வர மழையோடு கோலிபோன்ற சில கட்டிகள் விழ ஆரம்பித்தன. இவை, கைக்கு வழுக்கலாயும் தொடமுடியாதபடி அவ்வளவு குளிர்ச்சியாயும்

இருந்தன. அங்கே ஏறக்குறைய இருபது குழந்தைகள் இருந்தார்கள். வயது, ஆறிலிருந்து பன்னிரண்டு வரையிலும் இருக்கும். அவர்களில், ஆலங்கட்டி இன்னதென்று தெரிந்தவன் ஒருவன்தான். அவன், மற்றவர்களுக்கு ஆலங்கட்டியைப் பற்றி வர்ணிக்கத் தொடங்கினான். அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, கட்டிகள் படபடவென்று விழ ஆரம்பித்தன. கல்லெறிவதுபோல் இருந்தது. குழந்தைகள் தாங்க முடியாமல், திடுக்கிட்டுச் சமீபத்தில் வையாபுரியின் தோட்டத் திலிருந்த குடிசையை நோக்கி ஓடினார்கள். ஆனால் அந்தக் கிழவன், சில தினங்களுக்கு முன் தன் தோட்டத்தைச் சுற்றி ஒரு பெரிய வேலியைப் போட்டு வைத்திருந்தான். இருந்தபோதிலும், போக்கு வரவுக்கு ஓர் இடத்தில் இடுப்பு உயரத்திற்கு ஒரு கவைக்கட் டையை நட்டு வைத்திருந்தான். மாம்பழ மூட்டையைச் சுமந்து கொண்டு, அந்தக் கவை மரமேறிச் செல்வதற்குக் குழந்தைகள் மிகவும் கஷ்டப்பட்டன. வேலன் தாண்டிப் போனபின், வள்ளி ஏறிப் போவதற்குச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது, மல்லன் வெகுவேகமாக வந்து, அவளைத் தடுத்துத் தான் முன்னே சென்றான். இடிபட்ட வள்ளி, கால்வழுக்கிக் கவைமரத்திற்குச் சமீபத்திலிருந்த வடிகாலில் விழுந்தாள். உடனே ஐயோவென்று கூக்குரலிட்டு அழுதாள். இதைக் கேட்ட வேலன், மாம்பழங் களைக் கீழே போட்டுவிட்டுத் திரும்பி ஓடிவந்தான். வள்ளியின் நிலைமையைப் பார்த்து, அவனும் அவ்வடிகாலில் குதித்தான். இதற்குள் வள்ளி எழுந்து விட்டாள். அவள் உடையெல்லாம் நனைந்து விட்டது. உடம்பெல்லாம் சேறு. தேம்பித் தேம்பி அழுதாள். அந்த வடிகால் ஏறக்குறைய ஐந்தடி ஆழம் இருக்கும். அகலம் மூன்று அடிக்குமேல் இராது. அதன் இரண்டு பக்கங்களும் ஒரே ஈரக்களி. கரைமேல் ஏறுவதற்கு யாதோர் ஆதரவும் இல்லை. தப்பித் தவறி ஒரு வேரோ கொடியோகூடக் கண்ணுக்குத் தென்பட வில்லை. வள்ளியைக் கரையேற்றிவிட, வேலன் வெகு ஆத்திரமாயிருந்தான். அதனால், அவளை அவன் உடனே தன் தோள்பட்டை வரையில் தூக்கிவிட்டான். அப்பொழுது அந்தப் பாழும் சேற்றில் அவள் பாதம் சறுக்கி, இருவரும் தொப்பென்று விழுந்தார்கள். வேலன் ஒரு க்ஷணத்தில் எழுந்திருந்து, வள்ளியைத் தூக்கி விட்டான்.

“சே,சே! இந்தச் சேத்தாலே இவ்வளவும். உனக்கு அடிபட்டிச்சா?” என்று வேலன் துக்கத்துடன் கேட்டான்.

“அடி ஒண்ணுமில்லை; நம்ப எப்படி மேலே போறது?” என் றாள் வள்ளி. அவளுக்குப் பயம் தெளிந்துவிட்டது. அழுகையையும் நிறுத்திவிட்டாள்.

“நான் மறுபடியும் ஒன்னைத் தூக்கறேன்; இந்தத் தடவெ ரொம்ப சாக்கிரதையா இருக்கேன். நீ பயப்படாதே,” என்று தைரியம் சொன்னான் வேலன்.

ஆனால், வள்ளி சம்மதிக்காமல் தலையை ஆட்டினாள்.

“சரி, இப்படிச் செய்றேனே; நான் கீளே குந்திக்கிறேன். நீ என் தோள்மேலே ஒக்காந்து, என் களுத்தைக் கெட்டியா பிடிச்சுக்கோ. நான் மொள்ள எந்திருக்கிறேன். நீ கரையேறிடலாம்,” என்றான் வேலன்.

“நான் அப்புறம் உன் கையைப் பிடுச்சு மேலே இளுத்துடறேன்,” என்றாள் வள்ளி, வெகு உற்சாகத்துடன்.

“அது ஒன்னாலே முடியாது. நான் எப்படினாச்சும் வந்துடுறேன்,” என்றான் வேலன், சிரித்துக்கொண்டு.

“எப்படி? சொல்லேன்?” என்று வற்புறுத்தினாள் வள்ளி.

“இப்படித்தான்!” என்று சொல்லிக்கொண்டு, வேலன் தன் கால் களையும் கைகளையும் மாற்றி மாற்றி, வடிகாலின் இரண்டு பக் கங்களிலும் உதைத்துக் கொண்டு மேலே ஏறினான். வள்ளியை அக்கிடங்கிலிருந்தது மேலே எடுத்துவிடுவதற்கும், தான் ஏறி வருவதற்கும் வேலனுக்கு ஒரு நிமிஷத்திற்குமேல் ஆகவில்லை.

பெருமூச்சு விட்டுக்கொண்டு அவர்கள் குடிசையைச் சேர்ந்த பொழுது, மற்றெல்லாக் குழந்தைகளும் அவர்களுடைய நிலைமையைப் பார்த்துப் பரிதவித்தனர். எல்லோரும் தாங்கள் சேகரித்த பழங்களில் சிலவற்றை வேலனுக்கும் வள்ளிக்கும் கொடுத்தார்கள். இப்படி அனைவரும் வேலனிடத்திலும் வள்ளியிடத்திலும் அன்புகாட்டிச் சந்தோஷமாயிருக்கும் பொழுது, மல்லன் மட்டும் தனியாக ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு, வெகு ஆனந்தமாய் ஒரு மாம்பழத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும், வள்ளிக்கு ஒரே கோபமாக வந்தது.

‘‘எல்லாம் அந்தக் கொரங்கு செஞ்ச வேலைதான்,’’ என்று மல்லனைக் சுட்டிக்காட்டிச் சொன்னாள்.

‘‘ஆமாம், ஆமாம்,’’ என்று அநேகம் குழந்தைகள் கூச்சலிட்டன.

‘‘நா... நா... நான்கூடப் பார்த்தேன்,’’ என்றான் குட்டிக் கிச்சன், திக்கிக்கொண்டு.

‘‘அது என்னாது?’’ என்று வேலன் கடுகடுப்பாய்க் கேட்டான்.

‘‘அதுதான் என்னைக் கெடங்கிலே தள்ளிச்சு,’’ என்றாள் வள்ளி, கலங்கின கண்களும் துடித்த உதடுகளுமாய்.

‘‘நீ முன்னாலே சொல்லல்லியே; ஏன் தள்ளினான்?’’

‘‘அது முன்னாலே போவறதுக்குத்தான். அதுங் காரியம்தானே அதுக்கு எப்பவும். அதுன் சமாசாரம் ஒனக்குத் தெரியாதா?’’ என்றாள் வள்ளி.

வேலனுக்குக் கோபம் வந்துவிட்டது. உடனே, மல்லனிடம் முறைப்பாகச் சென்றான். மீதி அனைவரும் அவனைப் பின்பற்றினார்கள். வேலனுக்குச் சுமார் பன்னிரண்டு வயது இருக்கும். அவன் வயதுக்கு மிகவும் உயரமானவனே. கறுப்பு மனிதர்களுக்குள் சிவப்பு நிறமே என்று சொல்லலாம். உருண்ட பெரிய

கண்கள், கூர்மையான மூக்கு, எப்பொழுதும் புன்சிரிப்போடு கூடிய உதடுகள். இயற்கையாகவே திடசரீரமுடையவன். அவன் ஒரு பெரிய பண்ணைக்காரன் குழந்தையாதலால், அவனுக்கு ஊழியஞ் செய்ய வேண்டுமென்பது அவசியமில்லை. ஆயினும் அவன் ஓடிப்பாடித் திரிந்துகொண்டே இருப்பான். கஷ்டமான தோட்டவேலைகளையும் பயிர்வேலைகளையும் அடிக்கடி ஊக்கத்துடன் செய்வான். அதனால் அவனுடைய உடம்பு, தேகப் பயிற்சியின் பயனை அடைந்து வந்தது.

“நீ ஏண்டா அவளைக் கெடங்கிலே தள்ளினே?” என்றான் வேலன், மல்லனைப் பார்த்து.

மல்லன், புறங்கையில் ஒழுகி ஓடும் மாம்பழ ரசத்தை ருசி யோடு நக்கிக் கொண்டிருந்தான். அவன் வாயைத் திறக்கவில்லை. வேலனுடைய கோபத்தைப் பார்க்கப் பார்க்க, அவனுக்குப் பயம் அதிகரித்தது. வேலனைக் காட்டிலும் நாலு ஐந்து மாதங்கள் பெரியவனாயிருந்தாலும், வேலனுக்குமுன் அவன் மிகவும் சின்னப் பையன்போலவே தோற்றினான். அவன் உடம்பு மிகவும் மெலிந்திருந்தது. அவன் எலும்புகளை யெல்லாம் கணக்கிடலாம். அவனைப் பார்த்தால், இளம்பயிரில் நீருக்குத் தவித்து வண்டுக்கு இரையாகிச் சாவாமலும் பிழைக்காமலும் நாளோட்டும் தென்னங் கன்றுபோல் தோன்றினான். இக்குறையெல்லாம் நிறைவேறினாற் போல், அவன் தலை மட்டும் ஒரே வீக்கமாக வீங்கி, அவன் மெலிந்த கழுத்தின்மேல், குருவித் தலையில் பனங்காயை வைத் தாற்போல் காணப்பட்டது. கண்கள் மட்டும் தலைக்கேற்றவைகள்தாம்; உருண்டு நீண்டு இமைகளுக்கு முன்வந்து நின்றன. விழிப்போ தூக்கமோ, இமைகள் எப்பொழுதும் திறந்த வண் ணமேயிருக்குமென்ற சந்தேகம் ஏற்படும். போதும் போதாததற்கு, முகமெல்லாம் அம்மை தழும்புகள். அந்தப் பரிதாபமான பையன், சண்டை எப்படிப் போடுவான்? அவன் பேசாமல் உட் கார்ந்திருந்தான்.

“நீ ஏண்டா அப்படிச் செஞ்சே, மூளிகண்ணுப் பயலே?” என்று மிரட்டினான் வேலன்.

“நான் என்னா பண்ணினேன்? அவதான் கால்தவறி உளுந்துட்டா,” என்று அவன் மெதுவாகச் சொன்னான்.

“அம்மாம்மா! என்னா பொய்?” என்றாள் வள்ளி, வாய் மேல் கைவைத்துக்கொண்டு.

“நீ தள்றப்போ நான் பார்த்தேனே!” என்றான் மற்றொரு பையன்.

உடனே வேலன், அவன் தவடைமேல் பலமான ஒரு அறை கொடுத்தான். மல்லன் கூக்குரலிட்டு, வேலனைத் தாறுமாறாய் வைதான். வேலனுக்குக் கோபம் அதிகரித்து, மறுபடியும் அடித்தான். திட்டினால் பூசை அதிகமாகுமென்று தெரிந்துகொண்ட மல்லன், தன் தகப்பனிடம் சொல்லி வேலனுக்கு அடிவாங்கி வைப்பதாகப் பயமுறுத்தினான்.

வேலனோ, “ஒங்க பாட்டங்கிட்ட நீ சொன்னாலும் சரி, ஒங்க முப்பாட்டன்கிட்ட சொன்னாலும் சரி, எனக்கென்ன?” என்று சொல்லிவிட்டுத் திரும்பினான். அவ்வளவு குழந்தைகளுக்குள், மல்லன்மேல் யாருக்கும் இரக்கமில்லாமற்போனது ஆச்சரியந்தான். பாவம்! அவன், தானே அழுது ஓயவேண்டியதாயிருந்தது. கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஆலங்கட்டி விழுவது நின்றது; மழையும் குறைந்து போயிற்று. பயமில்லாமல் வீட்டுக்குப் போகலாமென்று தெரிந்தவுடன், குழந்தைகளெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள்.

# 2. அத்தையில்லா வீடு சொத்தை

வீட்டிற்குச் சமீபமாய் வரவர, மல்லனுக்குத் துக்கம் அதிகரித்தது; நடை குறைந்தது. கையிலிருந்த மாம்பழ மூட்டையிலிருந்து ஒரு புறமாய்க் கீழே தவறி விழும் பழங்களைக்கூட அவன் கவனிக்கவில்லை. வெகுசீக்கிரத்தில் வீட்டில் தன்னை அன்புடன் ஆதரிப்பார்கள் என்ற எண்ணத்தால், அவன் வாங்கின அடிகளின் வலி பதின்மடங்கு அதிகமாகத் தோன்றிற்று. அழுகையால் கண்கள் வீங்கியிருந்தன. வீட்டுத் திண்ணைக்கு வந்தவுடன், விம்மி விம்மி அழ ஆரம்பித்தான். அப்பொழுது, அவன் மோவாய்கட்டை வழக்கம்போல் ஒரு புறமாக ஒதுங் கிற்று. வாசற் கதவண்டை நின்று கொண்டிருந்த அவன் தாய், அவனுடைய நிலைமையை முதலில் பார்த்தாள்.

"ஐயையோ! என் கண்ணே, கண்ணே! எந்தப் பாவிடா உன்னை அடிச்சான்?" என்று கட்டி அணைத்துக் கேட்டாள்.

ஆனால், மல்லன் அவளை, "நீ போ, நீ போ," என்று அலட் சியமாய் உதறிக்கொண்டு உள்ளே நுழைந்தான். அவன் அத்தையும் தகப்பனும் சாவகாசமாய்ப் புளியம்பழங்களை உடைத்துப் புளியை எடுத்தவாறே, வரப்போகும் அறுவடையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். இந்தச் சமயத்தில், ஒரு பெரிய அழுகைக் குரலோடு மல்லன் அவர்கள் முன் தோன்றினான்.

"என் கண்ணே! என் அப்பா!" என்று கம்மின குரலோடு கதறி, அவன் அத்தை மீனாக்ஷி தன் இரு கரங்களாலும் அவனை வாரி மார்பின்மேல் அணைத்துக்கொண்டாள். அவன் தகப்பன் மாயாண்டி, தன் செல்லப்பிள்ளையின் உடம்பையெல்லாம் தடவிக்கொடுத்து, அவன் காயங்களை உற்றுப் பார்த்தான். சற்று விலகி அவன் தாய் தேவானை, அப்பனும் அத்தையும் செய்யும் பணிவிடைகளை மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவர்கள் எவ்வளவு சமாதானப்படுத்தியும், மல்லன் தேம்புதல் கொஞ்சத்தில் நிற்கவில்லை. மெள்ள மெள்ள அவனே ஆய்ந்து

ஒய்ந்து, நடந்த விஷயங்களைக் கூறினான். இதைக் கேட்டவுடன் மீனாக்ஷிக்கு அடங்காக் கோபம் வந்தது.

“என்ன அக்கிரமம்? அந்த நண்டு வீரப்பன் மகள் கால் வளுக்கிக் கீளே விளுந்ததுக்கு, இப்படியா அடிக்கிறது? அவன் மண்டையை ஒடச்சாலென்ன?” என்று பல்லைக் கடித்துக்கொண்டு அடிவயிற்றிலிருந்து பேசினாள்; பேச்சுக்கூடச் சரியாகத் துவனிக்க வில்லை.

“அந்தப் பய வேலனுக்கு, இப்பவே வள்ளியைக் கட்டிக் கிட்ட தாக எண்ணம்,” என்றான் மாயாண்டி.

“அடே, அவன் என்ன வேண்ணா எண்ணிக்கட்டும். அவுங்க கண்ணாலந்தான் பண்ணிக்கட்டும், ஒடங்கட்டைதான் ஏறட்டும் — யாருக்கென்ன? அந்தப் பேயி இந்தக் கொளந்தையை இப்படிக் கொல்லுவானேன்?” என்று கர்ஜித்தாள். ஆத்திரத்திலே கடைசி வார்த்தைகள் காதுக்குப்படாமல் அமுங்கிப் போயின.

“அவுங்க பண்ணை வச்சிருக்கிற கொளுப்பு அது,” என்றான் மாயாண்டி.

“ஆமாம்; பெரிய பண்ணை? எத்தினி நாள்டா தள்ளப்போவுது? வீரப்பனுக்கு அப்பவே எறக்கந்தான். அந்த ஊதாரி வெங்கடாசலத்துக்கு ஒரு கோடி ரூபாயிருந்தாக்கூடப் பத்தாது.”

“இப்போதிக்கி, ஊரிலே அவுங்கதானே பெரிய பண்ணைக் காரங்க?” என்றான் மாயாண்டி.

“போதுண்டா, இங்கே உக்காந்துகிட்டு, அவன் பெரியவன் இவன் பெரியவன்னு சொல்லிக்கிட்டு...” என்று மீனாக்ஷி சிடுசிடுப்பாய்ச் சொன்னாள். பிறகு, மல்லனுடைய முழங்காலில் ஒரு பெரிய காயத்தைப் பார்த்துக் கோபாவேசம்கொண்டு, வேலனையும் அவன் தாய் தந்தையரையும்கூட, வெகு

தூஷணையாகப் பேசினாள். ஆனால், அது முன்னமே இருந்த ஒரு புண்; கொஞ்சம் அடிபட்டதால் அப்படித் தோன்றியதென்றதை அவள் அறியாள்.

“நீ வெங்கடாசலத்துக்கிட்டே இப்பவே ஓடு. அவன் வளக்கிற நாய் என்னா வேலை பண்ணிட்டுதின்னு சொல்லு. பாளாப் போனவன்! பிள்ளைகுட்டி இல்லாட்டி, இந்த மாதிரிப் பிசாசுங் களையா வளக்கணும்? சத்திரம் சாவடி கட்டக்கூடாது? அவன் இன்னிக்கிப் பண்ணின வேலைக்கு, அவனைச் சரியா அடிக்காட்டி, அவன்மேலே பிரியாது பண்ணி ஜெயிலுக்கு அனுப்பிச்சுடுவேன்னு சொல்லு. எந்திரிச்சுப் போயேன்,” என்று கட்டளையிட்டாள்.

மாயாண்டி கையைப் பிசைந்தான். கொஞ்சம் பல்லையும் இளித்துக்கொண்டு, “கொளந்தைக சண்டையிலே நாம் ரொம்ப தூரம் போவக்கூடாது,” என்றான்.

“அடே பயங்காளி!” என்று மீனாக்ஷி வீறிட்டுக் கூச்சலிட்டாள். அப்பொழுது அவளுக்குப் புரையோடினது; திக்குமுக்காடிப் போனாள். குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று ஜாடை காட்டி னாள். தேவானை ஓடி, ஒரு லோட்டாவில் ஜலம் கொண்டுவந்தாள். அதை மாயாண்டி வாங்கி, ஜலத்தைத் தன் தமக்கையின் வாயில் ஊற்ற முயன்றான். ஆனால், மீனாக்ஷி அவனை அலட்சி யமாகத் தடுத்து, அவன் கையிலிருந்த லோட்டாவைப் பிடுங்கித் தண்ணீரைப் பருகினாள். உடனே குணமும் ஏற்பட்டது. பெருமூச்சு விட்டுக்கொண்டு மௌனத்துடன், கண்களில் ததும்பின நீரைத் துடைத்துக்கொண்டிருந்தாள். மாயாண்டி, உடனே வெங்கடாசலத்தினிடம் போவதாகச் சொன்னான். மீனாக்ஷி, அவன் சொற்களைக் காதில் ஏற்றுக் கொள்ளவில்லை.

“நான் இப்பவே போய், கண்டிப்பாகச் சொல்லிவிட்டு வாரேன். வீரப்பன் கிட்டேயும் சொல்லிடறேன். இன்னும் நாலு பெரியவங்க கிட்டக்கூடச் சொல்றேன்,” என்று மாயாண்டி கதறினான்.

இதற்கெல்லாம் மீனாக்ஷி வாயைத் திறக்கவில்லை. மாயாண்டி எழுந்து மெள்ள நழுவினான்.

ஒரு வயிற்றிற் பிறந்தவர்களுக்கு, இவ்வளவு தாரதம்மியம் எங்குமே இராது. மீனாக்ஷி, பூதாகாரமான ரூபத்தையுடையவள். மாயாண்டியோ, ஆகாரமில்லாமல் மெலிந்து ஒடுங்கிப்போன நரிக்குட்டிபோல் இருந்தான். மீனாக்ஷியின் தோற்றமோ, ஓர் ஆண் மகன்கூடக் கெட்டான்; ஆனால், பார்ப்பவர்களுக்கு ஓர் அருவ ருப்பு உண்டாகும்படி உதடுகள் மிகத் தடித்தும், கண்ணிமைகள் வீங்கினாற்போல் பருத்துத் தொங்கி, விழிகளைப் பாதி மூடிக் கொண்டும் இருந்தன. குரல், எப்பொழுதும் தொண்டை கட்டிக் கொண்டாற்போல் இருந்தது. மாயாண்டியைப் பார்ததாலோ, பல நாய்களால் துரத்தப்பட்டு வெருண்டு ஓடும் ஒரு சோனி நாயின் முகந்தான் ஞாபகத்துக்கு வரும். இவ்வளவு பயமும் பயத்தால் நடுங்கிப் பதுங்கும் பாவமும் ஏற்பட்டதற்குக் காரணம், அவன் வெகுகாலம் உடுப்புக்கும் உணவுக்கும் இடிபட்டதால் இருக்கலாம். எல்லோரையும் சந்தோஷப்படுத்த வேண்டுமென்ற ஆவலால், சந்தர்ப்பம் இல்லாமல் எப்பொழுதும் புன்சிரிப்போடிருக்கும் வழக்கத்தால், அவன் முகத்திற்கு ஒரு மூடத்தன்மை வாய்த்தது. போதும் போதாதற்கு குரலும் கீச்சுக் குரல். அவன் மதிப்பைப் போக்குவதற்கு இன்னும் என்ன தேவை?

மாயாண்டி சென்ற சில நிமிஷங்கள் வரையில், மீனாக்ஷி வாய் திறவாமல் மல்லன் தலையைத் தடவிக் கொண்டிருந்தாள். நடந்த சச்சரவில், மல்லன் தன் துன்பங்களையெல்லாம் மறந்துவிட் டான். இருந்தாற்போலிருந்து மீனாக்ஷி முணுமுணுக்கத் தொடங்கினாள்.

“சோம்பேறிப் பய! கையாலே ஒண்ணும் ஆவாது. எல்லாத்துக்கும் நான்தான் மாரடிக்கணும். அவன் ஒரு ஆம்பிள்ளையாம்? மடையன். பன்னியாட்டம் தின்பான். அது ஒண்ணுதான் தெரியும்.”

தன் கணவனைப்பற்றி இவ்வாறு பேசினால், சுயமரியாதை யுள்ள எந்த ஸ்திரீயாவது பொறுப்பாளா? ஆனால், தேவானை சுயமரியாதை என்பதை அடியோடு மறந்துவிட்டவள். இல்லாக் கொடுமையால், தானும் தன் புருஷனும் பிள்ளை குட்டியில்லாத ஒரு பணக்கார விதவையின் ஆதரவுக்கு உட்பட்டு, எட்டு வருஷங்கள் இருந்ததால் வந்த தீமை அது. தேவானை, தன் மதினியின்

கோபம் தணியும் வரையில், கைகட்டி அசையாமல் சிலைபோல் நின்றாள். இந்தச் சமயத்தில், வீட்டுப் பின்கட்டில் ஏதோ பாத்திரம் கீழே விழுந்தாற்போல் பெரிய சப்தம் கேட்டது.

"கொல்லைக் கதவைத் தெறந்து போட்டுட்டு வந்திட்டாயா என்ன?" என்று எரிந்து விழுந்தாள் மீனாக்ஷி. உடனே தேவானை, நடுக்கத்துடன் பின்கட்டுக்கு ஓடினாள். என்ன காட்சி? கையிலே சோற்றுப்பானை, வாயிலே விழுங்கியும் விழுங்காமல் ஒருவாய்ச் சோறு — இந்த நிலைமையில், உயர்ந்து மெலிந்து, சுமார் பதினெட்டு வயதுள்ள ஒரு வாலிபன் அவளுக்குமுன் நின்றான்.

"எம் பெத்த வவுறே?" என்று தேவானை துக்கித்து, அடிவயிற்றில் அடித்துக்கொண்டாள். "அவ இங்கே வந்தாலும் வருவாடா. பொளக் கடைக்கிப் போ. வெக்கப் போருக்குப் பின்னாலே போ," என்று ரகசியமாகச் சொல்லி, அவனைத் துரத்திவிட்டுச் சமையல் அறைக் கதவைத் தாழ்ப்பாளிட்டாள். பிறகு மீனாக்ஷியிடம் வந்து, ஏதோ பித்தளைத் தட்டை எலி பரணிலிருந்து தள்ளிவிட்டதாகவும் மற்றப்படி ஒன்றும் சேதமில்லையென்றும் தெரிவித்தாள். மீனாக்ஷி நம்பிவிட்டாள்.

"சரி, நான் தங்கம்மா ஊட்டுக்குப் போய் வாறேன். நீ வாசக் கதவைத் தெறந்து போட்டுட்டு, தெருவுலே போற ஆட்டையும் மாட்டையும் உள்ளே நொளைய விடாதே," என்று மீனாக்ஷி தேவானையை அதட்டிவிட்டு, மல்லனை அழைத்துக் கொண்டு வெளியே போனாள். அவர்கள் போனவுடனே, தேவானை வாசற்கதவைத் தாழ்ப்பாளிட்டாள். இதுவும் ஒரு நல்ல காலமென்று நினைத்துக்கொண்டு, அவள் பின்கட்டுக்குச் சென்றாள். அந்த வாலிபன் சாப்பாட்டை முடித்துக் கொண்டிருந்தான். கண்ணும் கண்ணீருமாகச் சற்றுநேரம் அவனையே தேவானை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு, "நீ சாப்பிட்டு எத்தனை நாளாச்சுடா?" என்று விசனத்துடன் வினாவினாள்.

"எத்தினி நாளானா என்னம்மா? இப்பவாவது கெடச்சுதா இல்லையா? இந்தத் திருடு ரொம்ப துணிச்சலில்லே?" என்று சிரித்தான்.

ஆனால் தேவானையோ, மனம் நொந்து அழுதுகொண்டு, ‘‘அடே, சோளா! ஏதாவது வேலை வெட்டி செஞ்சு பொளைக்கக் கூடாதாடா?’’ என்றாள்.

‘‘நான் என்னாம்மா பண்ணுவேன்? நான் போன எடமெல்லாம் என் பங்காளி கூடவே வாறானே. ஒருவன் தவுராதே எல்லாரு கிட்டேயும் என்னைத் திட்டினான். நான் திருடனாம், குடிகாரனாம், பொய்யனாம் — ஊம், இன்னும் என்னா வேணும்? ஒரு தோப்பன் தன் மவனுக்குச் செய்யற ஒவகாரம் இது? — பிச்சைக் காரப்பய? என்னிக்காவது ஒரு நாளைக்கு, அவன் காலையும் கையையும் ஒடிச்சுப் போடாட்டி ஏன்னு கேளு.’’

‘‘அடப்பாவி, வாணாண்டா! வாணாண்டா! ஒன்னைப் பெத்த தோப்பண்டா; ஏண்டா பாவத்தைத் தலையிலே கட்டிக்கிறே? அவுங்கமேலே என்னடா தப்பு? நம்ம தலையெளுத்து. இல்லாட்டி அந்த முண்டச்சி, அவ பணத்தோடே இங்கே வந்துசேருவானேன்?’’

‘‘அந்த முண்டச்சியெச் சொல்லுவானேன்? இவனுக்கு எங்கே போச்சு மூளை? இவனைப்பத்தி ஊர்லே பேசிக்கிறதைக் கேட்டா, நாக்கைப் பிடுங்கிட்டுச் சாவலாம்.’’

‘‘சோளா! சோளா! நீயுமாடா என் உயிரை எடுக்கணும்? இந்தப் பேச்சு வாணாண்டா. என் வவுறு எரியுதடா. ஒங்க அப்பாவைத் திட்றயே, ஒன் சங்கதி என்ன? குடிச்சிட்டுத் திரியறது ஒனக்கு வெக்கமாயில்லையா? ஊரெல்லாம் ஒன்னெ பத்தி என்ன பேசறாங்களோ, அது ஒனக்குத் தெரியுமா?’’

‘‘நான் ஆருக்கு என்னா பண்ணிட்டேன், அம்மா? கஷ்டம் பொறுக்காதப்போ கொஞ்சம் குடிக்கிறேன். இல்லாட்டி, பைத் தியம் பிடிச்சுச் சாவ வேண்டியதுதான். என்னாலே ஆரும் துன்பப் பட வேண்டாம். இன்னும் கொஞ்சகாலம் அப்பாலே, கண்டியோ பினாங்கோ ஓடிடறேன். என் பங்காளி அங்கே வரமுடியாது; பாத்துக்கறேன் — இது இருக்கட்டும். வெங்கடாசலம் ஊட்டுக்குச் சும்மா சும்மா போயிட்டு வராப்படியிருக்குதே. என்ன சங்கதி? கடன்

கிடன் கொடுத்து, அவங்க வீடு வாசலெல்லாம் கட்டிக் கிலாமின்னு யோசனையா?''

``அட பாவி, அவுக இடத்திலே நல்லது ஒண்ணுகூட ஒனக்குத் தெம்படலையா? ஏண்டா பாவத்தையெல்லாம் தலையிலே கட்டிக்கிறே? நீ என்னா பண்ணுவே, அந்த விதியின் வேலை. இல்லாட்டி, என் பாளாப்போன வவுத்திலே நீ எண்டா பொறக் கணும்? — ஐயோ! ஆரோ கதவு இடிக்கிறாங்க, நான் போறேன். நீ எக்கேடு வேணா கெட்டுப்போ. இங்கே நிக்காதே,'' என்று அழாத துக்கத்துடன், அவள் வீட்டு முன்கட்டுக்குச் சென்றாள்.

மனம் நொந்து முகம் வாடிச் சோளன் சற்றுத் தயங்கி நின்றான். பிறகு, சுவர் ஏறிக் குதித்துப் போய்விட்டான்.

## 3. ஒரு வழிகாட்டி

வெங்கடாசலத்தின் வீட்டுத் திண்ணையில், அவன் சிநேகிதர்களெல்லாம் கூடிப் பேசிப் பொழுது போக்கிக் கொண்டிருந்தனர். நல்ல மழை அடித்து எங்கும் சேறும் சகதியுமாயிருந்ததால், ஒருவருக்கும் வெளியே நடமாட இஷ்டமில்லை. அந்தக் கூட்டத்திலிருந்த விருத்தாப்பியர்களுக்குத் தங்கள் பிறவித் தொழிலாகிய விவசாயத்தைப் பற்றியே பேச இஷ்டம். ஆனால், மற்றெல்லாரும் வீண் வம்படித்து உல்லாசமாகக் காலம் கழிக்க ஆரம்பித்ததால், இக்கிழவர்கள் மட்டும் தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள். வேடிக்கையாகப் பேசி எல்லோரையும் சந்தோஷப்படுத்துவதில் மதுரை வெகுசமர்த்தன். பிறரை வயிறு வெடிக்கச் சிரிக்கச் செய்தாலும், அவன் முகத்தில் புன்சிரிப்புக் கூடத் தோன்றாது. மனிதர்களுக்கோ மிருகங்களுக்கோ வீக்கம் ஏற்பட்டால், அதை எப்படி இலகுவாக்குவதென்பதைப் பற்றி ஒரு தர்க்கம் ஏற்பட்டது. ஒவ்வொருவனும் தன் அபிப்பிராயத்தைச் சொன்னான். அப்பொழுது மதுரை பேச வாயெடுத்தான். ஆனால், மாயாண்டி வருவதைப் பார்த்து, உடனே சம்பாஷணையை மாற்றினான்.

“என் பேச்சைக் கேளுங்க. நமக்குத் தெரியாத விசயத்திலே நாம் தலையிட்டுக்கக் கூடாது. அந்த மருந்து சமாசாரத்தைப்பத்தி என்னன்ன வேணுமோ, இதோ மாயாண்டியைக் கேளுங்க. அவன் அதிலே பளகினவன்,” என்றான் மதுரை.

உடனே, கூட்டத்தில் இருந்தவர்களில் சிலர் கொல்லென்று சிரித்தார்கள்.

மாயாண்டி, சற்றுப் பிரமித்து, “அது என்னாது?” என்று கேட்டான்.

“வீக்கத்துக்கு மருந்தைப் பத்திப் பேசிக்கிட்டிருந்தோம்.”

மறுபடியும் சிரிப்புக் கோஷமாய்க் கிளம்பிற்று.

இதன் உள் மர்மத்தை அறியாதவர்கள் — அவர்களில் வெங்கடாசலம் ஒருவன் — பக்கத்திலிருந்தவர்களை விஸ்தரிக்கும்படி வற்புறுத்தினார்கள்.

"உனக்கு வேறே பொளப்பில்லை — யாரையாவது கேலி பண்ணிக்கிட்டு இருக்கணும்," என்று மாயாண்டி ஆக்ஷேபித்த போதிலும், அவனை அறியாமல் அவனுக்குக் கொஞ்சம் சிரிப்பு வந்தது.

"நான் பொய்யா சொல்றேன்? அதுலே ஒனக்கு இருக்கிற அனுவோகம் யாருக்கு.."

மறுபடியும் சிலர் சிரித்தார்கள். வெங்கடாசலத்துக்குப் பொறுக்கமுடியவில்லை.

"அட, நீங்களே பேசிக்கிட்டு நீங்களே சிரிச்சுக்கிட்டா எங்களுக்கென்னா தெரியிது? சமாசாரத்தைத்தான் சொல்லித் தொலையுங்களேன்," என்றான் வெங்கடாசலம்.

"இதோ, இது சிரிக்கிற விசயமில்லை. காளிபட்டி பெரியண்ணக் கிளவனாரைக் கேட்டா...."

"போதுண்டா, மதுரை என் பேச்சை எடுக்காதே," என்று மாயாண்டி கோபமாகச் சொன்னான். ஆனால், மதுரை அவனைச் சட்டைச் செய்யாமல் சொல்லத் தொடங்கினான்.

"ஒரு அஞ்சாறு வருஷத்துக்கு முன்னாலே, பெரியண்ணனுக்கு உடம்பெல்லாம் தலையிலிருந்து காலு வரையிலும் வீங்கிப் போச்சு. பாவம் கௌவனுக்கு வலி பொறுக்கமாட்டலெ. என்னென்னமோ வைத்தியம் செஞ்சு பார்த்தான். ஒண்ணும் பலிக்கல்லை. இந்தச் சமயத் திலே, மாயாண்டி ஏதோ வேலையாக் காளிபட்டி போய்ச் சேர்ந் தான். கௌவன் கெதியைப் பார்த்தான். உடனே அவனுக்கு, ஆரோ கத்துக்குடுத்த நல்ல மருந்து ஒண்ணு ஞாவகத்துக்கு வந்திச்சு."

இப்பொழுது மாயாண்டி, மதுரையைத் தடுத்துப் பேச முயன்றான். ஆனால், மதுரை அவனை அடாதடியாய் அடக்கி விட்டுத் தொடர்ந்து சொல்லலானான். "ஒரு வீசை முந்திரிக் கொட்டையை வாங்கியாரச் சொன்னான். அதை வாணாயிலே போட்டு வறுத்து, ஒரு அரக்காப்படி எண்ணெய்போலே எடுத்தான் — என்ன முளிக்கிறயே, காத்தான். முந்திரிக் கொட்டை எண்ணெய் தெரியாதா? பாத்தா விளக்கெண்ணெயாட்டம் இருக்கும். ஆனால், தொட்டாக் கை புண்ணாயிடும் — ஊம், இந்த எண்ணெயைக் கைப்படாதே ஒரு உரிமட்டையிலே தோச்சுத் தோச்சு, பெரியண்ணன் உடம்பெல்லாம் தடவிட்டு, 'கொஞ்ச நாளிலே எல்லாம் சரியாய்ப் போயிடும்' இன்னிட்டு மாயாண்டி போயிட்டான். சேத்தநேரம் பெரியண்ணனுக்கு ஒடம்பெல்லாம் ஒரே தெனவா இருந்திச்சு. ஒரு புண்ணு ஆறும்போது அப்படித்தானே இருக்கும்? அதாக்குமின்னு எண்ணிக்கிட்டான். சொறிஞ்சிக்கணுமின்னு எவ்வளவு ஆத்திரமா இருந்தாலும், பல்லைக் கடிச்சிக்கிட்டுச் சும்மா இருந்தான், பாவம் ஆனால் கொஞ்ச நேரத்திக்கெல்லாம், மேலே கொதிக்கக் கொதிக்கத் தண்ணி ஊத்தினாப்போலே இருந்திச்சாம். இன்னும் கொஞ்ச நேரத்திக்கெல்லாம், ஆலைக் கொப்பரையிலே தூக்கிப் போட்டாப்போலே இருந்திச்சாம். கௌவனுக்குத் தாங்க மாட்டலே. 'எரியுதே, எரியுதே' இன்னு குய்யோ முறையோன்னு கூச்சப்போட ஆரம்பிச்சுட்டான். அவன் மவ எங்கேயோ வேலை செஞ்சிக்கிட்டு இருந்தவ, கூச்சலைக் கேட்டு ஓடியாந்து, அவனை மொள்ளத் தூக்கி ஒக்காத்திப் பாத்தா. அப்போ, அவன் தோலு கூட கையோடே ஒட்டிக்கிட்டு வந்திட்டுது. சங்கதியைக் கண்டுக் கிட்டா. உடனே உடம்புலே இருந்த எண்ணெயெல்லாம் மொள்ள வளிச்சி எடுத்தா. என்ன மொள்ள எடுத்தாலும் தோலென்னமோ கையோடு வந்திடுச்சு. அப்புறம், உடம்பு சொகமாக ரெண்டு மாசமாச்சு. ஆனால், வீக்கமெல்லாம் பறந்தோடிப்போச்சு. பெரியண்ணனுக்கு ஒடம்புலே எலும்புதானே மிஞ்சிச்சு. தோலும் நெறம் மாறிச்சு. இன்னும் என்னா வேணும்? இன்னிக்கும் பெரியண்ணன் ஊட்டண்டே போவக்கூட மாயாண்டிக்குப் பயந்தான்."

"அவ்வளவும் பொய்," என்றான் மாயாண்டி, சிடுசிடுப்புடன்.

“சரி இருக்கட்டும், நீ என்னோடே பெரியண்ணன் வீட்டுக்கு வா. ஒனக்குப் பத்து ரூபா தாரேன்,” என்றான் மதுரை.

“அட, என்னமோ நல்ல எண்ணத்தோடே பண்ணினான்,” என்று வெங்கடாசலம், மாயாண்டிக்குச் சகாயமாகப் பேசினான்.

இந்தச் சமயத்தில், வேலன் இரண்டு மூன்று சிநேகிதர்களோடு குதித்துக் கூச்சலிட்டுக் கொண்டு, தெருவிலிருந்து வீட்டில் நுழைந்தான். அப்பொழுதுதான் மாயாண்டிக்குத் தான் வந்த காரியம் நினைவுக்கு வந்தது. ஆனால், மதுரை செய்த பரிகாசத் தினாலும் அங்கிருந்த பெருங்கும்பலினாலும், வந்த விஷயத்தைப் பற்றிப் பேச அவனுக்குத் தைரியமில்லாமற் போய்விட்டது. ஒரு மூலையில் உட்கார்ந்து, பிறர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந் தான். பேச்சிலே சற்று ஓய்ச்சல் வந்த சமயம் பார்த்து, அண்ணாமலைத் தாத்தா புகுந்தான்.

“என்ன வெங்காடசலம், சீட்டுக்கிளிச்சான் கடலையைப் பத்திக் கேள்விப்பட்டாயா?” என்றான்.

“சீட்டுக்கிளிச்சான் கடலையா? புதுப் புதுச் சமாசாரம் கொண்டாரையே, தாத்தா,” என்றான் வெங்கடாசலம்.

“நமக்குத் தெரியாட்டி, புதுசின்னு எண்ணிக் கொள்றம். களுகு பட்டி சுப்பிரமணிய படையாச்சியைத் தெரியுமில்லை ஒனக்கு? — அவர் புஞ்சைக்காட்டிலே போட்டிருக்காங்களாம். அது ஒரு கடலைதானாம். ஆனா, நம்ப பொட்டுக் கடலைபோலே நாலு அஞ்சு பங்கு பெரிசா இருக்குதாம். வெள்ளாமை, காச்சுத் தள்ளிடு தாம். சுப்பிரமணிய படையாச்சி கை ரொம்ப எறங்கிப் போயி....”

“என்ன தாத்தா, நம்மூருலே நல்ல நஞ்சை நெலங்களா வாங்கப் பாக்கறாராமே?”

‘‘அதுக்குள்ளே அவசரப்படுறியே. அதைத்தான் நானும் சொல்ல வந்தேன். ஆரோ வெளிநாட்டுலேருந்து வந்தவங்க, அந்தக் கடலையிலே நாலு அஞ்சு மரக்கா கொடுத்தாங்களாம். அதை ரகசியமாகப் பயிரிட்டுப் பாத்தாராம். மாசூலு, நம்ப பொட்டுக்கடலை ஒரு கலமின்னா, அந்தக் கடலை மூணுகலம் கண்டுச்சாம். அவ்வளவுதான், கடனை ஒடனை வாங்கி, கையிலே இருந்த எல்லாப் பணத்தையும் போட்டு, அவரு புஞ்சை எரணூத்திச் சொச்சம் ஏக்ராவிலேயும் போட்டுத் தள்ளிட்டாரு. ரெண்டு மூணு மாசம் வரையிலும் அவருக்குத் திக்குத் திக்குன்னுதான் இருந்தது. இந்த லச்சணத்திலே, அந்த வருசம் மளைகூடக் கொஞ்சம் கொறவுதான் — எல்லாம் இப்போதான் — மூணாம் வருசம். எப்படியோ தட்டுக்கிட்டுப் பயிரு தலை எடுத்திடுச்சு. அப்புறம் பாரேன். பச்சைப் பசேலின்னு கண்ணுக்கு எட்டினமட்டும் ஒரே வெள்ளாமைதான். அவரு திஷ்டிக்குச் செலவளிச்சுதே இவ்வளவு அவ்வள வூன்னு இல்லையாம். நாலாவது அறுப்புக் காலம் வந்தவுடனே, நாலு கிராமத்துப் பொம்பளைங்க, விடாது பதினைஞ்சு நாள் வேலை செஞ்சுகூட முடியல்லையாம், போயேன். அவரு மட்டும் அதை அப்படியே குவிச்சு வச்சிருந்தாரோ, அது எவ்வளவு பெரிசு இருக்குமோ சொல்லமுடியாது. ஆனால் ஒண்ணு — எவன் கண்ணாவது பட்டுப் பாளாய்த்தான் போயிருக்கும். இதையெல்லாம் யோசிச்சு, பட்டணத்திலிருந்து மண்டிக்காரங்களை வரவளச்சு, அன்னன்னாடு சரக்கை கோணிகள்ளே போட்டு அனுப்பிச்சுட்டாராம். அந்த வருசம், செலவெல்லாம் போக, முப்பதாயிரம் கெடச் சுதாம்! கடனெல்லாத்தையும் ஒளிச்சாராம். சீட்டெல்லாம் கிளிக்க, பணம் கொடுத்திச்சல்ல; அதனாலே சீட்டுக்கிளிச்சான் கடலேன்னு பேரு வச்சுட்டாங்களாம். இப்போ, அந்தப் பக்கமெல்லாம், அது தான் வெள்ளாமையாம்,’’ என்று கிழவன் முடித்தான்.

‘‘என்ன, எல்லாம் கதையாட்டம் இருக்குதே, தாத்தா?’’ என்றான் வெங்கடாசலம்.

‘‘கதையா? உனக்குக் குட்டையனையே சொல்லச் சொல்றேன். அவன் எல்லாம் கண்ணாலே பாத்தவன் — குட்டையன் தெரியுமல்ல உனக்கு? என்

மச்சான் மவன். இன்னும் ரெண்டு மூணு நாளிலே, சீரங்கத்திலிருந்து வாரான். அவன் வாயாலே கேளேன்.''

''தெரிஞ்சுக்கத்தானா முடியாது? களுகுபட்டி ரொம்பத் தொலவா? அம்பது கல்லிருந்தா ரொம்ப. நேரே போனால் எல்லாம் தெரிஞ்சுபோவுது,'' என்றான் மதுரை.

''இது சரியான பேச்சு. நேரே போய்ப் பாக்கிறதுக்கு மிஞ்சினது ஒண்ணுமில்லை,'' என்று அண்ணாமலைத் தாத்தா ஆமோதித்தான்.

வெங்கடாசலம் பார்வை வீரப்பனை நோக்கிச் சென்றது. ''நீ என்ன சொல்லறே, வீரப்பா? நாளைக்குப் புறப்படலாமா? என் காங்கையம் மாடுங்களுக்கும் வேலையில்லை. வண்டிக்கும் புது வில் போட்டிருக்கேன். வேடிக்கையா ஒரு சவாரி போயிட்டு வரலாம். நம்மோடு மதுரை வருவான். உன் பேச்சு என்ன, தாத்தா? உனக்கு வரமுடியுமா?''

''கட்டாயமா!'' என்றான் அண்ணாமலைத் தாத்தா.

''நாம், முசிரியிலேகூட ஒரு நாள் தங்கலாம். நாளன்னிக்கு அங்கே தைப் பூசமாச்சுதே. பன்னிரண்டு ஊரு சாமியல்லா வரும். அதனாலே நாம் இப்போ போனால், வேலைக்கு வேலை பாத்துக்கலாம். சாமிக்குச் சாமியாச்சு, தமாசுக்குத் தமாசும் ஆச்சு,'' என்று சிரித்துக்கொண்டு மதுரை சொன்னான்.

''நீதான் சரியான ஆளு மதுரை. பூசம் சங்கதி எனக்கு மறந்தே போச்சு. நம்மூருக்கும் களுகுபட்டிக்கும் சரியா, முசிரி நடு மையம்,'' என்றான் அண்ணாமலைக் கிழவன்.

''நீ என்ன சொல்றே, வீரப்பா? வாயெத் தெறக்க மாட்டேங்கிறயே,'' என்றான் வெங்கடாசலம்.

வீரப்பன் கடுகடுத்த முகத்துடன், ‘‘இப்போ என்ன அவசரம்? போன வருசந்தானே ஜாவா கரும்புக்காக ஐந்நூறு ரூபாயைத் தொலைச்சே.’’

‘‘தொலைச்சேன்னு சொல்லாதே. ஒரு விசயத்தைத் தெரிஞ்சிக் கணுமின்னா, துட்டுச் செலவளிக்காத முடியுமா? அந்தக் கரும்போடு ஒருபாடு அக்கப்போரு கொடுத்ததனால்தான், இந்த வருசம், கந்தன், சடையன், ஆண்டிப்பத்து, எல்லாருக்கும் லாவம் கிடைச்சுது. ஏன், எனக்கு மட்டும் என்னா? இந்த வாட்டி எனக்கு வெல்லம் கண்டு மொதலு எளுநூறு மணுவாச்சே. போன வருசத்து நஷ்டமெல்லாம் எடுத்திட்டேனே!’’

‘‘அதெல்லாம் இருக்கலாம். அந்தச் செய்நேத்திக்காகக் கடன் வாங்கினயே; அது இன்னும் அடபடல்லையே, அதுக்கு என்னா சொல்றே?’’ என்று கேட்டான் வீரப்பன்.

‘‘இதோ, என் கடனுக்கும் அந்த வெள்ளாமைக்கும் என்ன சம்பந்தம்? நாம் பணத்தை ஆயிரம் வளியிலே செலவளிக்கிறோம். நான் அந்தப் புதுக்கரும்பைக் கண்டுபிடிச்சு, லாவமாய்ச் சாவுபடி பண்ணும்படி செஞ்சதிலே, எனக்குக் காத்துட்டுக்கூட நஷ்டமில்லை.’’

‘‘சரி, அந்தப் பேச்செல்லாம் இப்போ என்னாத்துக்கு. நான் சொல்றதெல்லாம், ஆத்திரப்படக்கூடாது இன்னுதான்,’’ என்று வீரப்பன் கொஞ்சம் கடுமையாய் சொன்னான்.

‘‘நான் பணமா இப்போ செலவளிக்கப்போறேன். அண்ணாமலைத் தாத்தா ‘சீட்டுக்கிளிச்சான் கடலை’ இன்னு ஒரு புதுச்சேதி கொண்ணாந்தாரே, அதை என்னான்னு விசாரிச்சுப் பாக்கத்தானே யொளிய, வேறென்ன?’’ என்றான் வெங்கடாசலம். ஆனால், அவன் வீரப்பனுடைய மனத்திற்கு விரோதமாய் நடந்துகொள்ள இஷ்டப் படவில்லை என்பது நன்றாய்ப் புலப்பட்டது.

‘‘சரி, போகலாம். எனக்கு என்ன பயமின்னா, நீ விசாரிக்கிறதோடே நிக்கமாட்டயேன்னுதான்,’’ என்று வீரப்பன் புன்சிரிப்புடன் சொன்னான்.

“நீ பயப்படவேண்டாம். எங்கிருந்து பணம் மொளைக்கும்? கொஞ்சம் சொல்லு,” என்றான் வெங்கடாசலம்.

இந்தச் சமயத்தில், வேலன் கைக்கு ஒரு பொட்டணமாக எடுத்துக்கொண்டு வீட்டின் உட்புறத்திலிருந்து ஓடி வந்து, “அப்பா, ஒன்னை அம்மா கூப்பிறாங்க,” என்று உரக்கச் சொன்னான்.

“கையிலே என்னடா பொட்டலம்?” என்று கேட்டான் மதுரை.

“தேங்காப் பணியாரம்.”

“எங்கே ஓட்டம்?”

“வள்ளி ஊட்டுக்கு.”

“ஆம்! திருட்டுப்பயலே. எல்லாம் ஒன் பெஞ்சாதிக்குத்தான் கொடுக்கணுமா? மாமனுக்கு ஒண்ணுமில்லியா?”

“சும்மா இரு, மாமா!” என்று சிரித்துக்கொண்டே வேலன் ஓடிவிட்டான்.

வெங்கடாசலம் உள்ளே சென்றதும், கும்பலும் கொஞ்சம் கொஞ்சமாகக் கலைந்துவிட்டது.

# 4. கல்யாணப்பேச்சு

மாயாண்டி வாய் திறவாமல், சோழப் பிரம்மஹத்தி போல் வெங்கடாசலத்தின் வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்திருக்க, அதே சமயத்தில் அவன் தமக்கை மீனாக்ஷி, தங்கம்மாளிடம் வேலனைத் தன் வாய் வலிக்கும் வரையில் சபித்துக் கொண்டிருந்தாள். வைது வைது ஒருவிதமாக மீனாக்ஷிக்கு ஆறுதல் ஏற்பட்டது. பிறகு, அவள் அந்தக் கிராமவாசிகளினுடைய ஆஸ்திபாஸ்திகளைக் குறித்துப் பேசத் தொடங்கினாள்.

இருட்டும் சமயம். மாடுகளெல்லாம் மழைக்கு எப்படியோ சமாளித்துவிட்டுத் திரும்பி வீடு வந்துகொண்டிருந்தன. மாடு மேய்க்கும் பிள்ளைகள் யாரும் காணப்படவில்லை. ஆனால், ஒவ்வொன்றும் வெகுவிரைவாகத் தன் வீட்டிற்குள் ஓட முயன்றது. அந்த மந்தையில் தன் எருமை எங்கு இருக்கிறதென்று தங்கம்மாள் கண்ணுற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். மீனாக்ஷி தன் லேவாதேவிப் பிரதாபங்களைப் பற்றிப் பேசிக் கொண்டது கூட, அவள் காதில் விழவில்லை. இருந்தாற் போலிருந்து தங்கம்மாள் சிரித்தாள். மீனாக்ஷி உடனே பேச்சை நிறுத்தினாள். தன்னைப் பரிகசிப்பதுபோல் அவளுக்குப்பட்டது.

“ஏன் சிரிக்கிறே?” என்று சற்றுக் கோபத்துடன் கேட்டாள்.

“ஐயோ! உன் சமாசாரமில்லே. அதோ அந்தப் பய வேலன் — மெய்யாலும், அவனுக்குக் கொளுப்பு ரொம்பத்தான் இருக்குது. ரெண்டு கையிலேயும் என்னமோ வெச்சுக்கிட்டு குரங்காட்டம் ஒரு எருமை முதுகு மேலே தாவி ஒக்காந்துக்கிட்டுச் சவாரி பண்றான். அதைப் பாரேன்,” என்றாள் தங்கம்மாள், அடக்க முடியாத சந்தோஷத்துடன்.

“கொரங்கு குதிக்கிறது ஒரு வேடிக்கையா?” என்று வெறுப்புடன் சொல்லிக்கொண்டே, கையால் கண்களின் பார்வையைச் சற்று மறைத்துக்கொண்டு, சுட்டிக்காட்டின பக்கம் மீனாக்ஷி பார்த்தாள். வேலன்

எருமையின் முதுகில் குதிரை ஸவாரி செய்வது போல் உட்கார்ந்துகொண்டு, மாடு அசைவதற்குத் தகுந்தபடி தன் உடம்பையும் ஆட்டிக்கொண்டிருந்தான். “பார்த்தா எமனாட்டந்தான் இருக்குது,” என்று கம்மிய குரலோடு, மீனாக்ஷி அழுத்தந் திருத்தமாய்ச் சொன்னாள்.

“அதென்னா அப்படிச் சொல்றே, அவன் அளகு நம்மூரிலே எந்தப் பிள்ளைக்கு இருக்குது?” என்றாள் தங்கம்மாள்.

“அடி பயித்தக்காரி! அவன் அளகெப்பத்தி யாரு பேசறாங்க —அதுவும் பார்க்கப் போனா, ஆம்பளைக்கு அளகென்னா வந்தது, அளகு? நான் சொன்னதை நீ கண்டுக்கில்லையே. எருமெக் கடா எமனுக்கு வாஹனம் இல்லியா? அவன் இப்படித்தானா சவாரி செய்யணும்?”

“ஆமாம், குளந்தைகளுக்கு என்னா தெரியும்?” என்று பரிந்து கொண்டு தங்கம்மாள் சொன்னாள்.

“மெய்தான். ஆனால், அவுங்களுக்குச் சொல்லிக் கொடுக்கத் தேவில்லையா? எல்லாம் வளக்கிறதுலே இருக்குது. ஒரு பையனைப் போன வழியெல்லாம் விட்டுட்டு, அப்புறம் நல்ல கொணம் வரல்லேன்னா, எங்கிருந்து வரும்? ஒரு நாள் தவறினாலும் தவறும், அவன் யாரோடனாச்சும் சண்டைபோடறது தவறாது. என்னா அளகோ! அவனுக்கு மூளை கொஞ்சங்கூட இல்லை. என்னிக்காவது ஒருநாள் காலையோ கையையோ ஒடிச்சுக்கத்தான் போறான். ஏளு எட்டு நாளைக்கு முந்தி, ஆத்தங்கரையிலே வேப்பமரத்து மேலே ஏறிக் கீளே மடுவுலே குதிச்சானாம். ஆறு வத்தின காலம் இப்போ; கல்லோ கட்டையோ, மரமோ மட்டையோ, படாத இடத்திலே பட்டுதூன்னு வச்சக்கோ, அவன் கதி என்ன ஆயிருக்கும்? எங்க மல்லன் அந்த மாதிரி எப்பொவாவது செய்வானா?” என்று மாரைத் தொட்டுக்கொண்டு, மீனாக்ஷி பெருமையாகச் சொன்னாள்.

“ஒரு நாளும் செய்யமாட்டான்,” என்று தங்கம்மாள், வெகு விரைவாகப் பதில் உரைத்தாள்.

“இந்த மாதிரிப் பயலுக்குத்தான், ஒங்க லச்சுமி அவ மகளைக் கட்டிக் குடுக்கப் போறாளாம். அவனாலே அவளுக்கு ஒரு சொகமும் இருக்காது. நீ சந்தேகப்பட வேண்டாம்,” என்று மீனாக்ஷி நிச்சயமாகச் சொன்னாள்.

“அந்தக் கவலை நமக்கென்ன? இருந்தாலும் அவன் அவ்வளவுக்குக் கெட்டுப்போவானா?”

“ஆ, அங்கேதான் நீ நெனைக்கிறது தப்பு. என் பேச்சைக் கேளு. உன்னைக் காட்டிலும் நான் வயசுலே ரொம்பப் பெரியவ. நம்ம பளமொளி ‘தொட்டிலிட்டது சுடுகாடு’ இங்கறது, எப்பவும் பொய்யாவாது. சொத்து கெடைக்கிதுன்னு ஆசையிருக்கலாம். அதுகூட...” என்று குரலைத் தாழ்த்தி ரகசியமாக, கம்மிய தொண்டை மேலும் கொஞ்சம் கம்மும்படி சொல்லத் தொடங்கினாள்: “...மூணு வருசத்துக்குள்ளே வெங்கடாசலம் வட்டிக்கடனைத் தீர்க்காட்டி, அந்த ரெட்டி அவன் சொத்தை யெல்லாம் ஏலத்துக்குக் கொண்டு வந்திடுவானாம். அந்த ரெட்டி ரொம்பப் பொல்லாதவனாம். அவன் கண்ணெல்லாம் வெங்கடாசலத்து நிலத்து மேலேதானாம். அதைத் தொட்டுத்தான், கேட்டபோதெல் லாம் கடன் கொடுக்கிறானாம். இந்த உளுமை ஒனக்கு இப்பொத் தெரியாது, ரெண்டு வருசம் போகணும்.”

“நீ சொல்றது வேடிக்கையாயிருக்குது. மீனாச்சி, வேங்கடாசலத்துக்கு எவ்வளவு கடன் இருக்குதுன்னு நெனைக்கிறே?”

“ஏன், அஞ்சாறு ஆயிரத்துக்கு இருக்காதா?”

“சரி, அப்படியே இருக்கட்டும். ஆறாயிரம் கடனுக்காக முப்பதினாயிரம் ரூவா சொத்தையா கட்டிப்பாங்க. குருடன் கையிலே குடுத்தாக்கூட, அவன் தென்னந்தோப்புக்கே பத்தாயிரம் கெடைக்குமே.”

“அவன் வித்தால்ல?”

“சொத்தெல்லாம் போவுறபோது விக்காமே என்னா பண்ணுவான்?”

“இவ்வளவு நாளாப் பளவி, இம்புட்டுத்தானா ஒனக்குத் தெரிஞ்சுது,” என்று மீனாக்ஷி, தன் மோவாய்க்கட்டையைப் பிடித்துக் கொண்டு கேட்டாள்.

“சொத்தை விடறதுக்கு யாருக்குத்தான் மனசு வரும்?” என்றாள் தங்கம்மாள்.

“அது சரி, ஆனால் எல்லாரையும்போல இல்லையே அவன் சமாசாரம். அவன் நெலத்தைப் பத்தி அவன் அடிச்சுக்கிற பெருமை...!”

“ஏன் அடிச்சுக்கமாட்டான்? எத்தினி தலமுறையா, அதை அவுங்க ஆண்டு வர்றாங்க? ராசாக்குச் செஞ்ச ஒவகாரத்துக்காகக் கொடுத்ததாம். இன்னிக்கும் அதுக்கு வாய்தாப் பணம் கெடையாதே — தெரியுமா ஒனக்கு?”

“அதெல்லாம் தெரியும். அதனாலேதான் விக்கமாட்டான். இப்போ முனிசாமியைப் பாரு, பாவம்! அவன் நஞ்சையெல்லாம் ஒத்திக்கு வச்சிருந்தான். கடன் ஏறிக்கிட்டே போச்சு. திருப்பிக் குடுக்க நிலத்தை வித்தாலொளிய வேறே வளியில்லை. பாத்துப் பாத்துக் கடைசியிலே, மைலவரம் கங்காணிக்கு நல்ல வெலைக்கு வித்தான். கடன்போக மிஞ்சினதிலே, காளிகோவிலண்டே பத்து ஏக்கரா புஞ்சை வாங்கினான். அங்கே மணிலாக் கொட்டை நல்லா விளையுதாம். இப்போ கஷ்டமில்லாதே சொகமாப் பொளச்சிக்கிட்டுத்தான் வாறான். அவன் என்ன, ஜாதி கெட்டா போயிட்டான்?”

“இப்போ, யார் சொன்னாங்க!” என்றாள் தங்கம்மாள்.

“ஒங்க வெங்கடாசலந்தான் சொல்றான்,” என்றாள் மீனாக்ஷி கையை ஆட்டிக்கொண்டு, “அவனும் முனிசாமியும் பங்காளிங்களாச்சே. அவனாயிருந்தா, அந்த ஆள்பிடிக்கிற கங்காணிப்பயலுக்கு நெலத்தை விக்கிறதைக் காட்டிலும், ஆத்துலே குளத்திலே வுளுந்து உயிரை விட்டிருப்பானாம். இதுக்கு நீ என்னா சொல்றே?”

“பைத்தியக்காரத்தனம்!”

“பைத்தியக்காரத்தனமில்ல — அவ்வளவு ஆணுவம். அவுங்க குடும்பத்துக்குக் கவுரதே கொறஞ்சு போச்சேன்னிட்டு, அவ்வளவு வவுத்தெறிச்சல். மடையன்! லச்சுமி, ஒரு குடும்பத்திலே எப்பவும் இருப்பாளா? பணக்காரன் பிச்சைக்காரன் ஆவுறதுதான், பிச்சைக்காரன் பணக்காரன் ஆவுறதுதான். எப்பேர்ப்பட்ட ராசாவெல்லாம் பிச்சை எடுக்க வந்தபோது, நம்மைப்போலக் கையகலம் நெல பொலம் வச்சிருக்கிறவங்களுக்குக் கஷ்டம் வந்தா, அது ஆச்சரியமா? கஷ்டம் வந்தபோது பொறுத்துக்கணும். குதிச்சா நடக்குமா?”

“நீ இப்பவே, வெங்கடாசலம் கையிலே ஓட்டை எடுத்துக் கிட்டாப்பபடி பேசறயே!” என்றாள் தங்கம்மாள், சற்று வெறுப்புடன்.

“எல்லாம் போறபோக்குத் தெரியல்லியா? அந்த ஆணுவமும் வீண் கவுரதையும் இல்லாட்டி, இப்பக்கூட அவன் தப்பிச்சுக்கலாம். நான் அவன் கடனெல்லாம் அடச்சிடுறேன். அவன் ‘நத்தைத் தோட்டத்தை’ப் பர்த்தியாக் குடுக்கச் சொல்லு.”

“ஓ! ஊருக்கெல்லாம் மொதல்தரமான நஞ்சைமேலே ஒனக்கு ஆசை போச்சா!” என்று தங்கம்மாள், புன்சிரிப்புடன் சொன்னாள்.

“அதெல்லாம் ஒண்ணும் இல்லை. போனாப் போவுதே, அவன் பொளச்சுப் போகட்டுமேன்னுதான். எவ்வளவு நஞ்சையா இருந்தாலும் அரை வட்டிக்கு மேலே கட்டாது. நான் பணம் கொடுத்த இடத்துலே, எனக்கு முக்கா வட்டி வருது ஆதாரத்துக்கும் ஒண்ணும் கொறவில்லை.”

“அப்படியிருக்கும்போது, அந்தப் பணத்தை ஏன் இதுலே போடுறேங்கிறே?”

“ஊருக்கெல்லாம் பெரிய மனிசனாச்சே, அவனுக்கு ஒவகாரம் பண்ணா, எனக்கு மரியாதி இல்லியா?” என்று மீனாக்ஷி பல்லைக் காட்டினாள்.

“அத்தோடேகூட, ஊரு மொதல் நஞ்சைக்கும் பண்ணக்காரிச்சி ஆயிடலாம்,” என்று தங்கம்மாள், சேர்ந்து சொன்னாள்.

“ஆமாம். நான் அவ்வளவு பணத்தை வாரி எறைக்கிறப்போ, எனக்கு அதுகூட வாணாமா? நடக்காத சங்கதியைப் பேசி என்ன லாவம்? அவன் நெலமெல்லாம் அப்பவே ரெட்டியாரு வாயிலே போட்டாச்சு. அசலூருக்காரனாவது கட்டிக்கிட்டுப் போவலாம்; நம்ம ஒறைமொறையான் யாருக்கும் அது குடுக்கக்கூடாது! அது அல்ல அவன் எண்ணம். அவன் எக்கேடு கெட்டுப்போகட்டும். வீரப்பனைக்கூட எங்கே கெடுத்திடறானோன்னிட்டுத் தான் எனக்குப் பயம்.”

“ஏது, நீ வீரப்பனுக்காவ ரொம்பக் கவலைப்படறாபடி இருக்குதே.”

“ஏன்னா, அவன் நல்ல மனிசன்.”

“அவனுக்குக்கூட நீ பணம் குடுத்திருக்கே இல்லை?” என்று தங்கம்மாள், குதர்க்கமாய்க் கேட்டாள்.

“அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? எம் பணத்துக்கு எப்பவும் பயமில்லை. ஆதாரமில்லையா? — எனக்கு என்னான்னா, அவன் ஒரு கொளந்தையை வச்சிக்கிட்டிருக்கான். அவன் உயிரெல்லாம் அதுமேலேதான். அந்தக் கொளந்தைக்காகவாவது, அவன் வெங்கடாசலத்துச் சிக்குலே எல்லாம் மாட்டிக்காத இருக்கணுமே. வெங்கடாசலம் என்னமோ கையிலே ஓட்டை எடுத்துக்க வேண்டியதுதான். அது தப்பாது. அவனோடே சேந்து இவனும் பாளாப் போயிடக் கூடாதேன்னிட்டுத் தான் பாக்கறேன்,” என்று மீனாக்ஷி உருக்கத்துடன் சொன்னாள்.

“இந்த யோசனையெல்லாம் ஒனக்கு எங்கிருந்துதான் வருதோ? வெங்கடாசலம் அவ்வளவு அயோக்கியனா? தன் கடனுக்காக வீரப்பனையா கெடுத்திடுவான்? இந்த ஊரெல்லாம் தேடிப் பார்த்தாக்கூட அவனைப்போல நல்லவன் உனக்குக் கெடைக்க மாட்டானே. அவுங்க சிநேகிதம் — காசு

துட்டுக்காக மாரடிக்கிற சமாசாரம் இல்லை. அதை நீ நல்லாத் தெரிஞ்சுக்கோ!'' என்று தங்கம்மாள், சற்று ஆத்திரத்துடன் சொன்னாள்.

மீனாக்ஷி மிக ஆச்சரியத்துடன், தன் மோவாய்க் கட்டையைப் பிடித்துக்கொண்டு சொல்லலானாள்: ''அடி பயித்தியக்காரி! வெங்கடாசலம் அயோக்கியனின்னா நான் சொன்னேன்? நல்ல எண்ணந்தான். ஆனால் நல்ல எண்ணத்தோடே நாம் எவ்வளவு தீங்கு பண்ணிடறோம்? அதிலேயும் வெங்கடாசலத்தைப்போல் ஆத்தி ரக்காரன்களுக்குக் கேக்கவேண்டியதே இல்லை. அவசரத்துலே ஒரு தப்புப் பண்ணிட்டு, அப்பாலே ஐயோன்னா முடியுமா? அப்பான்னா முடியுமா? — நாம் ரொம்பத் தொலவு போகவேண்டாம், வெங்கடாசலம் வளத்து வாறானே, அந்தப் பய அப்பனைத் தெரியுமல்ல உனக்கு? — தும்பலம் அப்பாவு? (தங்கம்மாள் தலையை ஆட்டினாள்.) அவன் சங்கதியை எடுத்துக்கோ. நேத்துப்போல இருக்குது. முப்பது காணி நஞ்சே. பொன்னுப் போட்டால் பொன்னு விளையும். நாப்பது அம்பது சோடிமாடு, அரமனை போல ஒரு ஊடு — இம்பிட்டும் இருந்திச்சு. இன்னிக்கு...? இருக்கிற எடம் தெரியாதே ஊரைவிட்டே ஓடிட்டான். ரொம்ப நல்ல எண்ணத்தோடெதான் நெல்லு வியாபாரம் பண்ணினான். முதல்லே லாவம் வந்திச்சு. பொன்னம்பலத்தையும் அவன் பணத்தெயெல்லாம் போடச் சொன்னான். வியாபாரமினா சூது. இருந்தாப்போலே இருந்து ரெண்டுபேரும் கவுந்துட்டாங்க.''

''அப்பாவு சமாசாரம் ரொம்ப அநியாயம்'' என்ற தங்கம்மாள், வெகு இரக்கத்துடன் சொன்னாள்: ''எனக்கு நல்லா ஞாபகம் இருக்குதே. அவன் பெண்சாதிக்காகவாவது, சாமி நல்ல வளி உடாமெ போச்சு. அந்த மவராசியைப்போல நான் யாரையும் பாத்ததில்லே. அவுங்க ஊருப்பக்கம் யாராவது போனால், அவுங்க ஊட்டிலே தங்கிச் சாப்பிடாதெ வரமுடியாதே.''

''அவ்வளவு நல்லவளாயிருந்து கூட அவ கெதி என்ன ஆச்சு? அவ புருசன் செஞ்ச புத்திகெட்ட வேலைக்கு அவபட்ட கஷ்டம் இருக்குதே — அது எல்லாருக்கும் தெரியாது.''

“ஏன் தெரியாது, எவ்வளவோ சொகமா வளந்திட்டு சொத்தெல்லாம் எளந்து, சாப்பாட்டுக்குக்கூட இல்லாத தவிச்சு, புருசனையும் உசிரோடு பறிகொடுத்திட்டு, பதினெட்டு வருசம் கொளந்தையில்லாமே இருந்திட்டு, இந்தத் திண்டாட்டத்திலே பிள்ளத் தாச்சியாயுமிருந்தால், இதைவிட என்ன கஷ்டம் வேணும்? மனசு திடமாயிருக்கிறவங்களாலே கூட இதைப் பொறுக்க முடியாதே — அவ பாவம், அப்பாவி; கோளை மனசு. அந்த இடியிலேயே, தலையெடுக்காதெ செத்தாள். ஆனால், அப்போ வெங்கடாசலமும் அலமேலுவும் அந்தக் கொளந்தையை வளக்கிறோமின்னு எடுத்துக்கிட்டு வந்தது பெரிய காரியந்தான். அவுங்க சத்தியம் பண்ற வரையிலும், அவ உயிர் போவாமெ துடிச்சிக்கிட்டு இருந்ததாம்.”

“என்ன பிரமாதம்! வெங்கடாசலமும் அப்பாவும் அவ்வளவு சிநேகிதமாயிருந்ததுக்கு இதுகூடப் பண்ணக்கூடாதா? இவுங்களுக்குந்தான் குளந்தை குட்டி இல்லியே,” என்றாள் மீனாக்ஷி.

“இதோ! அந்தப் பேச்சுத்தான் வேணாங்கிறேன். கொளந்தை குட்டியில்லாமெ எத்தனைபேர் இல்லை? எல்லாரும் அப்படி ஒத்துப்பாங்களா?” என்று தங்கம்மாள், சற்றுக் கடுமையாகச் சொன்னாள்.

“அது சரி. நான் அவனுக்கு நல்ல குணம் இல்லேன்னு சொல்லல்லியே. ஆனால்... என்னமோ, அவன் பேச்சும் ஜம்பமும் எனக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்கில்லே. என்னையே அறியாத கூட, அவன் மேலே எனக்கு ஒரு வெறுப்பு வந்திடுச்சு. தன் சிநேகிதன் பட்ட பாட்டிலேருந்துகூடத் தெரிஞ்சிக்காத மனிசனைப்பத்தி, நாம் என்ன சொல்றது?”

“சில பேருங்களுக்கு எப்பவும் தெரியாது,” என்று வேறு ஏதோ நினைவாய்த் தங்கம்மாள் சொன்னாள்.

“நான் சொல்றதும் அதுதான்,” என்று தலையை ஆட்டிக் கொண்டு மீனாக்ஷி சொன்னாள்: “புத்தியில்லாதவங்க காரியத்திலே எல்லாம் நாம் தலையிட்டுக்கிட்டா, ஒரலுலே தலையைக் குடுத்திட்டு இடிக்குதே

இடிக்குதேங்கராப் போலத்தான். இதுக்காவத்தான் நான், வீரப்பன் சாக்கிரதையா இருக்கணுமின்னு சொன்னேன்.''

தங்கம்மாள், ஒரு நிமிஷம் வாயைத் திறவாமல் யோசித்துக் கொண்டிருந்தாள். பிறகு எதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்குள் மீனாக்ஷி மறுபடியும் ஆரம்பித்தாள்.

''எங்கிட்டே ரொக்கமா முப்பதினாயிரம் இருக்குது. நான் இதை இந்தக் கொளந்தைக்கு இல்லாமெ வேறே யாருக்குக் கொடுக்கப் போறேன்,'' என்று பக்கத்தில் உட்கார்ந்திருந்த மல்லனைக் காட்டினான். மல்லன் மௌனமாய், தன் அத்தையையும் தங்கம்மாளையும் மாறி மாறிப் பேச்சுப்போக்குப்போல் விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தான்.

தங்கம்மாள் கொஞ்சம் வம்புக்கு ஆசைப்பட்டவள். இன்னும் மேலே சமாசாரம் வரப்போகிறது என்ற உற்சாகத்தால், மீனாக்ஷியின் எண்ணத்தை அறிந்து மிகவும் குதூகலம் கொண்டாள்.

''இந்தக் கொளந்தையை நான் எப்படிக் கண்ணுக்குக் கண்ணாப் பாக்கிறேனோ, அப்படித்தான் வீரப்பனும் வள்ளியைப் பாத்துக்கிட்டு இருக்கான். இந்த ரெண்டு கொளந்தைங்களுக்கும் கலியாணத்தைப் பண்ணிட்டா, எங்க சம்பந்தம் எவ்வளவு நல்லாருக்கும், பாரு,'' என்று அடக்க முடியாத ஆசையுடன் சொன்னாள் மீனாக்ஷி.

தங்கம்மாள், அவள் ஆசையின் துணிவைக் கண்டு ஆச்சரியப்பட்டாள். ஆனால், அவள் வாயைக் கிளறி இதர விஷயங்களையும் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தால், அவள் சொல்லை ஆமோதித்தாள்.

''தங்கமான யோசனை, ஒன்னுது. ஒங்கிட்டே பணம் இருக்கிறதுக்கும் அவன் ஊரிலே ஒரு பெரிய மனிசனா இருக்கிறதுக்கும், ரெண்டுபேரும் குடுத்துவாங்கிட்டா சரி. அப்புறம் ஊரே ஒங்களுது தான்.''

“ஒனக்கு என்னமோ வெளையாட்டா இருக்குது, தங்கம். மெய்யாலுமே எனக்கு இந்த ஸம்பந்தத்தை முடிக்கணுமின்னு இருக்குது,” என்றாள் மீனாக்ஷி.

“நான் மட்டும் பொய்யா சொல்றேன்!” என்று சிரிப்பை வெகு கஷ்டத்துடன் அடக்கிக்கொண்டு சொன்னாள் தங்கம்மாள்.

“இந்த ஸம்பந்தத்தில் ஒரு கோளாறும் எனக்குத் தெம்படல்லே. ஆனால், அந்தக் குட்டி வள்ளி, பொல்லாதவ. அவ ஒண்ணும் கலகம் பண்ணாமெ இருக்கணும்.”

“அவ யாரு கலகம் பண்றதுக்கு? நல்லது கெட்டது அந்த நண்டுக்கா தெரியும்? புருசனைத் தேடுறது அவ வேலையா? என்னைக் கட்டிக் குடுத்தபோது, என்னைக் கேட்டாங்களா? என் புருசனைக் கல்யாணத்துக்கு முன்னாலே நான் பாத்ததே கிடையாது. அவுங்க என்னைக் காட்டிலும் முப்பது வருசம் பெரியவங்க!” என்று மெய்மறந்தது பெருமூச்சுவிட்டுச் சொன்னாள் மீனாக்ஷி.

தங்கம்மாள், அவள் வாழ்நாளெல்லாம் வீணாளாய்ப் போனதைப்பற்றி மனம் இரங்கித் துக்கித்தாள்.

“ஆனால், இது வேறே மாதிரி,” என்று மீனாக்ஷி சொல்லத் தொடங்கினாள். “ரெண்டுபேருக்கும் ஈடு சரியாயிருக்குது. சொத்துக்கும் கொறவில்லை. சிலபேரு ‘அளகு, அளகு’ இன்னிட்டு அடிச்சிப்பாங்க. பெண்பிள்ளைக்கு அளகு வேண்டியதுதான். ஆண் பிள்ளைக்கு அளகு என்னா வந்தது? ஆண்பிள்ளை அளகின்னா, பொட்டச்சிதான்!” என்று நிச்சயமாய்ச் சொன்னாள். தங்கம்மாள் குறிப்பாகச் சிரித்தாள்.

“நீ மனம் வெச்சா இந்தக் காரியம் முடியாதா?” என்றாள் மீனாக்ஷி.

“நானா! நல்ல போடு போட்டையே, என்னாலே என்ன முடியும்?”

‘‘சும்மா இரு, எல்லாம் எனக்குத் தெரியும். நீ ஒண்ணு சொன்னா, அந்தப் பேச்சை லச்சுமி தள்ளிடுவாளா? வீரப்பனைச் சொல்லு, ஒத்துக்கிறேன். அவனுக்கு வெங்கடாசலம் தூவம் போட்டாத்தான் ஏறும். லச்சுமி கெட்டிக்காரி, நாலும் தெரிஞ்சவ. நீ அவளுக்கு இந்தச் சங்கதியைக் காதிலே போட்டா, தானே நடக்குது. அவதான் யோசிச்சுப் பாக்கட்டுமே. அதோடுகூட...’’ என்றவுடன், அவள் குரலைத் தணித்துக் கரகரவென்ற தொண்டையுடன் ரகசியமாகக் கூறலானாள்: ‘‘லச்சுமி இனிமேலே பெறப் போறதில்லை. சொத்தெல்லாம் வள்ளிக்குத்தான். வள்ளியும் எங் களவளாயிட்டா, நான் கொடுத்த கடனைத் திருப்பிக் கேக்கிறதுலே யாருக்கு என்ன லாவம்?’’

‘‘ஒண்ணுமேயில்லை, பெத்த தாயே தன் கொளந்தை சோத்தைப் பிடுங்கினாப்போலத்தான் இருக்கும்,’’ என்று தங்கம்மாள் தட்டிக் கொடுப்பதுபோல் சொன்னாள்.

‘‘சரியான பேச்சு! ஆனா, நீ சும்மா தலையை ஆட்டினாப் போதாது. எப்படினாச்சும் காரியத்தை முடிச்சிடணும். ஏன், இன்னிக்கு ராவே மொள்ளப் பேச்சை எடேன்.’’

தங்கம்மாள் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டாள். ஆனால், மீனாக்ஷியின் ஆத்திரம் அவளுக்கு வியப்பை உண்டு பண்ணிற்று. இருட்டியபடியால் தங்கம்மாள் விளக்கேற்ற எழுந்தாள். மீனாக்ஷியும் விடை பெற்றுக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினாள்.

## 5. தைப்பூசம்

முசிரியின் தைப்பூசத்திற்கு முந்தின நாள்தான், வீரமங்கலத்திலும் சந்தை. இந்தச் சந்தைக்கு, முசிரியிலிருந்து அநேக பார வண்டிகள் வந்திருந்தன. அவையெல்லாம் அன்றைய தினம் இரவே திருப்பிப் போவதால், வெங்கடாசலத்திற்கும் அவன் சகாக்களுக்கும், கழுகுப்பட்டிப் பிரயாணத்திற்கு நல்ல வசதி ஏற்பட்டது. இரவில் போக்குவண்டிகளோடு சவாரி வண்டியையும் விட்டால், வெயிலின் கொடுமையும் இராது; வண்டி ஓட்ட வேண்டுமென்ற கவலையும் இல்லை. சுகமாகத் தூங்கி விழிக்கும்போது ஊர் வந்து சேரலாம். இவற்றையெல்லாம் உத்தேசித்து, இரவு பொழுதோடு சாப்பிட்டுவிட்டு, வெங்கடாசலத்தின் வீட்டில் அண்ணாமலைத்தாத்தா, வீரப்பன், மதுரை ஆகிய மூவரும் தயாராகக் காத்துக் கொண்டிருந்தார்கள். வெங்கடாசலம், தன் மாடு மேய்ககும் பையன் ஆண்டியைச் சந்தைக்கு அனுப்பி, வண்டி கட்டும்போது தகவல் சொல்லும்படி கட்டளையிட்டிருந்தான். மதுரைக்குக் காங்கேயம் மாடுகளை ஓட்டுவதில் எப்பொழுதும் ஆசையுண்டு. ஆதலால், தானே வண்டியை ஓட்டுவதாகச் சொன்னான். ஆனால், இதற்கு வெங்கடாசலம் இணங்கவில்லை. முரட்டு மாடுகளாகையால், ஒருவேளையைப்போல் ஒருவேளை நடந்துகொள்ளமாட்டா என்றும், அவைகளைச் சமாளிப்பதற்கு ஆண்டியைக் கட்டாயம் அழைத்துக்கொண்டு போகவேண்டு மென்றும் சொல்லிவிட்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம், சந்தைப்பேட்டையிலிருந்து ஆண்டியும் வந்தான். மாடுகள் வண்டியில் பூட்டப்பட்டன. அப்பொழுது அண்ணாமலைத் தாத்தா, லாந்தரை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு கடையாணியையும் நன்றாகத் தடவிப் பார்த்தான். மற்றவர்களெல்லாம் சிரித்தார்கள்.

“சிரிக்கமாட்டேங்களா பின்னே? நா உளுந்தாப்படி நீங்கள் உளுந்திருந்தா, அப்போ தெரியும் — நீங்களும் விளணுமின்னு நான் சொல்லல்லே! வருசம் முப்பதாச்சு, இன்னிக்கும் என் இடது தோள்பட்டை ஒரு மாதிரிதான்.”

‘‘அது யாரு தப்பு?’’ என்று மதுரை, மற்றவர்களைப் பார்த்துக் கண்ணடித்துக் கொண்டு கேட்டான்.

‘‘அட, அது பெரிய கதை. போற போக்கிலே சொல்றேனே. எங்கே, ஒரு கைகுடுங்க பாக்கலாம்,’’ என்று சொல்லிக்கொண்டே அண்ணாமலைத் தாத்தா, வண்டியில் ஏறப் பிரயத்தனம் செய்தான்.

வெங்கடாசலமும் மதுரையும் அவனை மெள்ளத் தூக்கி விட்டார்கள். எல்லாரும் வண்டியில் ஏறின பிறகு, அண்ணாமலைத் தாத்தா கோணியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டு, கொஞ்சம் முணுமுணுக்கத் தொடங்கினான். ‘‘வக்கெல் போட்டது போதாதுபோல் இருக்குதே,’’ என்றான்.

‘‘வக்கெலுக்குக் குறவில்லை, தாத்தா. சரியா நெரவாமெ விட்டுட்டான். என்னிடத்துக்கு நீங்க வாங்க, நான் அங்கே வந்திடுறேன்,’’ என்று மதுரை, மெதுவாக அண்ணாமலைத் தாத்தாவை இடம் மாற்றினான்.

‘‘இங்கே மெத்தையாட்டம் இருக்குதுடாப்பா,’’ என்று தாத்தா சந்தோஷப்பட்டான். வண்டியும் செல்லத் தொடங்கிற்று.

‘‘சரி, இப்போ, ஒங்க கதையைச் சொல்லுங்க,’’ என்று மதுரை தூண்டினான்.

‘‘அது பளயகாலத்துச் சமாச்சாரம். ஆனா வண்டி ஏர்றபோ தெல்லாம் ஞாபகம் வருது. உங்களுக்குப் பில்லூரு கந்தனைத் தெரியுமல்ல? — அட, அதுதான், அந்தக் கிளவன் — எம்பது வயசுக்கு மேல சீரணமாகல்லேன்னிட்டு, ஒரு பெருங்காயம் விக்கிற மலையாளத்தான் கிட்ட மருந்தை வாங்கித் தின்னிட்டு சாவலே?’’

எல்லாரும் ‘ஊம்’ கொட்டினார்கள். ஆனால், வீரப்பன் மட்டும் வாய் தவறி உளறினான்.

“தாத்தா ஒரு வயிசுப்பிள்ளை போலத்தான் பேசறாரு.”

“ஏய், அப்போ நான் ஒரு வயிசுப்பிள்ளைதான். ஊம்..ஊம்.. மறந்திடதே,” என்று தாத்தா முறைப்பாகச் சொன்னான்.

“ஏன் இப்போமட்டும் என்ன? எளுபத்தாறுதானே ஆவுது? இல்லை தாத்தா?” என்றான் மதுரை.

“ஏது, பங்குனி வந்தா எளுபத்திநாலு முடியுது.”

“அப்போ, ஒங்களுக்கும் பில்லுரு கந்தனுக்கும் ஜோடி ஏது — இது கெடக்குது, நீங்க கதையைச் சொல்லுங்க,” என்று சொல்லிக்கொண்டே மதுரை, வீரப்பனை மெள்ளக் கிள்ளினான்.

தாத்தா மறுபடியும் ஆரம்பித்தான்: “நாங்களெல்லாம் சப்பாணி கலியாணத்துக்குக் கண்டனூரு போய்க்கிட்டு இருந்தோம். எல்லாம் ஆறு ஊட்டுக்காரங்க. எட்டு வண்டி ரொம்பிப்போச்சு. நான் இருந்த வண்டிதான் கடைசி. அதை அந்தப் பில்லூருக் கிளவன் ஓட்டிக்கிட்டு இருந்தன். வண்டியிலே நானும் இன்னும் நாலு அஞ்சுபேரும் இருந்தோம். நல்ல காலம், அதிலே பொம்பிள்ளைங்க யாருமில்லை. கண்டனூர் பாலத்துக்கிட்டே வந்திட்டோம். அந்த எறக்கத்திலே எறங்கப் போறோம். அப்போ, எங்களுக்குப் பொறத்தியிலே ஒரே கூச்சல். அது என்ன எளவோன்னு சும்மா இருந்திட்டோம். அப்பாலே எங்களைத்தான் கூப்பிடுறாங் கோன்னிட்டுத் தெரிஞ்சுது. ‘ஏ கோடி வண்டி! உன் சக்கரம்! உன் சக்கரம்!’ இன்னு காதுலே நல்லாப் பட்டுது. கொஞ்சம் புத்தியிருந்தவனாயிருந்தா, அவன் வண்டியை நிறுத்திட்டு என்னான்னு பாத்திருப்பான். அதுக்குப் பதிலா, அந்த மூளைகெட்டவன் மாட்டு முதுகுலே கையை ஊணிக்கிட்டுத் திரும்பிப் பாத்தான். அந்த மாடு, கூச்சப்பட்டுக்கிட்டுச் சட்டுனு வெலகிக்கிச்சு. எங்க எடது சக்கரம், கடையாணி இல்லாதையே ரொம்ப தூரம் வந்திருக்குது. மாடு சட்டுனு விலகிக்கவே, அது உடனே களண்டு விளுந்திட்டது. கந்தன் கீளே வுளுந்து உருண்டுகிட்டே ஆத்துமணலிலே போய் விளுந்தான். நான் கீளே விளுந்து சக்கரத்துக்கும்

ஏர்க்காலுக்கும் நடுவிலே மாட்டிக் கிட்டேன். வண்டியிலே இருந்த கும்பல் எல்லாம் புளிமூட்டை யாட்டம் என்மேலே சாஞ்சிட்டுது. தட்டுக்கிட்டுத் தடுமாறிக்கிட்டு உள்காயம் வெளிகாயத்தோடே நாங்க ஏந்திருச்சி வந்தா, அந்தப் பைத்திகாரப் பய எங்களைப் பாத்து இடி இடின்னு சிரிக்கிறான்!''

''அவன் எப்பவும் கொஞ்சம் தமாசுக்காரன்தான்,'' என்று வெங் கடாசலம் சிரித்தான். ''ஆனால், நம்ம கடையாணிங்க எப்பவும் களண்டு வாராது, தாத்தா. அதுக்கு ரெண்டு பக்கத்திலேயும் வளையம் போட்டிருக்கேன். பாத்தீங்களா?''

''பாத்தேன். அது நல்ல உபாயம்,'' என்று அண்ணாமலைக் கிழவன் மெச்சிக்கொண்டான். பிறகு படுத்துக்கொள்வதற்கு வழி தேடிக்கொண்டான்.

யாதோர் இடையூறுமின்றி, அவர்கள் கோழி கூவும் பொழுதே முசிரி வந்து சேர்ந்தார்கள். வண்டியை ஆற்றங்கரையோரம் இருந்த சத்திரத்தின் அருகில் அவிழ்த்து விட்டார்கள். மெள்ள இருட்டுக் கலைந்து கிழக்கு வெளுத்துக் கொண்டிருந்தது. ஆனால், அதற்குள்ளாகவே அநேகர் ஸ்நானத்திற்கு வந்துவிட்டனர். படித்துறைகள் கும்பல் நிறைந்தே இருந்தன. அங்கே பலர் துணிகளைப் படியில் அடித்துத் துவைக்கிறது, துணிகளைக் கும்முகிறது, அவைகளைத் தண்ணீரில் அலசுகிறது, தேவநாமங்களைச் சொல்லிக்கொண்டு நீரில் முழுகுகிறது, விழுப்பு ஜலத்தை மேலே தெறிக்க வேண்டாமென்று மடியோடிருப்பவர்கள் கத்துவது — எல்லாம் சேர்ந்து ஒரே சந்தடியாயிருந்தன. வேனிற் காலம் ஆரம்பித்துவிட்டபடியால், ஆற்றில் இரு கரையோரங்களில் மட்டும் ஜலம் வேகமாகவும், கலக்கமற்றுச் சுத்தமாகவும் ஓடிக்கொண்டிருந்தது. ஆனால், அக்கரையில் தண்ணீர் ஓடுவது இக்கரையிலிருந்து காணப்படவில்லை. பார்ப்பதற்கு ஒரே மணற்காடாகத் தோன்றியது. அங்குமிங்கும் சில நாணல் புதர்கள் மட்டும் வளர்ந்திருந்தன. படித்துறைக்குச் சற்று மேல்புறத்தில், ஸ்வாமிகள் வீற்றிருப்பதற்காக மணலில் அநேகம் பந்தல்கள் போடப்பட்டிருந்தன. எங்கும் இடுப்பு ஜலத்திற்குமேல் ஆழமில்லாததால், அநேகர் நீரைத் தாண்டி உலர்ந்த மணலில் தாராளமாக உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்தனர்.

வெங்கடாசலமும் அவன் சிநேதிதர்களும் இன்னும் பல்கூடத் தேய்க்காததால், அங்கே ஆசாரத்துடன் ஸ்நானம் செய்துகொண்டிருப்பவர்களுக்குத் தொந்தரவு கொடுக்க அவர்களுக்கு இஷ்டமில்லை. ஆதலால், படித்துறைக்குக் கீழ்ப்புறமாக அரைபர்லாங்கு ஆற்றங்கரையோரமே சென்று ஆற்றில் இறங்கினார்கள். அவ்வளவு மேட்டிலிருந்து பள்ளத்திற்கு இறங்கும்போது, அண்ணாமலைத் தாத்தாவைக் குட்டிக்கரணம்போடாமல் இருக்கும் படி பார்த்துக்கொள்வது அவர்களுக்குப் பெரிய வேலையாயிற்று.

தந்த சுத்தி செய்துகொண்டு, குளிர்ந்த நீரோட்டத்தில் ஆனந்தமாக ஸ்நானம் செய்தார்கள். தேகத்திற்குப் புத்துணர்ச்சியும் மனத்திற்கு உற்சாகமும் உள்ளத்திற்கு அளவற்ற சாந்தியும் எவ்வாறு கிடைக்குமென்பது, சுத்த நீரோட்டத்தில் தலை அமிழ்ந்து நீராடுகிறவர்களுக்கே தெரியும். வெங்கடாசலத்திற்கும் அவன் சிநேகிதர்களுக்கும் தண்ணீரை விட்டுக் கிளம்ப இஷ்டமேயில்லை. வெகு நேரம் தேய்த்துக் குளித்தார்கள். பிறகு விபூதியணிந்து, மணற் கரைக்குச் சென்று துணிகளை இறுகப் பிழிந்து காற்றாட உலர்த்திக் கொண்டார்கள். இதற்குள் சூரியோதயமாய்விட்டது. சில்லறை வியாபாரிகள் மணலில் தங்களுடைய கூடாரங்களை அடிக்க ஆரம்பித்தார்கள். சீக்கிரத்தில், பல கிராமங்களிலிருந்து ஸ்வாமிகள் பல்லக்குகளில் மேளவாத்தியங்களுடன் வர ஆரம்பித்தன. பின்னும் இரண்டு மணி நேரத்திற்குள் ஆற்று மணலில், எள்ளுப் போட்டால் எள் விழாதபடி, தேங்காய் உடைப்பவர்களும் சூடம் கொளுத்துகிறவர்களும் சாம்பிராணித் தூபம் போடுகிறவர்களுமாகப் பக்தகோடிகள் கூடிவிட்டார்கள்.

அண்ணாமலைத் தாத்தா, ஒவ்வொரு பந்தலிலும் புகுந்து ஒவ்வொரு ஸ்வாமியிடத்திலும் அரைமணிக்குக் குறையாமல் தொழுதான். யார் என்ன சொன்னாலும் கேட்கவில்லை. அவன் தொழுது முடிப்பதற்குள் மணி பத்தாய்விட்டது. வெயிலும் ஏறி விட்டது. வீரப்பனுக்கு எங்கேயாவது நிழலில்போய் உட்கார்ந்தாற் போதும் போல் ஆகிவிட்டது. “என்ன தாத்தா, எல்லாம் கும்பிட்டாச்சா, இன்னும் ஏதாவது பாக்கியிருக்குதா?” என்றான்.

“நீ அவ்வள ஆத்திரப்படக்கூடாது, வீரப்பா. உனக்கு வேக்கிறதும் நாக்கு வாங்கறதும் பாத்தா, என்னைக் காட்டிலும் உன்னைத் தான் கௌவனின்னு எண்ணிப்பாங்க,” என்றான் அண்ணாமலைத் தாத்தா.

“அவனை மட்டும் இல்லை; எங்களைக்கூடத்தான்,” என்றான் மதுரை.

“அதுலே சந்தேகமென்ன?” என்று தாத்தா அழுத்தமாகச் சொன்னான். “எத்தினி ஆயிரம்பேரு, பத்து இருபது கல்லு நடந்து வந்திருக்காங்க தெரியுமா இங்கே? பெரிய பூசை ஆகிறவரில்லியும் யாரும் போகமாட்டாங்க. வருசத்துக்கு ஒருநாள். கொஞ்சம் கஷ்டப்பட்டத்தான் என்ன போச்சு? நாம் நிதமா வரப்போகிறோம்? பெரிய பூசை ஆனால், திருவிளாவும் முடிஞ்சாப்போலத்தான்.”

“என்ன தாத்தா, தமாசு எல்லாம் ரவைக்குத்தானே?” என்றான் மதுரை.

“ஓ. நீங்கெல்லாம் தமாசுதான் பாக்க வந்தீங்களா?”

“தமாசு, சாமி இரண்டும் தாத்தா,” என்றான் வெங்கடாசலம்.

“அது ரெண்டும் எப்பவும் ஒத்துப்போவாது,” என்று தாத்தா கண்டிப்பாய்ச் சொன்னான்.

“அது எல்லாம் பளய பேச்சு, தாத்தா. தமாசுலே என்ன தப்பு?”

“தப்போ தப்பில்லையோ, நான் ஒங்களோட வரமுடியாது. எனக்குத்தான் எளவு, இருட்டினாக் கண்ணுத்தெரியாதே,” என்று மிகக் குறைவுடன் தாத்தா சொன்னான்.

எல்லாரும் சிரித்தார்கள்.

“சரி, நான் வண்டியிலேயே படுத்திருக்கேன். நீங்க வேடிக்கை யெல்லாம் பாத்திட்டு வாங்க. ஆனால், சாக்கிரதை! வம்புலே கிம்புலே

மாட்டிக்காதெங்கோ,'' என்று கண்ணடித்துக்கொண்டு தாத்தா சொன்னான்.

இரவு சுமார் ஒன்பது மணியிருக்கும். மேகமற்ற வானத்தில் பூரண சந்திரன் ஏகாதிபத்தியம் வகித்திருந்தான். ஆற்று மணலில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடிக் களிப்பாகக் காலங்கழித்தனர். அவர்களுக்கு உதவியாகக் குளிர்ந்த தென்றல் வீசிற்று. ஆனால் காலைபோல், கூடினவர்கள் அனைவரும் பக்தர்கள் அல்ல. பல விதமானவர்களும் கலந்திருந்தனர். எங்கே பார்த்தாலும் பஜனைக் கூட்டங்கள்தான். எல்லாம் ஒரே ஆட்டமும் பாட்டமுமாயிருந்தது. இது ஒரு புறம். மற்றொரு புறத்தில், மிட்டாய்க் கடைகளும் பொம்மைக்கடைகளும் பழக்கடைகளும், வியாபாரத்தில் மும்முரமாக ஈடுபட்டிருந்தன. மூலைக்கு மூலை பலாப்பழச் சுளைகளை விற்றுக்கொண்டிருந்ததால், அவ்விடமெல்லாம் ஒரே பலாப்பழ வாசனையாயிருந்தது. குதிரை, நாற்காலி, தொட்டில் முதலிய இராட்டினங்களும் அங்கங்கே அமைக்கப்பட்டிருக்கின்றன. இரைச்சலுக்குக் குறைவே இல்லை. குழந்தைகளும் சிறுவர்களும் ஊதல்களை வாங்கிக்கொண்டு, காது துளைத்துப் போகும்படி ஊதித்தள்ளினார்கள். இந்தச் சந்தடிக்கு வெகுதூரத்திற்கப்பால் சிலர், கும்பல் கும்பலாக உட்கார்ந்து கொண்டு சீட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்கள், சிரிப்பும் பரிகாசமுமாகக் காலம் கழிப்பது நன்கு விளங்கிற்று. அவர்களுக்குச் சற்றுத் தூரத்தில், மற்றும் சிலர் இதே காரியத்தில் ஆழ்ந்திருந்தார்கள். ஆனால், அந்த ஆட்டக்காரர்கள் மௌனம் சாதித்துக் கருமமே கண்ணாயிருந்தார்கள். அவர்களுக்குக் குறி வெறும் விளையாட்டல்ல வென்று நன்றாய்ப் புலப்பட்டது. அதற்கேற்றவாறு அவர்கள் நடை உடைகளிலிருந்து, பணத்தின் அருமையை அறியாதவர்களென்றும் தெரிந்தது. வெங்கடாசலமும் அவன் சிநேகிதர்களும் சாவகாசமாக ஒவ்வொன்றாகப் பார்த்துக்கொண்டு வரும்போது, இந்தக் கூட்டத்தண்டையில் வந்தவுடன், ஒரே மனதாய் எல்லாரும் 'சட்' என்று நின்றார்கள். ஏனெனில், இருபது வருஷ மாய்க் காணாத குளத்தூர்க் கோவிந்தனை அங்கே கண்டார்கள். காலத்தின் கோளாற்றை யார் அறியக்கூடும்? செல்வப் பெருமை அவனைச் சுற்றி வீசியது. ஆனால் எவ்வளவு தனிகனாய் விட்டபோதிலும், அவன் மேலுதட்டுப் பிளப்பு முன்போலத்தான் காணப்பட்டது.

“அவன் உடம்பெல்லாம் நகையா இருக்குதப்பா. அந்தக் கடுக்கன், மோதிரம் எல்லாம் என்ன அப்படி மின்னுதே!” என்றான் வீரப்பன்.

“அவன் பட்டுத்துணியைப் போட்டிருக்கிற தினுசைப் பாத்தா, அதுலேயே பொறந்து வளந்தாப்போலிருக்குதே,” என்றான் மதுரை, புன்சிரிப்புடன்.

“இடுப்புத்துணியோடு பினாங்குக்குக் கூலிவேலைக்கு ஓடினாங்கறதை மறந்திடாதே,” என்று வீரப்பன் ஞாபகப் படுத்தினான்.

“இவனைப்போலே இருக்கிறவனெல்லாம் துட்டுச் சம்பாரிக்கணுமின்னா, அங்கே பணம் தெருவிலே கொட்டிக் கெடக்குதா?” என்று மதுரை, பொறாமையை அடக்கமுடியாமல் சொன்னான்.

“கங்காணித் தொளிலு அவ்வளவும் பணமில்லை? ஆளுங்களைப் பிடிச்சு ஆடுமாடாட்டம் வேலை வாங்கவேண்டியதுதானே? ஏளப்பட்டவன் வவுத்திலே அடிச்சுத் துட்டைப் பிடுங்கிக்கிறாங்க, பின்னென்னா? சரி, அவன் எப்படிப் பணம் சம்பாதிச்சா நமக்கென்ன? அப்பாவுவைப் பத்தி ஏதாவது சமாசாரம் தெரியுமான்னு கேக்கலாமின்னு எனக்கு — அவுங்க ரெண்டுபேரும் சேந்து பினாங்கு போனாங்க, தெரியுமல்ல?” என்றான் வெங்கடாசலம். மற்றவர்கள் தலையை ஆட்டினார்கள். வெகு காலத்திற்கு முன்னால் அப்பாவு திடீரென்று மறைந்ததும், அதன் பின் அவன் கடன்காரர்கள் செய்த குழப்பமும் அவர்களுக்கு நினைவு வந்தன. அந்நினைவு அவர்களுக்கே விசனத்தை உண்டுபண்ணினதென்றால், வெங்கடாசலத்தைப் பற்றிக் கேட்கவேண்டியதில்லை.

“வேலனுக்கு, நீ சொந்தத் தகப்பன் இல்லேங்கிற சந்தேகம் எப்பவாவது வந்திருக்குமா?” என்று மதுரை கேட்டான்.

“சொல்றதுக்கில்லை. ஆனால், சொந்தக் கொளந்தையாயிருந்தா மட்டும் இதுக்கு மேலே என்ன பண்ணிடுவோம்? நான்கூட அவ்வளவு இல்லே, எங்க ஊட்டுக்காரி அவனைக் கொஞ்ச நேரம் பாக்காட்டி செத்துப்போவ. வேலுவும்

அப்படித்தான். இருந்தாலும், ஊரிலே வாயாடிக் களுதைக எவ்வளவு இருக்கும்; தெரிஞ்சுக்கிட்டு இருந்தாலும் இருப்பான். நாளுக்குநாள் பெரியவன் ஆறான். இப்போ, அதைப்பத்தி என்ன? அவன் உசிரெல்லாம் எங்கமேலே. தெரிஞ்சுக்கிட்டாலும் சட்டை பண்ணமாட்டான் — பொறு. அவங்க ஆட்டம் முடிஞ்சு போச்சுப் போலிருக்குதே,'' என்றான் வெங்கடாசலம், அந்தக் கும்பல் கலைவதைப் பார்த்து.

''தோக்கறகுக்கு ஒண்ணும் இல்லையாங்காட்டியும்!'' என்றான் மதுரை.

அதைக் காதில் போட்டுக்கொள்ளாமல், வெங்கடாசலம் கோவிந்தன் இருக்குமிடத்திற்கு விரைவாகச் சென்றான். கோவிந்தன் எழுந்திருக்காமல் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். வெங்கடாசலம் கும்பிட்டான். ஆனால் கோவிந்தன், வெங்கடாசலத்தை உடனே தெரிந்து கொள்ளமுடியவில்லை; மெள்ள மெள்ளத்தான் ஞாபகம் வந்தது. வெங்கடாலம் இன்னான் என்று தெரிந்து கொண்டவுடன், கோவிந்தன் மிகவும் சாதுர்யமாக, தனக்குப் பார்வையும் ஞாபகசக்தியும் குறைந்து விட்டதென்று சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். இதற்குள் மதுரையும் வீரப்பனும் வந்து சேர்ந்தார்கள். பிறகு அவர்கள் பிற்கால விஷயங்களைப் பற்றியும், சென்ற இருபது வருஷங்களுக்குள் கிராமத்தில் உண்டான மாறுபாடுகளைப் பற்றியும் உற்சாகத்துடன் பேசிக் கொண்டிருந்தார்கள். கோவிந்தனும், தனக்குத் தங்கப்புதையல் போல் கிடைத்த மலேயா தேசத்தைப் பற்றி, வெகு பெருமையாய்ப் பேசினான். இச்சமயத்தில், வெங்கடாசலம் அப்பாவுவைப் பற்றி விசாரித்தான்.

''அப்பாவுவா? — யார் அது? — ஓ தெரிந்தது, தெரிந்தது. அந்தத் தும்பலம் ஆள்தானே? உங்களுக்கு ரொம்ப சிநேகிதனென்று சொன்னான். நீங்ககூட அவன் பிள்ளையை வளர்த்து வருகிறீர்களல்ல?''

''ஆமாம்,'' என்று வெங்கடாசலம் தலையை ஆட்டினான். வாழ்வுக்கு ஏற்றாற்போல் வந்த பேச்சுத் தோரணையைக் கண்டு அவன் வியந்தான்.

ஒருவேளை பினாங்கில் படிப்புக்கூடக் கற்றுக் கொண்டானோ என்ற சந்தேகமும் வெங்கடாசலத்திற்கு வந்தது.

மோவாய்க்கட்டையைத் தடவிக்கொண்டு, கோவிந்தன் மறு படியும் இழுத்தாற்போல் பேசத் தொடங்கினான். ‘‘அவன் உருப்பட்டதாக எனக்குத் தெரியவில்லை. நான் கங்காணியான பிறகு கூட, அவன் வெகுநாள் வரையில் கூலியாகவே உழைத்துக் கொண்டிருந்தான். ஆனால், அதற்கு அவனேதான் காரணம். அவன் ஒன்றிலும் பட்டும்படாமலும் இருப்பான். மதிகெட்டுப் போய் விட்டதோ என்றுகூட நம்பும்படி இருந்தது — பிரசவமான சில தினங்களுக்கெல்லாம், அவன் பெண்டாட்டிகூட இறந்துவிட்டாளல்ல? (வெங்கடாசலம் தலையை ஆட்டினான்.) இவ்வளவு கஷ்டங்களோடு அவள் சாவும் நேர்ந்தது, அவன் மூளையைக் கலக்கி விட்டதென்று நினைக்கிறேன்,’’ என்றான் கோவிந்தக் கங்காணி.

‘‘இல்லையே. அடிக்கடி கடுதாசி எளுதிக்கிட்டு இருப்பானே. இப்பத்தான், நாலு அஞ்சு வருசமாகப் பேச்சு மூச்சு இல்லாமே இருக்கான். பாவி, செத்தானோ, பொளச்சானோன்னுகூடத் தெரியில்லியே. நாங்க எவ்வளவோ நேசமா, அண்ணன் தம்பிபோல இருந்தோங்க. அவன் சொகமா இருக்கிறான் என்கிற சேதி கேட்டா, அதுவே எனக்கு போதும்,’’ என்று தன் உருக்கத்தை மறைக்க முடியாமல், வெங்கடாசலம் மனமுருகிச் சொன்னான்.

‘‘ஆ! இப்பொழுது எனக்கு ஞாபகம் வருகிறது! நாலைந்து வருஷங்களுக்குமுன், அவன் மலேயாவைவிட்டுப் போர்னியோ தீவுக்குச் சென்றான். அது ஒரு கதை. அவன் ஒரு டச்சுப் பிரபுவின் கரும்புத்தோட்டத்திலே வேலை செய்து கொண்டிருந்தான். அந்த ஐரோப்பியன் மிகவும் நல்லவனாயிருந்தாலும், அவனுக்குப் பொல்லாத முன்கோபம். திட்ட ஆரம்பித்தால் இன்னதுதான் அவன் வாயில் வருமென்பதில்லை. ஒருநாள், கோபவெறியில் ஒரு மேஸ்திரியை வெகு அசிங்கமாகத் திட்டினான். அந்த மேஸ்திரி கொஞ்சம் முரடன். உடனே, இடுப்பிலிருந்த கத்தியை எடுத்து ஐரோப்பியனைக் குத்தப் போனான். அப்பொழுது, அப்பாவு பக்கத்தில் இருந்தான். உடனே குறுக்கே விழுந்து தடுத்தான். டச்சுக்காரன் மேல்

விழவேண்டிய குத்து, அப்பாவு தோள்பட்டையில் விழுந்தது. அந்த ஐரோப்பியன் உயிர் தப்பிக்கொண்டான். அப்பாவு ஒரு மாதம் ஆஸ்பத்திரியிலிருந்து பிழைத்து வந்தான். ஆனால், அந்த ஐரோப்பியன் மட்டும் தனக்கு அப்பாவு செய்த உபகாரத்தை மறக்கவில்லை. அவனுக்குப் போர்னியோத் தீவில் லட்சக்கணக்கான ஆஸ்தி இருந்தது. அவனுக்குப் பிள்ளை குட்டியும் இல்லை. அவனுக்குக் கலியாணமே ஆகவில்லை. அவன் அப்பாவுவைத் தன்னுடன் போர்னியோவுக்கு வந்துவிடச் சொன்னான். கஷ்டப்படாமல் சுகமாய் ஜீவனம் செய்வதற்குத் தகுந்த ஏற்பாடுகளையும் செய்வதாகச் சொன்னான். அப்பாவு ஒப்புக்கொண்டு, அந்த டச்சுப் பிரபுவோடு போர்னியோவுக்குப் போனான். அவனுக்கு நல்ல காலம் பிறந்தது என்று எல்லோரும் நினைத்தார்கள். அதன்பிறகு அவன் சங்கதியே யாருக்கும் தெரியாது,'' என்று கோவிந்தக் கங்காணி சொல்லி முடித்தான்.

''தலைவிதி எப்படியெல்லாம் பண்ணுது!'' என்று வெங்கடாசலம் பெருமூச்சுவிட்டான். ''அங்கே போனாதான், கடுதாசி எளுதக் கூடாதா? பொளச்சிருக்கான்னுகூட நெனைக்கிறதுக்கில்லையே!''

தங்க டப்பியிலிருந்து பொடி போட்டுக்கொண்டு, கங்காணி சொன்னான்: ''அப்படியெல்லாம் ஒன்றும் இராது. அது வேறு விதமாயிருக்கும். அந்த வெள்ளைக்காரன் வேண்டிய பணத்தைக் கொடுத்திருப்பான். கையிலே பணம் ஏறிவிட்டால், எல்லாக் கெட்ட வழக்கங்களும் வருமல்ல. அந்த ஊரோ சொல்ல வேண்டியதில்லை. ஒரு சாமியார் போனாலும் கெட்டுப் போவார். யார் கண்டார்கள்? அந்த ஊர்ப் பெண் ஒருத்தியைக் கட்டிக் கொண்டு இருக்கலாம்,'' என்று கண்ணைச் சிமிட்டிச் சொன்னான்.

''சே.சே! அவன் அப்படியாக்கொத்தவனல்ல — ஆனால், இந்தக் காலத்திலே என்ன வேண்ணா நடக்கும்,'' என்று சொல்லிக் கங்காணிக்கு வந்தனமளித்து, வெங்கடாசலம் விடைபெற்றுக் கொண்டான்.

வெங்கடாசலத்தின் சிரித்த முகத்தில் துயரம் பாய்ந்துவிட்டது. தன் சிநேகிதனுடைய துர்க்கதியிலிருந்து, இல்வாழ்க்கையின் ஆட்ட ஓட்டங்களுக்கு

ஏதாவது நிலையுண்டாவென்று அவன் சிந்தித்துக்கொண்டு மௌனமாக நடந்தான். அவன் மனம் படும் கஷ்டத்தை அவன் சிநேகிதர்கள் அறிந்தார்கள். அவர்கள் சம்பாஷணையை மாற்ற முயன்றும் பயன்படவில்லை. பிறகு நேரமாய்விட்டபடியால், தூக்கத்தைக் கெடுத்துக் கொள்ளக் கூடாதென்று சொல்லி, வெங்கடாசலத்தை அழைத்துக்கொண்டு, அவர்கள் தாங்கள் இறங்கின இடத்திற்குத் திரும்பினார்கள்.

# 6. சிறு பொறி

சிலர் எக்காரியத்தைச் செய்தாலும் அது அவர்களுக்குக் கைகூடி வருகிறது; மற்றும் சிலர், எதைத் தொட்டாலும் அது நாசமாய் விடுகிறது. முன் வகுப்பினர்க்கு அநுகூலமாகச் சந்தர்ப்பங்களும் உதவி செய்கின்றன. பின் வகுப்பினர்க்குப் பிரதிகூலமாக, அசந்தர்ப்பங்களும் பாழடிக்கின்றன. வெங்கடாசலத்தின் கை கொள்ளிக் கை என்பதில் சந்தேகமில்லை. புதுவிஷயங்களைக் கிரகிப்பதில் அவன் சாமர்த்தியமுள்ளவன்; ஆனால், எதையும் நீடித்துச் செய்ய மாட்டான். விவசாயத்தில் நாளைக்கு ஒரு புதுவழியைச் செய்ய யத்தனிப்பான். சீக்கிரத்தில் பலன் பெறாவிட்டால் அம்முயற்சியை அவன் அதோடு விட்டுவிடுவான். இதனால் அவனுக்குக் கஷ்டமும் நஷ்டமுமே தவிர வேறொன்றும் இல்லை. ஆனால், அவன் பிரயத்தனங்களிலிருந்து பிறர் லாபமுறைகளைக் கற்றுக் கொண்டார்கள்.

கழுகுப்பட்டியில் 'சீட்டுக்கிழித்தான் கடலை' பயிராவதைப் பார்த்த பிறகு, வெங்கடாசலத்திற்கு உடனே தன் புன்செய் நாற்பது ஏக்கர்களிலும் அதை விளைவிக்க வேண்டுமென்ற ஆசை பிறந்தது. ஆனால், செய்நேர்த்திக்கு அவனிடம் பணமில்லை. குறைந் தது இரண்டாயிரமாவது தேவையாயிருக்கும். அவனிடத்தில் இரு நூறுகூட இல்லை. கேட்காத இடங்களிளெல்லாம் அவன் கேட்டுப் பார்த்தான். பணம் பெயரவில்லை. இம்மாதிரி அவசரங்களுக்கு அவனுக்குச் சகாயம் செய்பவர் ரெட்டியார் ஒருவரே; அவரும் ஊரில் இல்லை. பர்மாதேசத்தில் சுற்றிக் கொண்டிருந் தார். அவர் மானேஜருக்கு, ரெட்டியாரைக் கேட்காமல் கடன் கொடுக்க இஷ்டமில்லை. ரெட்டியாருக்கு எழுதிப் பதில் வருவதற்குள் இரண்டொரு மாதமாய் விடும். பிறகு, மற்றொரு வருஷம் காக்கவேண்டியிருக்கும்! வெங்கடாசலம் தன் ஆத்திரத்தில், இதைக் காட்டிலும் பெரிய விபத்துத் தன் வாழ்நாளில் எப்பொழு தும் சம்பவிக்காதென்று நினைத்துக் கொண்டான்.

அவன் இம்மாதிரி தவித்துக்கொண்டிருக்கும்போது, "மீனாக்ஷியைக் கேட்கக்கூடாதா?" என்று மதுரை யோசனை சொன்னான்.

வெங்கடாசலத்திற்குச் சிரிப்பு வந்தது. அந்த எண்ணமே அவனுக்குப் பிறக்கவில்லை. அவளுடைய நடத்தைகள் அவனுக்கு எப்பொழுதும் பிடியா. அதில் இன்னும் முக்கியமான விஷயமென்னவென்றால், அவன் தன்னை அவ்வாறு வெறுப்பது, மீனாக்ஷிக்கும் நன்றாகத் தெரியும். ஆனால், அவளிடம் பணம் எப்பொழுதும் இருக்கும். அவன் எண்ணம் நிறைவேறுவதற்குச் சகாயம் பண்ணக்கூடியவள், கிராமத்தில் அவள் ஒருத்தியே. அவளைச் சட்டை பண்ணி எப்படிக் கேட்பது? அப்படிக் கேட்டும் இல்லையென்று சொல்லிவிட்டால், எவ்வளவு அவமானமா யிருக்கும்?

வெங்கடாசலத்திற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

அவன் இஷ்டப்பட்டால், மதுரை எப்படியாவது முடித்துக் கொடுப்பதாகச் சொன்னான். ஆனால், வெங்கடசாலத்துக்கு அந்த வார்த்தையில் நம்பிக்கையில்லை. மதுரை சாமர்த்தியசாலிதான். மீனாக்ஷி யமகாதகியாயிற்றே. மதுரையைப்போல் பத்துப்பேர்களை விழுங்கிவிடுவாளே. ஆகட்டும் என்று முதலில் சொல்லி, பிறகு ஊரெல்லாம் அச்சமாச்சாரத்தைப் பரப்பிக் கடைசியில் இல்லை யென்று சொன்னாலும் சொல்லுவாள். அவள் அவ்வளவு செய்யக்கூடியவள்!

இரண்டு மூன்று தினங்கள், வெங்கடாசலம் தீர்க்காலோசனை செய்தான். அவளை விட்டால் வேறு விதியில்லை என்று பட்டது. பிறகு, மதுரை சொற்படி நடக்கத்தான் வேண்டுமென்று ஒருவாறு தீர்மானித்துக்கொண்டான். ஆனால், மதுரையை மட்டும் வெகு தந்திரமாக, வார்த்தையோடு வார்த்தையாய் விஷயத்தை எடுக்கும்படி அவன் கேட்டுக்கொண்டான். ஏனென்றால், ஒருகால் அவள் இசையாவிட்டாலும் தனக்கு அதிக அகௌரவம் வரக் கூடாதென்பதே அவன் கருத்து.

இந்தப் பயத்திற்கு யாதொரு காரணமுமில்லையென்பது, மதுரையினுடைய நிச்சயமான நம்பிக்கை.

கிராமத்திற்குள் எவ்வளவோ சாமர்தியசாலியாயிருந்த போதிலும், மதுரைக்கு அவன் தரித்திர தசை மட்டும் நீங்கவில்லை. பார்வைக்கு ஒடிந்து விழுவதுபோல் இருப்பான். அவன் குழந்தை குட்டிகளெல்லாரும் அப்படித்தான். ஆகார விஷயங்களில், வஞ்சனையற்றுச் சாப்பிடுவான். அவனுக்கு இஷ்டமில்லாத உணவு எதுவுமே இல்லை. அது ஒருவேளை அதிகமாயிருக்குமோ என்ற கவலையும் இல்லை. அவன் அநேகமாய் வெங்கடாசலத்தின் ஆதரவினால் ஜீவித்து வந்தான். அதற்கு அவன் இருதயபூர்வமாக நன்றி பாராட்டி வந்தான். ஆதலால், வெங்கடாசலத்திற்குக் கஷ்ட தசை வரவர, அவனுக்கு மனம் நொந்தது. சில காலத்திற்கெல்லாம், வெங்கடாசலத்தினால் தனக்கு யாதோர் உதவியும் ஏற்பட மாட்டாதென்பதை நன்குணர்ந்தான். வாழ்நாளெல்லாம் தக்கவர்க்குத் தக்கபடி இனிய மொழிகளைப் பேசிக் காலங்கழித்தவனாதலால், கஷ்டமான வேலை ஒன்றும் தன்னால் இனிமேல் செய்யமுடியாதென்பதும் அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆகையினால், ஊரிலுள்ள இதர பண்ணைக்காரர்களிடம் வெகு நல்லதனமாகவே நடந்து கொள்ள வேண்டுமென்று நிச்சயித்துக் கொண் டான். அதிலும், மீனாக்ஷியோடும் மாயாண்டியோடும் மிகவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்று அவனுக்குப்பட்டது. நாளுக்கு நாள் அவர்கள் கை உயர்ந்து கொண்டே வந்தது. அவன், மாயாண்டியை அநேக சமயங்களில் அசடாக்கினது உண்மைதான். உண்மையிலேயே மாயாண்டி மூளையற்றவனாகையால், அவனைத் தட்டிக்கொடுத்துச் சரிப்படுத்துவது அசாத்தியமான வேலையல்லவென்று, தன்னைத்தானே மதுரை சமாளித்துக் கொண்டான்.

இவைகளையெல்லாம் உத்தேசித்து, மீனாக்ஷியோடு பேசி உறவாட அவகாசம் எப்பொழுது வருமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

அடுத்த வாரம் ஞாயிற்றுக்கிழமைத் தினம், ஊருக்கு அப்பால் ஒருமைல் தூரத்திலிருக்கும் இலுப்பைத் தோப்பில், அவர்கள் தங்கள் குலதெய்வத்திற்குப் பொங்கலிட்டுப் படைப்பதாக அவனுக்குத் தெரியவந்தது. அன்றைத் தினம், தற்செயலாக வந்தவன்போல அவர்கள் பொங்கலிடும் இடத்திற்குச் சென்றான்.

“ஒ, நீங்களா பொங்கலிடுகிறீங்க?” என்றான் மதுரை, மலர்ந்த முகத்துடன். “நான் கன்னிப்பாளையம் போய்வாறேன். வாய்க்காங் கரையிலிருப்பது யாரின்னு தெரியில்லை. என் சகலப்பாடி ஊட்டிலே பொங்கலிடனுமின்னு சொல்லிக்கிட்டு இருந்தாங்க. அவுங்கதானாக்குமின்னு பாத்தேன்,” என்று வந்ததற்குக் காரணம் சொல்வதுபோல் கூறினான். மீனாக்ஷிக்கு முதலில் உண்டான வியப்பு, அவன் சொன்ன காரணத்தால் நீங்கிற்று.

“போற வளியிலே, நீ இந்தப் பக்கம் திரும்பினது எனக்கு ரொம்ப சந்தோசம்,” என்றாள் மீனாக்ஷி, கம்மியகுரலுடன். பின்னர், “இந்தச் சின்ன சங்கதிக்கு யாரைக் கூப்பிறது?” என்று நகைத்தாள்.

பருத்து வீங்கினாற் போலிருந்த அவள் கண்ணிமைகள், விழிகளை முக்கால் பாகம் மறைத்துக்கொண்டன.

“மெய்தான், மெய்தான். ஒத்தரைக் கூப்பிட்டா இன்னொத்தரைக் கூப்பிடணும். அதுக்கு முடிவு ஏது?” என்றான் மதுரை.

“அதுக்காக நீ போயிடாதே. நீ இருந்து கொஞ்சம் பொங்கலைத் தின்னுட்டுத்தான் போவணும். சாமிக்குப் படச்சுதில்லையா?” என்று மதுரையைக் கட்டாயப்படுத்தி நிறுத்திவிட்டாள். வெங்கடாசலத்தினுடைய நிலைமையை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் அவளுக்கு இருந்தது. அது மதுரைக்குத் தெரியாவிட்டால் வேறு யாருக்குத் தெரியும்? மதுரை, முதலில் இருக்க இஷ்டமில்லாதவன்போல் பாவித்துக் கடைசியாகச் சம்மதித்தான்.

பாலும் அரிசியும் வெந்துகொண்டே இருந்தன. பொங்கல் பக்குவமாவதற்கு இன்னும் சிறிது நேரம் ஆகும்போல் இருந்தது. அப்பொழுது மதுரை, மீனாக்ஷியிடம் பேச்சைக் கொடுத்து ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்குத் தாவி, கடைசியில் தானும் வெங்கடாசலமும் கழுகுப்பட்டிக்குப் போனதைப் பற்றியும் வெங்கடாசலம் உத்தேசித்திருக்கும் பிரயத்தனங்களைப் பற்றியும் சொன்னான்.

“இந்த மாதிரிப் புதுசு புதுசாப் பயிரிட்டு அவனுக்கு அலுத்துப் போவலே? இருந்ததை வச்சக்கிட்டு சொகமா இருக்கக்கூடாது?” என்று மீனாக்ஷி, வெறுப்புடன் சொன்னாள்.

“ரெட்டியார் கடனைத் தீர்க்கவெண்டாமா!” என்றான் மதுரை.

“அதுவும் அவனாப் பண்ணிக்கிட்டதுதானே? இதுவா கடனைத் தீக்கற வளி? செலவைக் குறைச்சிக்கிட்டுக் கொஞ்சம் கொஞ்சமா மீத்துவைக்கிறது.”

“உன்னைப்போல் எல்லாரும் அவ்வளவு கெட்டிகாரங்களா இருப்பாங்களா?” என்றான் மதுரை, புன்னகையுடன்.

“ஆமாம், என் கெட்டிக்காரத்தனத்தை நீதான் மெச்சிக்கணும்,” என்றாள் மீனாக்ஷி. ஆனால், உள்ளூற அவளுக்கு மிகவும் சந் தோஷம் உண்டாயிற்றென்பது நன்கு விளங்கிற்று. “இந்தக் கடலைக்கு எவ்வளவு செலவளிக்கப் போறானோ?” என்றாள் அவள்.

“ரெண்டு மூணு ஆயிரமாவது ஆவாதா!” என்றான் மதுரை.

“இம்பிட்டுத்தானே! ரெட்டியாரு குடுக்கறாரு. அவர் இருக்கச்சே அவனுக்கு என்ன கொறவு?”

“ரெட்டியாரைக் கேக்கறதாக அவனுக்கு எண்ணமில்லை” என்று மதுரை பொய் சொன்னான்.

“நீ சொல்லறது ரொம்ப ஆச்சரியமாய் இருக்குதே. ஏன் அப்படி?”

“ரெட்டியாரு மலைமேலே உக்காந்து இருக்கறதா எண்ணிக்கிட்டு இருக்காராம். அதனாலே, அவருகிட்டே போக இஷ்ட மில்லையாம். இந்தச் சின்னத்தொகையை ஊரிலேயே ஆருகிட்ட யாவது பெரட்டிக்கலாமின்னு சொல்லிக்கிட்டு இருக்கான்.”

“நம்மூரிலேயா பெரட்டறது! — இங்கே எல்லாரும் பணத்தை மூட்டைகட்டித்தான் வச்சுக்கிட்டு இருக்காப்போல! அப்படியிருக்கிறவன், ஒத்தன் ரெண்டுபேருகூட எனக்குத் தெம்படலையே! உனக்குத் தெரியுமா, யாருகிட்ட வாங்கப் போறான்னு?”

“ஊம். எல்லாம் பேச்சோட நிக்குது. அந்தக் கடலையைப் பயிரிடறானா இல்லையோ. இன்னும் ஒண்ணுமே நிச்சயமாகலையே. ஏம், அந்த ஒத்தரு ரெண்டுபேரிலே நீகூட இருக்கலாம்,” என்று சிரித்துக்கொண்டு மதுரை சொன்னான். “என்னைக் கேலி பண்றயா?” என்று கேட்டாள் மீனாக்ஷி. அவள், மதுரையின் மனத்தில் இருப்பதைக் கண்டுபிடிக்க முடியாமல் தவித்தாள்.

“மெய்யாலும் சொல்றேன்; கேலி ஒண்ணுமில்லை. ஒன் தலையிலே அவன் என்ன கல்லுப்போட்டான்? நீதான் அவனுக்கு என்ன தீங்கு பண்ணிட்டே? இல்லே, அவன் இன்னும் ரெண்டு மூணாயிரம் ரூவாய் கடன் தாங்க மாட்டானா?”

“இப்போ, அதைப் பத்தி யார் சொன்னாங்க? பயித்தியக்காரனாட்டம் பேசறயே — அவன் பெரிய மனுசன் ஆச்சே! எங்ககிட்டே யெல்லாம் லேவாதேவி வச்சிப்பானா?”

மதுரை சிரித்துக்கொண்டே, “உங்கிட்ட அப்படிச் சொன்னானா?” என்றான்.

“எல்லாச் சங்கதியும் நாம் சொல்லித்தானா தெரிஞ்சிக்கிணும்?”

“நான் ஒண்ணு சொல்றேன், கேளு. நம்ப ஊரெல்லாம் தேடினா, அவனை நல்லா அறிஞ்சுகிட்டவங்க ரெண்டு மூணு பேருகூடக் கிடைக்கமாட்டாக. அதுக்குக் காரணமும் எனக்குத் தெரியும்; எல்லாம் அவன் வாயிதான்!”

“இப்போ சொன்னியே, அது சரியான பேச்சு! நாக்குலே எவ்வளவு துடுக்கு! எவ்வளவு விசம்!” என்று மீனாக்ஷி சீறினாள்.

“ஆனால், நீ நெனைக்கிறபடி அவன், அவ்வளவு கெட்டவனில்லே. எந்த விசயத்தையும் ரொம்பநாள் யோசிக்க அவனுக்குக் கையாலாவாதே! புத்திக் கொறவின்னிட்டு நான் சொல்லணுமா?” என்று மதுரை, தன் மனச்சாக்ஷிக்கு விரோதமாகச் சொன்னான்.

“அது என்னமோ நிசந்தான்” என்று மீனாக்ஷி ஒப்புக் கொண்டாள்.

“நீ என்ன சொல்றே? — ஒரு பந்தியத்துக்காவது அவனை உங்கிட்டே பணம் வாங்கும்படி பண்றேன், பாக்கிறயா?”

“அவனுக்குக் கடன்கொடுக்கணுமின்னு எனக்கு ரொம்ப அக்கறையா?”

“இல்லாட்டி, உங்கிட்டத்தான் வாங்கணுமின்னு அவனுக்கு அவசியமா?” என்று உடனே மதுரை பதில் கூறினான். பிறகு, “நிசம்மா உங்கிட்ட வாங்குறாப்படி அவனுக்கு எண்ணமேயில்லை. இதெல்லாம் நான் என்னாத்துக்குச் சொன்னேனின்னா, அநியாயமா ரொம்பப் பேரு அவன் மேலே கெட்ட அபிப்பிராயம் வச்சிருக்காங்க. அது தப்பு. அவன் அவ்வளவு கெட்டவன் இல்லே. இன்னொரு விசயம். எம் மனசுலே இருக்கிறதை வெளியாக்கிடறேன்,” என்று குரலைக் குறைத்து ரகசியமாகச் சொல்லத் தொடங்கினான்: “நம்மூரு நல்லது பொல்லாததை நெனச்சா, அவன் மறுபடியும் ரெட்டியார்கிட்டே கடன் வாங்கக்கூடாதுன்னு எனக்கு. இப்போ இருக்கிற கடனைக்கூட, நம்ம ஊராரு ஆரு கிட்டையாவது மாத்திடணுமின்னு நான் யோசிக்கிறேன். ரெட்டி யார்கிட்டே இனிக் கடன் வாங்கவேண்டாமின்னு அவன் மனசைக் கலச்சுது நான்தான், போயேன்.”

மீனாக்ஷிக்கு மர்மங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது. மேலே மதுரை சொல்லத் தொடங்கினான்: “மீனாச்சி, நீ ரொம்ப சாமர்த்தியக்காரி; வஞ்சனையில்லாமே சொல்லு, எத்தினி நான் வெங்கடாசலம் இப்படித் தள்ளுவான்?”

மீனாக்ஷி வாயைத் திறக்கவில்லை. தன் சாமர்த்தியத்தையும் புத்திசாலித்தனத்தையும் மதுரை மெச்சுவதைக் கேட்டு, அவள் பரமானந்தத்தில் மூழ்கினாள். மதுரை நன்றி கெட்டவனல்ல; வெங்கடாசலத்தைத் தூஷணையாகப் பேச அவன் மனம் கஷ்டப்பட்டது. ஆனால், அவன் நன்மைக்காகவே அல்லவா தான் இவ்வாறு பாசாங்கு செய்யவேண்டியிருக்கிறதென்று மதுரை சமாதானப்படுத்திக் கொண்டு, பின்வருமாறு கூறினான்: ''நம்மூரெல்லாம் ஒரு ஜாதி. பாக்கப்போனா, ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஏதாவது சம்பந்தம் இல்லாமெ இருக்காது. எனக்கு என்ன எண்ணமின்னா — நம்பிளவன் சொத்தை நம்பளவனே ஒருத்தன் கட்டிக்கணுமேயொளிய, அது பிறத்தியானுக்குப் போவக்கூடாது என்கிறதுதான். இதை, வாயை விட்டு எனக்குச் சொல்ல இஷ்டமில்லை. நீ சொல்லும்படி பண்ணிட்டே,'' என்றான்.

''உளுமையைச் சொல்றதிலே என்ன தப்பு? இந்த மாதிரி எண்ணம் எனக்கும் ரொம்ப நாளா உண்டு. ஆனா நீ கோவிச்சிக்காதே. உனக்கு இவ்வளவு ஆலோசனையிருக்கின்னு நான் நம்பவேயில்லை,'' என்று அவள், கொழுத்த முகமெல்லாம் புன்சிரிப்பு நிரம்பச் சொன்னாள்.

''இந்தப் பேச்சு ஆரு காதிலேயாவது விளுந்திடப்போவுது! அதிலேயும் வெங்கடாசலத்துக்குத் தெரியவே கூடாது. அப்பா, மாயாண்டி! நீ ரொம்ப சாக்கிரதையாயிருக்கணும்,'' என்று மாயாண்டியை நோக்கிச் சொன்னான் மதுரை.

''அவனுக்கு நல்லாச் சொல்லு!'' என்றாள் மீனாக்ஷி, கடுகடுப்புடன். மாயாண்டி, பேதையோல் விழித்துத் தலையை ஆட்டினான்.

''உன்னை ஏன் அவனுக்குக் கடன் குடுக்கும்படி சொல்றேன்னு இப்போ தெரிஞ்சிச்சா?''

''நீ என்ன பயித்தியக்காரனாயிருக்கயே, மதுரை. 'உனக்குக் கடன் தரேன்'னிட்டு அவங் கால்லே விளச் சொல்றயா?''

“உம் மனசிலே, நீதான் கெட்டிக்காரீன்னு நீ எண்ணிக் கிட்டு ருக்கே,” என்று மதுரை சற்றுச் சலிப்பாகச் சொல்லி, “நான் உன்னை அவன் கால்லே விளச்சொன்னேனா? தெனவு எடுத்தவன் சொறிஞ்சுக்கிறான். அக்கறை உனக்கோ அவனுக்கோ? பணம் தேவையானா வந்து கேட்டுகிட்டம்; ஒன் தயவை அவன் நாடு கிறானேகிண்டி, நீயா அவன் தயவுக்குக் காத்திருக்கே? இந்த மாதிரிப் பண்ணா நல்லாருக்குமின்னு நான் சொல்றேன். கேட்டாக் கேட்கட்டும், கேக்காட்டிப் போகட்டும். யாருக்குக் குடி முளிகிப் போவுது?” என்றான்.

இச்சமயத்தில் மாயாண்டியின் மனைவி தேவானை, யாவும் பூஜைக்குத் தயாராக இருப்பதாகத் தெரிவித்தாள். பூஜை முடிந் தவுடன், மதுரையும் அவர்களோடு பிரசாதத்தைச் சாப்பிட்டான். பிறகு, தான் அவர்களோடு சேர்ந்து வீடு திரும்பினால் சந்தேகத்திற்கு இடம் கொடுக்குமென்றும் தான் முன்னதாகவே போய் விடுவது உசிதமென்றும், மீனாக்ஷியிடம் ரகசியமாகச் சொல்லிவிட்டு, மதுரை அவ்விடத்தைவிட்டு நகர்ந்தான்.

இலுப்பைத் தோப்பிலிருந்து வீடு வரும்வரையில், மீனாக்ஷி வண்டியில் வாய் திறவாமலே உட்கார்ந்திருந்தாள். விதவிதமான எண்ணங்கள் அவளுக்கு உண்டாயின. குலதெய்வத்துக்கு இட்ட பொங்கலுக்குக் கைமேல் பலன் கிடைத்துவிட்டதென்று சந்தோஷப்பட்டாள். அவள் நினைத்த காரியங்களெல்லாம் ஜயமானால், ஒரு பெரிய பொங்கலைப் படைப்பதாக அவள் வேண்டிக் கொண்டாள். அவள் வாயைவிட்டு வார்த்தைகள் கிளம்பாவிடினும், மனத்தில்மட்டும், ‘இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்கலாம்’ என்ற எண்ணம் ததும்பிக்கொண்டிருந்தது. அதற்குத் தக்கவாறு உதடுகளும் அசைந்து கொண்டிருந்தன.

## 7. கடைசிக் கந்தாயம்

மீனாக்ஷியை இலுப்பைத் தோப்பில் மதுரை சந்தித்த இரண்டு வாரங்களுக்குள், வெங்கடாசலம் அவளிடமிருந்து இரண்டாயிரம் மட்டும் அல்ல, மற்றும் ஓர் ஆயிரம் ரூபாய்கூட, எதிர்பாராத செலவுகளுக்காக வெகு முன் ஜாக்கிரதையுடன் கடன் வாங்கி விட்டான்.

பிறகு, மிகவும் மும்முரமாக அவன் தன் வேலையைச் செய்ய ஆரம்பித்தான். மழைக்காலம் சிறிது முன்னதாகவே ஆரம்பிக்கும் போல் தோன்றினபடியால், ஏராளமான ஆட்களை அமர்த்தி, அவன் அதிசீக்கிரத்தில் நடவை முடித்துவிட்டான். அந்த வருஷம், சோளம் நன்றாய் விளையும் என்று குறிசொன்னதாலோ அல்லது வேறு எந்தக் காரணத்தினாலே, ஊரெல்லாம் சோளமே புன்செய்த் தானியமாக இருந்தது. ஆகையினால், அவன் கடலைத் தோட்டம் நாற்பக்கங்களிலும் சோளக்காடுகளால் சூழப்பட்டிருந்தது. நாளடைவில் சோளத்தட்டுக்கள் பருத்து ஓங்கி வளர்ந்து, வெங்கடாசலத்தின் நாற்பது ஏக்கர் கடலைக் காட்டில் சிறு பாகங்கூடக் கண்ணுக்குத் தெரியாமல், மறைத்துக் கொண்டன. இவ்வாறு சம்பவித்ததைக் குறித்து, வெங்கடாசலத்திற்குச் சந்தோஷமே. ஏனெனில், படாத கண்பட்டுத் தன் கஷ்டமெல்லாம் வீணாய்ப் போய்விட்டால் என்ன செய்வது என்று அவன் பயந்திருந்தான். அவன் பயத்துக்கு நல்ல காரணம் உண்டு. சோளக்காடுகளைத் தாண்டிக்கொண்டு, அவன் கடலைத் தோட்டத்திற்குச் சென்றால், பாலைவனத்து நடுவே பசுந்திட்டுப்போலக் கடலைச் செடிகள் பச்சைப் பசேலென்று சோபித்துக் கொண்டிருந்தன. அவைகளுக்கு அனுகூலமாக மழை தவறாமல் பெய்தது. அவ்வருஷம் புன்செய் ‘வெள்ளாமை புரண்டு’ போகப் போகிறதென்று, குடியானவர்களெல்லாம் அறுப்புக் காலத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரே ஒரு மாதந்தான் — அப்பால், வெங்கடாசலம் பட்ட கஷ்டங்களுக்கெல்லாம் பலன் கிடைத்துவிடும் — கடைசியோ கடைசியிலாவது தனக்கு வெற்றி வந்ததைப் பற்றி அவன் பரமானந்தப்

பட்டான். வெற்றியாவது வெற்றி — 'சீட்டுக் கிழித்தான் கடலை' என்ற பெயரை, 'உயிரைக் கொடுத்தான்' கடலை என்று மாற்ற வேண்டுமென்று, அவனுக்குத் தோன்றிற்று. அறுவடையான பிறகு, தானியத்தை ஒன்றுக்குப் பாதியாய் விற்றால்கூட, அவன் கடனெல்லாம் தீர்ந்து, கையிலும் ஏராளமான திரவியம் மிஞ்சு மென்பதை நன்குணர்ந்தான். கனவிலும்கூடத் தன் முயற்சி இவ்வளவு வெற்றி பெறுமென்று அவன் நினைக்கவில்லை. அண்ணாமலைத் தாத்தாவோ, வெங்கடாசலத்தோடு இணைபிரியாமல் திரிந்துகொண்டிருந்தான். அக்கிழவனின் குதூகலத்திற்கு அளவேயில்லை. வெங்கடாசலத்திற்கு நன்மை ஏற்பட்டுவிட்ட தென்று ஒருபுறம் சந்தோஷம்; தன் தூண்டுதலாலல்லவா இம்முயற்சி செய்தான் என்று ஒரு புறம் பெருமை.

ஒரு நாள் சாயங்காலம், வெங்கடாசலம் அண்ணாமலைத் தாத்தாவையும் மற்றும் சில சிநேகிதர்களையும் தன் கடலைத் தோட்டத்திற்கு அழைத்துக்கொண்டு போனான். அவனுக்கு ஒரு வாரத்திற்குள் அறுப்பு ஆரம்பிக்க வேண்டுமென்று தோன்றிற்று. இருந்தபோதிலும், நாலுபேர் அபிப்பிராயங்களையும் தெரிந்து கொள்வதற்காக அவன் அவர்களை அழைத்துச் சென்றான். தோட் டத்தில் மூலைக்கு மூலை ஒருவராகப் புகுந்து, அங்குமிங்கும் கடலைக் காய்களைப் பிடுங்கி உரித்து மென்று பதம் பார்த்துக்கொண்டு, உல்லாசமாய் அலைந்து கொண்டிருந்தார்கள்.

இவர்கள் இப்படியிருக்கையில், அருகிலிருந்த சோளத்தோட் டத்தில் பெருங்கூச்சல் கேட்டது. சோளத்தட்டுக்கள் மதாளித்து ஆள் உயரத்திற்குமேல் விளைந்திருந்ததனால், கண்ணுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. சிறிதுநேரம் வரையில், இன்னதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. வரவர, அதே கிராமத்தைச் சேர்ந் தவர்களான பெருமாளும் சின்னப்பனும், ஒருவரை ஒருவர் வைது கொள்வது தெரியவந்தது. அவர்களுடைய கோபாவேசத்தையும் பேச்சுத் துடுக்கையும் கேட்டால், வெகு சீக்கிரத்தில் கைகலந்து விடுவார்கள்போல் இருந்தது. அவர்களுக்குச் சமீபத்தில், மதுரை இருந்தான். அவன் அவர்களைப் பெருங்குரலுடன் அடக்கிக் கொண்டு, அவர்களிடத்திற்கு ஓட முயன்றான். ஆனால், சோளத் தட்டுக்கள் காடாய் வளர்ந்திருந்ததனால், மதுரை அவற்றை

நீக்கிக்கொண்டு போவதற்குள், வெங்கடாசலம் முதலியோர் வரப்பு வழியாகச் சுற்றிக்கொண்டு வந்துவிட்டனர். ஆனால், அதற்கு முன்னமேயே, பெருமாளும் சின்னப்பனும் அடித்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டார்கள். அவர்கள் ஒருவர் குடுமியை ஒருவர் பிடித்துக்கொண்டு, குத்திக்கொண்டிருந்தார்கள். அவர்களை விலக்கிக் விடுவது, வெங்கடாசலத்திற்கும் அவன் சிநேகிதர்களுக்கும் பிரம்மப் பிரயத்தனமாய்விட்டது. அடியெல்லாம் சின்னப் பனுக்குத்தான். அவனுக்கு மூக்கில் ரத்தம் ஓடிக்கொண்டிருந்தது. ஒரு கண் பலமாக வீங்கிப் போய்விட்டது. பெருமாளை மிரட்டியும் நல்ல புத்தி சொல்லியும், அவ்விடத்தை விட்டுத் துரத்தி விட்டார்கள். ஆனால், சின்னப்பனை அவர்களால் சமாதானப் படுத்த முடியவில்லை. பாவம் — பொருளையும் இழந்து அடியும் வாங்கினால், அவன் மனம் எப்படி இருக்கும்? அவன் வாக்கு மூலப் பிரகாரம், சில நாட்களாய் அவன் தோட்டத்தில் சோளக் கதிர்கள் திருட்டுப் போய்க்கொண்டிருந்தனவாம். அது பெருமாளின் மகன் வேலை என்று, அவனுக்குச் சந்தேகம் பிறந்ததாம். அதன்மேல், அவன் மகனைக் கண்டிக்கும்படி பெருமாளைச் சின்னப்பன் கேட்டுக்கொண்டானாம். அதற்காக, அந்த ஈன ஜாதிப் பயல், அவனை ஏகதேசமாய்த் திட்ட ஆரம்பித்தானாம். திருப்பித் திட்டினதற்காக அவன் அடித்தானாம்.

சின்னப்பன் சொன்னதில் பொய் ஒன்றுமில்லையென்று வெங்கடாசலம் முதலியவர்கள் அறிந்தார்கள். பெருமாள் அயோக்கிய னென்பது ஊரெல்லாம் தெரிந்த விஷயம். அவன் மகன் தகப்பனுக்கு மிஞ்சிப் போகிறவனென்றே தோற்றியது. ஆகையால். வெங்கடாசலம் பஞ்சாயத்துக் கூடி நியாயம் தீர்ப்பதாகச் சொல்லிச் சின்னப்பனைச் சமாதானப்படுத்தினான்.

மறுநாள் விடியற்காலம் வெங்கடாசலமும் அண்ணாமலைத் தாத்தாவும் வாய்க்கால் கரையோரத்தில் கருவேலங்குச்சிகளால் சாவகாசமாகப் பல்லை விளக்கிக் கொண்டிருந்தார்கள். கறுக்கல் முழுதும் மறையவில்லை. சூரிய உதயத்திற்கு இன்னும் இரண்டு நாழிகை இருக்கும். அவர்களைப்போல் மற்றும் அநேகரும் பல் தேய்த்துக் கொண்டிருந்தார்கள். காலையில் கைகால் கழுவுவதற்கும் பல் விளக்குவதற்கும் வாய்க்கால் கரைக்குப் போவது அவ்வூர்

ஆண் பிள்ளைகளுக்கு வழக்கம். கும்பல் கூடினால் பேச்சுத் தானே கிளம்புமானதால், முன்தினம் சாயங்காலம் பெருமாள் செய்த துஷ்டக்காரியத்தை எல்லோரும் கண்டித்துக் கொண்டிருந்தனர். அந்தச்சமயத்தில் வெங்கடாசலத்தின் பண்ணையாளான ஆதித்திராவிடன் ஒருவன் திணறத் திணற ஓடிவந்து, கைகளை உதறிக்கொண்டு அழாத துக்கத்துடன், ‘‘யசமான்! எல்லாம் பாலாப் போச்சே! எல்லாம் அடியோடே போச்சே’’ என்று கதறினான்.

அவன் உடம்பு பதறிக்கொண்டிருந்தது. வாயிலிருந்து வார்த்தை வரத் தத்தளித்துக்கொண்டிருந்தது.

வெங்கடாசலத்திற்கு ஒன்றும் புரியவில்லை. ஆயிரக்கணக்காக எண்ணங்கள் அவன் மனத்தில் உதித்தன.

‘‘சமாசாரத்தைச் சொல்லேண்டா’’ என்று கெஞ்சுவதுபோலக் கேட்டான்.

அவன் பண்ணையாள், எச்சிலை விழுங்கிக்கொண்டு வெகு கஷ்டத்துடன் பெருமூச்சை அடக்கிக்கொண்டு, சொல்ல ஆரம்பித்தான்: ‘‘சாமி, நான் வெள்ளி மொளைக்கிறதுக்கு முந்தியே நம்ம கடலைக்காட்டுக்கு பொறப்பட்டேனுங்க. பெடாரி கோவிலுகிட்டே போயிட்டிருந்தப்ப ஒரு வாசம் வந்துதுங்க. அப்பவே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் பொறந்திச்சு. ‘தாலியறுப்பான் குட்டை’க்குப் போனதும் ஒரே அனலாயிருந்திச்சு. எனக்கு வாரிப் போட்டுதுங்க. நம்ம கடலைக்காட்டுப் பக்கம் விளுந்து அடிச்சு ஓடினேன். ஆனா, பனந்தோப்புக்கு அப்பாலே போகமுடியல்லே சாமி. அனலும் பொகையும் அதுக்குள்ர ஒரே முட்டா சூந்துக்கிச்சு. அப்பாலே மேக்கித்திக் காத்துக் கௌம்பிடிச்சு. அனலுக்கு அங்கே நிக்கமாட்டலே. எத்தினி மொசலுங்க காத்தா பறந்திச்சி — ஒரு நரி, பயத்துலே என்னைத் தள்ளிவிட்டு ஓடிச்சு. சோளச்சருவுங்க எரிஞ்சதக்கூடக் கண்ணாலைப் பாத்தேஞ் சாமி! ஐயோ! கிளி கொஞ்சின தோட்டமெல்லாம் வெந்துக் கிட்டு இருக்குதே! அந்த வவுத்தெரிச்சிலே என்னாலே பாக்க முடியில்லியே’’ என்று அவன் குழறினான்.

‘‘நாம் இப்போ என்னா பண்றது?’’ என்று ஒருவன் ஆத்திரத்தோடு கேட்டான்.

‘‘தலைவிதியேன்னிட்டு இருக்கவேண்டியதுதான். அணைக்கிற நெருப்பா? அட கடவுளே’’ என்று மற்றொருவன் தலையில் கையை வைத்துக்கொண்டான்.

‘‘அட, இங்கிருந்துக்கிட்டு வெட்டிப்பேச்சுப் பேசறதுலே என்னடா லாவம்? அங்கே போவலாம் வாங்கடா’’ என்று சொல்லிக் கொண்டே ஒருவன் ஓடினான். அநேகர் அவனைப் பின்பற்றி ஓடினர். ஆனால், வெங்கடாசலம் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். வாழ்க்கையின் போராட்டத்தில், பின்னும் எந்நாளும் தலைதூக்க முடியாமல் அவன் அடியோடு குலைந்தான் என்பது அவனுக்கு நன்கு விளங்கிற்று. மனிதனோடு போராடலாம்; தெய்வத்தோடு யார் என்ன செய்ய முடியும்? வெற்றியைக் கை நீட்டிக் கவரும் தருணத்தில், தலைமேல் பேரிடி விழுந்தால் எவர்மேல் குற்றம் கூறுவது? இவ்வளவு அநியாயம் தகுமா? அப்படிப் பண்ணாத பாவத்தை என்ன செய்துவிட்டான், ஆனால், ஆண்டவன் செயலைச் சோதிக்க அவன் யார்? இருந்தபோதிலும் — இருந்தபோதிலும், கடவுள் தன்மேல் போட்ட அநியாயத்தை நினைத்து நினைத்து உருகினான். அண்ணாமலைத் தாத்தா, அவன் படும் கஷ்டத்தைப் பார்க்கச் சகிக்கமுடியாமல், குனிந்த தலை நிமிராமல், மௌனமாய் உட்கார்ந்திருந்தான்.

இரண்டு மூன்று நிமிஷத்திற்குப் பிறகு, வெங்கடாசலம் தூங்கி விழித்தவன்போல் எழுந்திருந்தான். ‘‘தாத்தா வண்டியைக் கட்டிக்கிட்டு நாமும் போய் அந்த வேடிக்கையைப் பார்க்கலாம். எல்லாருஞ் செத்தா கலியாணம்போல இல்லியா?’’ என்று அலக்ஷியமாகச் சொல்வதுபோல் பாவித்துச் சொன்னான். ஆனால், புன்செய்த் தோட்டத்தில் பற்றிய தீ, தன்னையும் எரித்துவிட்ட தென்று அவனுக்கு நன்றாகத் தெரியும்.

## 8. கால வித்தியாசம்

அடுத்த வருஷம் முழுவதும், வெங்கடாசலம் படுத்த படுக்கையாகக் கிடந்தான். முதலில் இரண்டு மாதம், தீவிரமான காய்ச்சல் அடித்தது. பிறகு, அதன் மூலமாகப் பின்காலில் கீல்வாதம்போல் ஒரு கோளாறு ஏற்பட்டது. அந்த வியாதியினாலும், அதற்கு நாள்படச் செய்யவேண்டியிருந்த வைத்தியத்தினாலும், அவனுக்குச் சினேகிதர்களைப் பார்க்க விருப்பமில்லாததனாலும், அவன் வீட்டை விட்டு வெளியே தெருத் திண்ணைக்குக்கூடப் போவதில்லை. அண்ணாமலைத் தாத்தாவும் வீரப்பனும் அவன் குடும்பத்தாரும் மட்டும், அடிக்கடி வந்து பார்த்துவிட்டுப் போவார்கள். மதுரை, எப்பொழுதாவது எட்டில் பத்தில் வரும்போது, தான் ஜீவன விஷயமாகத் திரியவேண்டியிருப்பதால் அடிக்கடி வரமுடிய வில்லையென்று, மன்னிப்புக் கேட்டுக் கொள்வதுபோலச் சொல்வான். அதைக் கேட்கும்போதெல்லாம் வெங்கடாசலத்தின் மனம் கஷ்டப்படும். முன்போல் அவ்வளவு சகாயம் செய்யச் சக்தி யில்லாவிட்டாலும், அறுவடையின்போது அவனுக்கு மாமூலாய்க் கொடுக்கப்படும் தானியத்தை அவன் எடுத்துக் கொள்ளலாமென்று கேட்டுக்கொண்டான்.

மதுரை, அநேகமாய் மீனாக்ஷி வீட்டில் காலத்தைக் கழித்து வருவது வெங்கடாசலத்திற்குத் தெரியும். அதனால் அவனுக்குக் கோபம் ஒன்றுமில்லை, சந்தோஷமே. ஏனெனில், மீனாக்ஷியிடத்தில் சிநேகமாயிருப்பதால், தனக்கு அவளால் யாதொரு தீங்கும் வராதபடி மதுரை பார்த்துக்கொள்வான் என்பது, அவனுடைய திடமான நம்பிக்கை. அந்த வருஷம் நன்செய் விளைச்சல் திடமாகவே இருந்தது. சாப்பாட்டுச் செலவுக்குப் போகக் கையிலும் கொஞ்சம் பணம் மிகுந்தது. ஆனால், அவன் ரெட்டியாருக்குக் கொடுக்கவேண்டிய கடனை அடியோடு மறந்துவிட்டான். அதற்குக் காரணம், ரெட்டியாராவது அவருடைய ஏஜெண்டாவது, அவன் வழிக்கே வராமல் இருந்ததுதான்.

ரெட்டியார், பர்மா தேசத்தில் ஒரு வர்த்தக விஷயமாய் ஏற்பட்ட பெரிய நஷ்டத்திற்குத் தாக்குப்பிடிக்க முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது,

அவனுக்குத் தெரியாது. எவ்வளவோ சிரமப்பட்டும், ரெட்டியாரால் நஷ்டத்திலிருந்து தப்பமுடியவில்லை. பிறகு, வெறுப்புடன் அவர் ஊர் திரும்பினார். உள்ளூரில் மூலைக்கு மூலை சிதறிக் கிடக்கும் லேவாதேவிகளை ஒன்றாகச் சேர்த்துக் கவிழ்ந்த கப்பலை மறுபடியும் நிமிர்த்த அவர் முயன்றார். இதன்பொருட்டு, ஒவ்வோர் இடமாகப் பார்த்துக் கொண்டு, கடைசியாக ஒருநாள் மாலை சுமார் நாலுமணி நேரத்திற்கு, அவரும் அவருடைய ஏஜெண்டும் வெங்கடாசலத்தின் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களைக் கண்டதும் வெங்கடாசலத்திற்கு அடி வயிற்றில் இடி விழுந்தாற்போல் இருந்தது. அவர்களை வெகு மரியாதையுடன் வரவேற்று உபசாரங்கள் பண்ணத் தொடங்கினான். ஆனால், அவற்றையெல்லாம் மறுத்து, ரெட்டியார் தாம் வந்த காரியத்தைத் தெரிவித்தார். ஒரு வாரத்திற்குள் முதலையும் வட்டியையும் திருப்பிக் கொடுக்காவிட்டால், பணத்தை வசூல் பண்ணிக் கொள்ளும் விதம் தமக்குத் தெரியுமென்று, அவர் உறுதியாகச் சொன்னார். இதைக் கேட்டவுடன் வெங்கடாசலம் திகைத்து விட்டான். நாடி ஆடவில்லை. வட்டி முழுவதையும் கொடுத்து விடுவதாகச் சொன்னான். ரெட்டியார் கேட்கவில்லை. பேச்சோடு பேச்சாய், அவன் மீனாக்ஷியிடம் கடன் வாங்கியிருப்பது தமக்குத் தெரியுமென்று அவர் சொன்னார். அதற்கு வெங்கடாசலம் எவ்வளவோ சமாதானங்கள் கூறியும் பயனில்லை. தனக்கு நேர்ந்த பெரும் விபத்தையும் அவன் எடுத்துரைத்தான். எதற்கும் ரெட்டியார் மசியவில்லை. கடைசியாக, அவன் அவ்வளவு வற்புறுத்துவதனால், ஒரு மாதம் தவணை கொடுப்பதாகச் சொல்லிப் புறப்பட்டுப் போய்விட்டார்.

வெங்கடாசலம் திக்குதிசை தெரியாமல், பைத்தியம் பிடித்தவன்போல் உட்கார்ந்திருந்தான். பணத்தைத் திருப்பிக் கொடுக்கா விட்டால், ரெட்டியார் பிராது செய்துவிடுவார் என்று வெங்கடாசலத்திற்கு நிச்சயமாகிவிட்டது. கச்சேரி வரையிலும் போனால், தன் சொத்துக்கெல்லாம் ஆபத்து வரும் என்பதில் சந்தேகமில்லை. முதன் முதலில், கிராமத்திற்கெல்லாம் உயர்தரமான தன் 'நத்தைத் தோட்ட'த்துக்குத்தான் சனி பிடிக்கும். அதன் பேரில் ஆசைப்படாதவன் ஊரில் யார்? அது கோர்ட் மூலமாய் ஏலத்திற்கு வந்துவிட்டால்... — அதற்குமேல் அவன் மனம் ஓடவில்லை. அதை

நினைக்கும்போதே அவன் நெஞ்சம் பதறிற்று. அவன் வேர்த்து விறுவிறுத்துப் போய்விட்டான். நாக்கு வறண்டது. பல்லைக் கடித்துக்கொண்டு, ரேழியில் கீழும் மேலுமாக நடந்தான். "ஓ நத்தைத் தோட்டமே, நத்தைத் தோட்டமே," என்று கலங்கினான். தலைமுறைக் கணக்காகத் தன் குடும்பத்தார் பெருமையுடன் ஆண்டுவந்த அந்தத் தங்கமான நிலத்தைத் தன் காலத்திலா இழப்பது? ஒரு காலும் முடியாது. தான் இறந்தாலும் சரி, அதை விற்கமாட்டேன்... அதைக் கைப்பற்றத் தைரியமுள்ளவன் எவனோ பார்க்கலாம்... குத்துச் சண்டை செய்பவன்போல் கைகளைக் கெட்டியாக மூடிக்கொண்டு, பல்லைக் கடித்தான்.

ஆனால், அவன் கோபவெறியெல்லாம் வெகு சீக்கிரத்தில் தணிந்துவிட்டது. நெருக்கடியின் உண்மை, உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பிரத்தியக்ஷமாயிற்று. ஆத்திரப்படுவதால் என்ன நடக் கும்? புத்தி மாறாட்டந்தான் ஏற்படும். மதுரை, யோசனை செய்து சூழ்ச்சிகள் செய்வதில் வெகு சமர்த்தன். வெங்கடாசலத்திற்கு எவ்வளவோ தடவைகளில், அவன் அப்படி உதவி செய்திருக்கிறான். ஆனால், அவனை இப்பொழுது பார்ப்பதே அரிதாய் விட்டது. ஏன்? தான் முன்போல் அவனுக்குப் பொருளுபகாரம் செய்யக் கூடாததனால் அல்லவா? எவ்வளவு அற்பத்தனம்... அடுத்த க்ஷணத்தில் வெங்கடாசலத்தின் பெருந்தன்மை மேலிட்டது. மதுரையின் மேல் தப்புச் சொல்வது பாபமென்று அவனுக்குப் பட்டது. தன் வீட்டில் உட்கார்ந்திருந்தால் அந்த ஏழை, ஜீவனத்திற்கு என்ன செய்வான் என்று தானே சமாதானம் செய்துகொண்டான். இந்த நெருக்கடியிலிருந்து எவ்விதம் தப்பித்துக் கொள்வதென்று மூளை கலங்க யோசித்தான். யாதொரு வழியும் காணவில்லை. உடம்பு காய்ச்சல் வந்தாற்போல் கொதித்துக் கொண்டிருந்தது. திக்குத் திசையற்றுத் தவிக்கும் அவன் மனம், ஒரு நிமிஷமாவது ஒரு விஷயத்தைப் பற்றி சாந்தமாய் யோசிக்கச் சக்தியற்றதாய்விட்டது. எந்தச் சிநேகிதனிடமாவது தனக்கு நேரிட்ட கஷ்டத்தை மனமாரச் சொல்லாவிட்டால், அவன் தனக்குப் பைத்தியம் பிடித்து விடுமென்று நினைத்தான். உடனே வேலனைக் கூப்பிட்டான். வேலன் வீட்டில் இல்லை. அவன் குரலைக் கேட்டு, மனைவி அலமேலு வந்தாள். அலமேலு, எந்த விஷயத்திலும்

தலையிட்டுக்கொள்ள மாட்டாள். ஆனால் அன்றைத்தினம், தன் கணவனுக்கும் ரெட்டியாருக்கும் நடந்த சம்பாஷணையை அவள் உள்ளிருந்தவாறே கேட்கும்படி நேரிட்டது. தன் மனைவியைக் கண்டதும், வெங்கடாசலத்தின் துக்கம் பின்னும் அதிகரித்தது. அவள் பரமசாது; வெளுத்ததெல்லாம் பாலென்று நினைப்பவள். தன் புத்தியின்மையால் அவளுக்குக் கஷ்டம் ஏற்பட்டால், அதை எப்படிச் சகிப்பது? அதைக் காட்டிலும் பெரிய துரோகம் அவன் என்ன செய்ய முடியும்? கணவனும் மனைவியும், சில வினாடிகள் ஒருவரை ஒருவர் உற்றுப் பார்த்தார்கள். பரஸ்பரம் இருந்த துக்கத்தை உணர்ந்தார்கள். வெங்கடாசலம் வாயெழும்பாமல் படும் துயரத்தை அறிந்து, அலமேலு மெள்ளச் சொல்லலானள்:

"வேலு, புண்ணாக்கு வாங்கியார மருதூருக்குப் போயிருக்கான். வெளக்கு வெச்சுத்தான் வருவான். எதுனாச்சும் வேலையிருக்குதா?"

"ஒண்ணுமில்லை. அவனை மதுரை ஊட்டுக்கு அனுப்பனுமின்னு பாத்தேன் — இன்னிக்கு ரெட்டியாரு வந்திருந்தாரு தெரியுமல்ல? எனக்கு ஒரு பயத்தைக் காட்டிட்டுப் போயிருக்காரு."

"அவரு என்னா பண்ண முடியும்? பணத்தைத்தானே வாங்கிட்டுப்போவாரு?" என்றாள் அலமேலு.

வெங்கடாசலம் துயரத்தோடு துயரமாய்ச் சிரித்துக்கொண்டு, "அது அவ்வளவு சுளுவா முடிஞ்சிடுற வேலையா?" என்றான்.

"நான் கொஞ்ச நேரத்துக்கெல்லாம், லச்சுமி ஊட்டுக்குப் போறேன். அப்போ, அவரை வரச்சொல்றேன். அவரு பொளுதினைக்கும், மீனாச்சி ஊட்டுத் திண்ணை மேலேதானே உட்காந்திருக்காரு."

"சரி — வீரப்பனையும் பாக்கணும். ஆனா, அவன் இப்ப ஊட்லே இருக்கமாட்டான். வந்த ஒடனே, நான் வரச் சொன்னேனிட்டு அவன் பெண்சாதிகிட்டே சொல்லு," என்றான் வெங்கடாசலம்.

அலமேலு, ‘‘சரி,’’ என்று தலையை ஆட்டிக்கொண்டு அப்புறம் சென்றாள்.

அலமேலுவைப்போல் அமரிக்கையுள்ளவரைக் காண்பதே அரிது. மிகவும் தெய்வபக்தி யுள்ளவள். அவள் வாழ்க்கை, வீட்டு வேலையிலும் ‘சாமி கும்பிடுவதி’லும் அடங்கியிருந்தது. தன் புருஷன், பொருளை எவ்வாறு செலவழிக்கிறானோ என்ற கவலையே அவளுக்கு இல்லை. ஆனால், வரவர அவர்கள் க்ஷீண தசையை அடைந்து வருவது மட்டும் அவளுக்குத் தெரிந்தது. இதைப் பற்றித் தன் நிமித்தமாக அவள் கவலைப்படவேயில்லை. அவளுக்குப் படாடோபமில்லை யாதலின், செலவும் அதிகமில்லை. ஆனால், தன் கணவன் செல்வாக்கில் ஆசையுள்ளவனாகையால், அவன் வாழ்வுக்குக் குறைவு வராமலிருக்க வேண்டு மென்று, சதா கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டாள். அதுவும் இன்றைத் தினம், கவலையும் விசனமுமுற்ற அவன் முகத்தைப் பார்க்கப் பார்க்க, அவள் மனம் துடித்தது. அந்நிலைமையில் அதுவரை அவனை எப்பொழுதுமே கண்டதில்லை.

அன்றிரவு வெங்கடாசலம், வீரப்பன், மதுரை — இம் மூவருமாக வெங்கடாசலத்தின் வீட்டில், வெகுநேரம் வரையில் தீர்க்க ஆலோசனையில் ஆழ்ந்திருந்தார்கள். ரெட்டியாரின் கடனைக் குறித்து ஏதோ பேச்சு நடக்கிறது என்பதைத் தவிர, அவளுக்கு வேறொன்றும் தெரியாது; தெரிந்து கொள்ளுவதற்கும் அவளுக்கு இஷ்டமில்லை. அவள் பண்டைக்காலத்து மனுஷி. அவளுக்கு அவள் புருஷன் தெய்வத்துக்குச் சமானமானவன்; புருஷனல்லால் மனைவிக்கு யாதொரு பாத்தியதையும் கௌரவமும் இல்லை யென்பது அவளுடைய கொள்கை. இந்நம்பிக்கை அவளுடைய ஜாதி தர்மம்; பிறப்போடு கூடப் பிறந்தது. இல்வாழ்க்கையில் அவளுக்குத் தெரிந்த கடமை ஒன்றே — பயபக்தியுடனும் அழியாக் கற்புடனும் தன் கணவனுக்குப் பணி செய்வதே. எவ்வளவுக் கெவ்வளவு சரியாக இக்கடமையைச் செய்து வந்தாளோ, அவ்வளவுக்கவ்வளவு அவளுடைய பரசுகம் நிலை நிற்குமென்பது, அவளது பூரண நம்பிக்கை. புருஷனைத் தழுவாமல், பிரத்தியேகமாய்க் கஷ்டசுகம் மனைவிக்கு ஏது? இம்மாதிரி எண்ணங்களை யுடையவளுக்குத்

தன் கணவனுடைய ஆஸ்தி பாஸ்தியில் யாதொரு பற்றுதலும் இராமலிருந்ததில் என்ன ஆச்சரியம்?

அடுத்த வாரமெல்லாம் மதுரை வெகு சுறுசுறுப்பாயிருந்தான். அவன் அடிக்கடி மீனாக்ஷி வீட்டிற்கும் வெங்கடாசலத்தின் வீட்டிற்கும் நடப்பதைப் பார்த்த கிராமத்தார்களுக்குச் சில சந்தேகங்கள் பிறந்தன. அவர்கள், வெங்கடாசலத்தின் நஷ்ட தசைக்காக மிகவும் பரிதபித்தார்கள். ஏழை மக்கள் பரிதாபப்படுவதற்கு மேல் என்ன செய்ய முடியும்? வரவர சமாசாரம் மெள்ள வெளியில் வந்தது. மீனாக்ஷி, வெங்கடாசலத்தினுடைய கடன்களையெல்லாம் தீர்த்துவிட்டதாகவும், அதற்குப் பதிலாக அவனுடைய நன்செய் நிலங்களையெல்லாம் ஸ்வாதீன அடமானத்தில் கைப்பற்றியதாகவும், நிலங்களின் மாசூலை அவள் அனுபவிப்பதால் கடனுக்கு வட்டி கிடையாதென்றும், ஆனால் வெங்கடாசலமோ அவன் வாரிசுதாரர்களோ, அறுபது வருஷத்திற்குள் கடனைத் திருப்பிக் கொடாவிட்டால், நிலங்கள் மீனாக்ஷிக்கோ அவள் வாரிசுதாரர்க ளுக்கோ பாத்தியமாய் விடுமென்றும், எல்லோருக்கும் தெரிய வந்தது. அவன் செய்த காரியம் முட்டாள்தனமானதென்று சிலர் நினைத்தார்கள். மற்றும் சிலர், அப்படிச்செய்திராவிட்டால் அவன் நன்செய் நிலங்களெல்லாம் ஏலத்தில் போயிருக்குமென்று சொல்லி அதை ஆமோதித்தார்கள். ஆனால், எல்லோரும் ஒரு மனமாக, அவன் இனிச் சாப்பாட்டுக்கே கஷ்டப்படுவான் என்பதை ஒப்புக் கொண்டார்கள். புன்செய் நிலங்கள் எவ்வளவு விஸ்தாரமா யிருந்தபோதிலும், அவைகளிலிருந்து என்ன எதிர்பார்க்க முடியும்? மானம் பார்த்த பூமிதானே...

கஷ்டப்படாமல் ஜீவனம் செய்யக் கொஞ்சம் நன்செய் நிலத்தை வைத்துக்கொண்டு, பாக்கி யெல்லாவற்றையும் விற்றுக் கடனை அடைக்க வெங்கடாசலத்திற்கும் அவகாசம் இருந்தது; ஆனால், அவனிடம் அவன் சிநேகிதர்கள் அந்தப் பேச்சையே எடுக்க முடியவில்லை. இன்னும் ஏதோ நல்ல காலம் வரப் போகிறதென்றே அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அதற்குள் தனக்கு மரணகாலம் வந்தாலும், தன் முன்னோர் ஆண்டு வந்த நிலங்களெல்லாம் தன் குடும்பத்தை விட்டு விலகவில்லை என்ற

எண்ணத்தோடு இறந்தாலும் இறப்பானேயொழிய, அவன் அவைகளை ஒருநாளும் விற்கமாட்டான். வெங்கடாசலம் என்றால் அதுதான். இது ஊரெல்லாம் தெரிந்த விஷயம்.

## 9. மானபங்கம்

துறவிகளைத் தவிர்த்து, இவ்வுலகில் திரவியம் தேட ஆசையில்லாதவர் எவரும் இல்லை. அவ்வாசைக்கோர் அளவுமில்லை; அவ்வாசைக்காகப் படும் துன்பங்களுக்கும் கணக்கில்லை. ஆயினும் இத்துன்பங்ளெல்லாம், இருக்கும் பொருளை இழக்க நேரிடும்பொழுது படும் துயரத்திற்கு ஒருநாளும் ஈடாகா. மனிதர்களின் இயற்கை இவ்வாறு அமைந்திருப்பதும் கடவுளின் மாயையே.

ஆறாத் துயரத்துடன், தன் சொத்துக்கள் ஒவ்வொன்றாகத் தன்னைவிட்டு நீங்குவதை வெங்கடாசலம் பார்த்துக்கொண்டே இருந்தான். இக்காரியங்களெல்லாம் மதுரையின் மேற்பார்வையின் கீழ் நடைபெற்றன. முதலில், வருஷக் கணக்காகக் அவனிடம் வேலைசெய்த பண்ணையாட்கள், வேறிடம் பிழைப்புத் தேடிக்கொள்ளக் கண்ணும் கண்ணீருமாக விடைபெற்றுக் கொண்டனர். பிறகு, ஒரு கறவைப் பசுவும் ஒரு ஜதை எருதும் போக, மற்றெல்லா மாடுகளும் விற்கப்பட்டன. அவைகளோடு, பெரிய வைக்கோற்போரும் போயிற்று. அதன் பிறகு, குன்றுபோல் குவிந்திருந்த எருக்குவியலும் அகற்றப்பட்டது. இனி எந்த நன்செய்க்கு எருப் போடவேண்டும்? மற்றும், அநேக சாமான்கள் வெங்கடாசலத்திற்குத் தெரியாமலே விற்கப்பட்டனவென்ற வதந்தி ஏற்பட்டது. அதற்குக் காரணம், மதுரைக்கு வெங்கடாசலத்தின் மனத்தைப் புண்படுத்த இஷ்டமில்லாததே.

வரவர வெங்கடாசலத்தின் வியாதி முற்றிப் பார்சுவ வாயுவாகத் திரும்பி, அவனைப் படுக்கையில் தள்ளிற்று. ஆறுமாதம் படுத்த படுக்கையாய்க் கிடந்தான். பிறகு அவன் ஒருவாறு சமாளித்துக் கொண்டபோதிலும், அவன் உடம்பு அந்த இடியிலிருந்து கரை தேறவில்லை. அவனுக்கு இடுப்பு ஸ்வாதீனமற்றே போய் விட்டது. உதவியில்லாமல் எழுந்து உட்காரக்கூட, அவன் சக்தி யற்றவனாய்விட்டான். இனி வாழ்நாளையெல்லாம் முடமாகவே கழிக்கவேண்டுமோ என்ற பயம், அவனுக்கு அடிக்கடி உதித்தது. ஆனால், ஓயாத நம்பிக்கையும் தைரியமும் உள்ளவனாகையால், என்றைக்காவது ஒருநாள், தன் ஆரோக்கியமும் ஐசுவரியமும் திரும்புமென்று எதிர்பார்த்தான்.

ஒரு வருஷம் கடந்தது. வெங்கடாசலத்தின் வீட்டுப் புது நட வடிக்கைகளெல்லாம் பழையவையாயின. தற்கால நிலைமையைவிடச் சற்றுப் பெருஞ்செல்வாக்கில் எப்பொழுதாவது அவர்கள் வாழ்ந்திருப்பார்களென்ற சந்தேகங்கூட வராதபடி, மாறுதல் அவ்வளவு பூரணமாய் ஏற்பட்டுவிட்டது. வெங்கடாசலம் ஒரு சிறு அறையில் பழைய கட்டிலின்மேல் மல்லாந்து படுத்துக் கொண்டு, கூரையைப் பார்த்துத் தனக்குத் தானே பேசிக் கொள்வதைத் தவிர வேறொன்றும் செய்யமுடியவில்லை. எப்பொழுதாவது, வறுத்த பட்டாணிக் கடலை கிடைத்தால், அதை அவன் ஒவ்வொன்றாகக் கொறித்துக் கொண்டிருப்பான். இவ்வளவு தரித்திர தசையை அனுபவிக்கும் இம்முடவன், ஒரு காலம் ஊரெல்லாம் அவன் பெயரைச் சொன்னாலே, அழுத குழந்தைகூட வாயை மூடும்படியான தோரணையில் இருந்தவன் என்று நிரூபிக்க, அவன் பார்வையில் ஒரு குறியும் காணப்படவில்லை. சதா பத்துப் பேரோடு கலந்திருக்க ஆசைப்படுவோனுக்கு, இப்பொழுது ஏகாந்தமே தோழனாக ஏற்பட்டது. அவனைக் காண வருவோர் நாளுக்கு நாள் குறைந்தனர். வரவர மதுரையும் வீரப்பனுங்கூட வருவது அரிதாயிற்று. அண்ணாமலைத் தாத்தாவின் கண்ணில் பூப்படர்ந்து பார்வையே தெரியாமல் போய்விட்டபடியால், அவர் வருகையும் அடியோடு நின்றுவிட்டது.

எது எப்படியிருந்தபோதிலும், காலத்தின் ஓட்டம் நிற்குமா? மற்றொரு வருஷம் சென்றது. பின்னும் ஒரு வருஷமும் ஆயிற்று. ஆனால், வெங்கடாசலத்திற்கு நற்கதி எவ்வகையிலும் ஏற்பட வில்லை. அதற்குப் பதிலாக, ஐந்நூறு ரூபாய் கடன்தான் அதிகரித்தது. ஏனெனில், ஒரு வருஷம் புன்செய் சாவியாயிற்று; மற்றொரு வருஷம் தானியத்தின் விலை மிகவும் குறைந்தது.

வேலனுக்கு இப்பொழுது கிட்டத்தட்ட பதினாறு வயதிருக்கும். குடும்ப விஷயங்களைப் பற்றிக் கவனிக்க வேண்டிய பாரம் அவன்மேல் விழுந்தது. கவனிக்கவேண்டிய விஷயங்கள் அதிகமாய் இல்லாவிடினும், நாளடைவில் வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டுவது அசாத்தியமாயிற்று. வேலன் நாளுக்கு நாள் பெரியவனாக, அவன் புத்தியும் அதிகரித்தது. இதுவரையிலும் அவன்

கஷ்டமென்பதே அறியான். இப்பொழுது பலவிதத் துன்பங்களில் ஈடுபடவேண்டி வந்தபொழுது, அவனுக்கு ஓர் ஆச்சரியம் உண்டாயிற்றே யொழிய, அவன் மனம் தளரவில்லை. அவன் படும் அவஸ்தையில் நேரம் போவதே தெரியவில்லை. விளையாட்டுப் போல் அவனுக்கு வயது பதினெட்டாகிவிட்டது. அவன் முகத்தில் ஆண்மைத்தனமும் உறுதியும் நிச்சயமும், மேலிட்டு விளங்கின. வெகுகாலத்திற்கு முன்னரே, தனக்கும் தன்னை அருமையுடன் வளர்த்தோர்க்கும் உள்ள சம்பந்தத்தை அவன் அறிந்தான். ஆயினும், எப்பொழுதும்போல் அவர்களை, “அம்மா, அப்பா,” என்றே அழைத்துவந்தான். அவர்களுடைய பெருந்தன்மைக்கும் தயாள குணத்திற்கும், அவர்களை மெச்சினான். அவர்களுக்குத் தான் பட்டிருக்கும் கடனை எவ்விதத்திலும் தீர்த்துக்கொள்ளமுடியா தென்று நினைத்தான். அவர்களுடைய கஷ்ட தசையை நீக்கி, மறுபடியும் அவர்களைப் பழைய நிலைமையில் கொண்டுவந்து வைக்காவிட்டால், தன் ஜன்மம் வீணாகுமென்று நம்பினான். அவர்களுக்குச் சுகத்தைத் தேடித் தருவதற்காகத் தன் உயிரையும் அளிக்கச் சித்தமாயிருந்தான். ஆனால், அவன் உயிரின் மதிப்பென்ன? — திடீரென்று, தன் தந்தையைப்போல் வெளிநாட்டுக்கு ஓடலாமாவென்ற எண்ணம் பிறந்தது. தன் தந்தையைப் பற்றிக் கேட்ட கதைகளெல்லாம் ஞாபகத்திற்கு வந்தன. அவர் இருக்குமிடம் மட்டும் தெரிந்தால்... தன்னை ஏன் ஒரு கங்காணி, பத்து வருஷத்துக் கூலி முன்னதாகவே கொடுத்து அழைத்துக் கொள்ளக் கூடாது? கஷ்டமோ துக்கமோ, நாளுக்கு நாள் அவன் பலவானாய்க்கொண்டே வந்தான். தன் ‘அப்பா’வும் ‘அம்மா’வும் அதற்குச் சம்மதிப்பார்களா? சம்மதிக்கிறது இருக்கட்டும்; தன்னைப் பிரிந்திருக்கச் சகிப்பார்களா? தன்னை உயிருக்கு உயிராய்ப் பாவித்து வரும் அவர்கள், இப்பேச்சைக் கேட்டாலே முர்ச்சை அடைந்து விடுவார்களென்று நம்பினான். என்ன செய்வதென்று அவனுக்குத் தோன்றவில்லை. அப்புறம் வள்ளி வேறு இருந்தாளே... அவளையும் விட்டல்லவா பிரியவேணும்? அவளைப் பற்றி நினைக்கும்போதே அவனுக்கு ஓர் ஆவேசம் உண்டாயிற்று. கொஞ்ச காலத்திற்கு முன்தான், அவள் எவ்வளவு அழகு வாய்ந்தவள் என்பதை அவன் கவனித்தான். வள்ளிக்கு மிஞ்சின அழகு யாருக்குமே இருக்காதென்று திண்ணமாக நம்பினான். அவளுக்குத் தன்மேல் இருந்த அளவற்ற அன்பையும் அவன் அறிவான். ஆனால், வள்ளிக்கு மட்டும்

தெரியாதா அவன் அவள்மேல் வைத்திருந்த வாஞ்சை? இருந்தபோதிலும், வரவர அவன் இது வரையிலும் உணராத ஒரு புதிய உணர்ச்சி, அவன் நெஞ்சத்தை ஹிம்ஸிக்கத் தொடங்கிற்று. எப்பொழுதும் அவளுடன் கூடிக் குலாவ உள்ளூற ஆசையிருந்த போதிலும், அவளைக் காணும் போதெல்லாம், தன்னை அறியாமல் கொஞ்சம் லஜ்ஜை உண்டாயிற்று. இதே மாதிரி, அவளும் வெட்கப்படுகிறாளென்பதை அவன் கண்டு கொண்டான்.

வள்ளிக்கு இப்பொழுது ஏறக்குறைய பதினாறு வயதிருக்கும். அவர்கள் ஜாதி வழக்கப்படி, அவளுக்குக் கல்யாணம் செய்ய வேண்டிய பிராயந்தான். அவர்கள் சிறு குழந்தைகளாயிருக்கும் பொழுது, அவர்கள் இருவரையும் பற்றிப் பலர் அநேக விஷயங்களைப் பேசினது ஞாபகத்துக்கு வந்தது. அது வெகுகாலத்திற்கு முன்போல் தோன்றியது. பார்க்கப்போனால், அது நாலு ஐந்து வருஷங்கள் கூட இராது. ஆனால், அதற்குள் தன் குடும்பத்தில் எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன... இதற்கு மேல் அவன் மனம் ஓடவில்லை. முன்னிருந்த சுகத்தின் நினைவும் தற்சமயமுள்ள கஷ்டத்தின் கொடுமையும், அவன் மனத்தைச் சிதறடித்தன.

இவ்வாறு பற்பல யோசனைகள் அவன் மூளையைக் கலங்கச் செய்தன. பெரிய நகரங்களில் லக்ஷாதிபதிகள் வசிப்பதாகக் கேள்விப்பட்டிருந்தான். அப்படிப்பட்டவர்களில் யாராவது ஒருவர் கொஞ்சம் மனம் வைத்தால், தன் ‘அப்பா’வின் கஷ்டம் தீர்ந்து விடுமேயென்று நினைத்தான். அவன் வேண்டுவது கடன்தானே? இனாமா கேட்டான்? தன் ஜீவியத்திற்குள் வட்டியும் முதலுமாகத திருப்பிக்கொடுக்க மாட்டானா? அவர்களுக்குச் சந்தேகம் இருந்தால் தன் நெஞ்சைப் பிளந்து பார்க்கட்டும்... ஆனால், அப்படிப்பட்ட ஆசாமிகளை எப்படி நாடுவது? இல்லாவிடில், வேறு எந்த விதமாய்த் தன் ‘அப்பா அம்மா’வின் நலத்தைத் தேடலாம்? இப்படி அவர்களுடைய பொறுப்பு மனத்தில் உறுத்த உறுத்த, அவன் மனம் கலங்கித் தனக்குத் தூக்கமோ விழிப்போ வென்று கூடச் சந்தேகிக்கலானான். அவன் முன்போல அடிக்கடி வள்ளி வீட்டுக்குப் போவதை நிறுத்தி விட்டான். அவளுக்குக் கொண்டு போய்க் கொடுக்க என்ன இருந்தது? அவளுடைய தகப்பனாருக்கும் கஷ்ட நிஷ்டூரங்கள் இருந்த

போதிலும், தன் ‘அப்பா’வைப் போல் அவ்வளவு மோசமான ஸ்திதியில் அவர் இல்லை. ஆனால், இதனால் வள்ளியின் நடத்தையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. அவள் தாய் லக்ஷ்மியைப்பற்றி அதே மாதிரி சொல்ல முடியாது.

அவள் வழக்கப்படி நடந்துகொள்வது போலப் பாவித்தாலும், முன்மாதிரி தன்னோடு பேச இஷ்டப்படவில்லை என்பது அவனுக்கு நன்றாய்ப் புலப்பட்டது. அவள், தன் குடும்பத்திலிருந்து சற்று விலகி இருக்க யத்தனிப்பதையும், அவன் கவனித்தான். ஆனால் வள்ளியோ, அவன் வீட்டிற்கு அடிக்கடி வர ஆரம்பித்தாள். அவன், அவள் வீட்டிற்குப் போகாததைக் குறித்து அவள் குற்றம் பாராட்டவேயில்லை. வந்தபொழுதெல்லாம், தன் ‘அம்மா’வின் மேல் முன்னினும் இருமடங்கு அதிகமாக அன்பு பாராட்டினாள். இச்சமயங்களில் அவனும் வள்ளியும் பேசுவது மிகக் குறைவாயிருந்தபோதிலும், அவர்களுக்குப் பரஸ்பரம் ஏற்பட்டிருந்த உணர்ச்சி, பதின்மடங்கு அதிகரித்தது.

வள்ளியின் தாய் அவர்களுடைய வீட்டை எட்டிப் பாராமலே அவர்களை அசட்டை செய்துகொண்டிருக்கும் பொழுது, தன் ‘அம்மா’ மட்டும் அவள் வீட்டிற்கு அடிக்கடி போவது, வேலனுக்கு விசனத்தைக் கொடுத்தது. பல தடவைகளில் இதைத் தன் தாய்க்கு அவன் எடுத்துக் காட்டினான். ஆனால், அலமேலு அப்பாவி... அந்த விஷயத்தைப்பற்றி லக்ஷ்மியையே கேட்டுவிட்டாள். பிறகு லக்ஷ்மி, வீட்டை விட்டு நகராதபடி அவ்வளவு வேலை தனக்கு இருந்ததாகச் சொல்லிய பொழுது, அதையும் அவள் நம்பிவிட்டாள்.

ஒருநாள் சாயங்காலம், ஆற்றோரம் இருந்த அடர்ந்த படுகையில் வேலன் அலைந்து கொண்டிருந்தான். அவனது பசுவின் கண் அடிபட்டு நீர் வடிந்து கொண்டிருந்ததால், அதற்கு வைத்தியம் செய்ய ஒரு மூலிகையைத் தேடிக்கொண்டிருந்தான். அவ்விட மெல்லாம், இலந்தை மரங்களும் நொச்சிப் புதர்களுமாக நிறைந்திருந்தன. பூமியில் அங்கங்கே சிவந்து பழுத்த இலந்தைப் பழங்கள் உதிர்ந்திருந்தன. வேலன் ஒன்றைப் பொறுக்கி ருசிபார்த்துக் கொண்டிருக்கையில், அருகிலிருந்த ஒரு புதருக்கப்பால் பேச்சுக் குரல் கேட்டது. அவன் சற்றுக் கவனித்துக் கேட்டான். அங்கே, மல்லனும் மாரியும் முனியனும் இருப்பதாகத் தெரியவந்தது. மாரியும் முனியனும் பொறுக்கிகள்

என்று அவனுக்குத் தெரியும். யாராவது கடிக்க இரண்டு துண்டங்கள் போட்டால், நாயைப்போல் பின் தொடருகிறவர்கள். அவர்களுடைய துஷ்ட சம்பாஷணையிலிருந்து, அவர்கள் ஏதோ திருட்டுவேலைக்கு அங்கே கூடியிருப் பதாக அவனுக்குத் தோன்றியது. தான் அவர்களுக்குத் தெரியாதிருக்கும் பொருட்டு, ஓசை செய்யாமல் அவன் அந்தப் புதரில் மெள்ள நுழைந்தான். அப்புதரின் நடுவில் கொஞ்சம் மணல் பாய்ந்த காலிநிலம் இருந்தது. அதற்குள், நாலு பக்கங்களிலும் கோவைக் கொடி அடர்ந்து திரைபோட்டாற்போல் தொங்கிக் கொண்டிருந்தது. தரையோடு தரையாய்ப் படுத்துக்கொண்டு, சத்தம் இல்லாமல் ஒரு கொடியைத் தள்ளிப் பார்த்தான். அவர்கள் கை கால்கள் மட்டும் காணப்பட்டன. மற்றொரு கொடியை விலக்கினான். அவர்கள் செய்வதெல்லாம் நன்றாகப் புலப்பட்டது. அப்படியா? திருட்டுத்தனமாய்க் குடிக்கவா ஆரம்பித்துவிட்டார்கள்? மல்லனுக்கு அநேக கெட்ட நடத்தைகள் உண்டென்பது வேலனுக்குத் தெரியும். ஆனாலும், குடியும் உண்டென்பது அவனுக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. அவர்களுடைய காரியம் முடிந்துவிட்டது. காலிக் கலயங்களை அவர்கள் எறிந்துகொண்டிருந்தார்கள். நல்லகாலமாய், ஒன்று வேலன் மீது விழாமல் தப்பியது. மல்லன் வெகு உற்சாகமாயிருந்தான். அவனுடைய அட்டகாசமான பேச்சானது, சீவனற்ற அவன் தேகத்திற்கு ஒத்திருக்கவில்லை. சம்பாஷணை படிப்படியாக மல்லன் கல்யாணத்தில் வந்து இறங்கிற்று. அண்ணன் சோளனுக்குக் கல்யாணமாகாமல் தம்பி மல்லனுக்கு எப்படியாகுமென்று முனியன் ஆஷேபித்தான்.

“அது நம்ப சாதி வளக்கத்துக்கு விரோதமாச்சே. நீ பண்ணிக்கலாமின்னு சோளன் உத்தரவு கொடுத்திட்டா, அப்போ சரி,” என்றான் முனியன்.

“உத்தரவு கொடுக்கிறதுக்கு அவன் யாரு? அவன் ஒரு எச்செப் பொறுக்கற நாயி. அவன் எங்கூட்டுப் பக்கங்கூட வரமாட்டானே... அவனை ஊட்டைவிட்டுத் தொரத்தி எத்தினி நாளாச்சு... அவன் இனிமே மருவாதியா இருந்தால்கூடச் சோறும் துணியுந்தான் கிடைக்கும். எங்க அத்தை, எல்லாம்

அப்பவே ஏற்பாடு பண்ணிட்டாங்களே. அத்தைக்குத் தெரியாததா? அவன் பாச்சா ஒண்ணும் பலிக்காது,'' என்றான் மல்லன்.

முனியன், அவன் வார்த்தையை அங்கீகரித்ததை உணர்த்தத் தலையை ஆட்டினான்.

''இருந்தாலும், நீதாண்டா அதிஷ்டக்காரன். ஊருக்கெல்லாம் அளகான பொண்ணை அடிச்சுட்டே,'' என்று நைச்சியமாக, மாரி சொன்னான்.

''அது யாருடா?'' என்று முனியன் வினவினான்.

''நீ முனியன்கிட்ட இன்னும் சொல்லல்லியா?'' என்று மாரி, மல்லனைப் பார்த்து ஆச்சரியத்துடன் சொன்னான்.

மல்லன் முகம் சந்தோஷத்தால் பூரித்தது. அவன் பருத்த விழிகள் பிதுங்கி வருவனபோல் தோன்றின.

''அவனுக்குத் தெரியுமாங்காட்டியுமின்னு இருந்தேன். எங்கே, உன் சாமர்த்தியத்தைப் பார்க்கலாம். முனியா... இந்த ஊருக்கெல்லாம் அளகான பொண்ணு ஆரு?'' என்று கர்வத்துடன் கழுத்தைச் சாய்த்துக்கொண்டு கேட்டான். அப்பொழுது அவன் மெலிந்த கழுத்தையும் பருத்த தலையையும் பார்த்தால், குருவியின் தலையில் பனங்காயை வைத்தாற்போல் இருந்தது. முனியனுக்குப் பொறுக்க முடியாத சிரிப்பு வந்தது. ஆனால், வெகு சூதுக்கார னாகையால் சிரிப்பை அவன் பேச்சில் மறைத்தான்.

''எனக்கு ஏன் தெரியாது? ஆனால், அவளை வேறொத்தனுக்குக் கட்டிக் கொடுக்கறாப்படியல்ல பேசிக்கிறாங்க?''

''நீ யாரைச் சொல்றே?''

''வள்ளியைத்தான் வேலனைத்தான்.''

“வள்ளி என்னமோ சரிதான். ஆனால், வேலன் ஆர்ரா அவன்? பிச்சைக்காரப்பய... அவனுக்குத் திங்கக்கூட சோறு இல்லையே. அவனுக்குப் பொண்ணு வேறே கொடுத்திடுவாங்களோ? அன்னிக்கி எங்க ஊட்டுலே அவுங்கம்மா என்ன சொல்லிக் கிட்டிருந்தாங்க தெரியுமா? வள்ளியைப் பாளும் கெணத்துலே யாவது தள்ளுவாங்களாம்; அவனுக்குக் கட்டிக் கொடுக்க மாட்டாங்களாம். வேலனூட்டு நஞ்சை எல்லாம் எங்ககிட்டே வந்திட்டுது. தெரியுமல்ல? இனிமே, ஒரு மணி நெல்லுகூட கண்ணாலே பாக்கமாட்டாங்க. கொஞ்சநாள் போனா, சோத்துக்கே திண்டாட்டம்தான்.”

வேலன் கோபத்தோடு பல்லைக் கடித்தான். ஆனால், அவன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, அசைவற்றுப் பல்லிபோல் தரையோடு தலையாய்க் கிடந்தான்.

“அவன் சொந்த அப்பன் பிச்சைக்காரன்தானே? மகன் மட்டும் எப்படியிருப்பான்?” என்றான் மாரி, பல்லை இளித்துக்கொண்டு.

“அவனை வளத்த அப்பனும் அந்தக் கதிக்கி வந்திட்டானே. பாவம்... நோக்காடு முத்திப்போச்சாம். ரொம்ப நாள் தாங்க மாட்டாங்கராங்க,” என்றான் முனியன்.

“அவன் செத்தாலும் பொளச்சாலும், வேலன் எரந்துதான் குடிக்கணும்” என்றான் மாரி.

“நீ சொல்றது, இப்போ எரக்காதெத் திங்கிறாப்படி... எனக்குத் தெரியும். ஆறு மாசமா எங்க மாமியா ஊட்டேருந்து, அவங்களுக்கு அரிசி பருப்பு வருது — என்ன முனியா, சிரிக்கிறயே? என்னைத் தவிர வள்ளியை எவன் கட்டுவான்?”

“நீ பெரிய மனுசன், அப்பா, உன்னாலே ஆவாதது என்ன இருக்குது?” என்றான் முனியன்.

“இந்தச் சங்கதி அந்தக் கௌட்டு மொடவனுக்குத் தெரியுமோ? அடேயப்பா, அவன் எவ்வளவு கிருவம் பிடிச்சவன்...” என்றான் மாரி.

“அவன் என்னத்தைக் கண்டான்? அந்தத் தடிப்பய வேலனுக்கே தெரியாதே. அவனுக்குக் கொஞ்சனாச்சும் மூளையிருக்குதா? ஊட்டுலே சாமான் இல்லாமே, வேளைக்கு வேளை சோறு எங்கிருந்து வருதுன்னிட்டுத் தெரிஞ்சுக்க வேண்டாமா? இந்தச் சமாசாரம் எனக்கு எப்படித் தெரிஞ்சிச்சுன்னா — ஒருநாள் எங்க அத்தையும் மாமியாளும், எங்க கொல்லையிலே கருப்பிலை மரத்துக் கீளே பேசிக்கிட்டு இருந்தாங்க. நான், பக்கத்திலே கேவிரு தட்டு அடுக்கியிருந்திச்சே, அதுக்குப் பொறவே கன்னுக்குட்டிக்கித் தும்பு திரிச்சிக்கிட்டு இருந்தேன். நான் இருந்தது அவுங்களுக்குத் தெரியாது. அப்போ எல்லாச் சங்கதியும் வெளியே வந்திச்சு. எங்க மாமியா இருக்காளே, ரொம்ப சாமர்த்தியம்... வேலன் அம்மாவைத் தள்ளி, அப்பாலத்தான் வச்சிருக்கா. அவுங்க ஊட்டுக்கே போவற தில்லை; ஆனால், என்னா சகாயம் வேண்ணாலும் பண்றாங்க. அப்படிச் செஞ்சாத்தான், தன் கை கீலே உளுந்துபோச்சீன்னிட்டு வேலன் அம்மாவுக்குத் தெரியுமாம் — பாரேன்... கை கீளே உளுந்து, மருவாதியும் கெட்டுப்போனா, சம்பந்தம் எப்படி வச்சிக்கிறது? அதுக்காவத்தானாம் இவ்வளவு பாடும். வேலன் ஊட்டுக்குச் சாமான் எப்படி அனுப்புறாங்க தெரியுமா? — வள்ளி கொடத்தை எடுத்துக்கிறது, அதிலே வேண்டிய சாமானைப் போட்டுக்கறது, ஆத்துக்கு தண்ணிக்குப் போனாப்பலே போயி வேலன் ஊட்டுலே பூந்து, எல்லாத்தையும் கொட்டீட்டு, அப்பாலே ஆத்துக்குப் போய் வந்திடுறதாம். இந்த ரகசியம், வேலன் அம்மா, எம் பொஞ்ஜாதி, எம் மாமியா, இந்த மூணுபேருக்குள்ரவே அடங்கிப்போச்சு. எவ்வளவு கெட்டிக்காரங்க பாத்தையா?”

“நீ இப்பவே வள்ளியை ஒம் பொஞ்ஜாதி ஆக்கிட்டையே,” என்று முனியன் சிரித்தான்.

“ஏன் ஆக்கக்கூடாது? நான் இல்லாமே, வள்ளிக்கு எவன் தாலி கட்டிடுவான்?” என்று மல்லன் தன் மார்பைத் தட்டினான்.

வேலன், காவேரி திடீரென்று பெருகி உடனே தன் ஊரை முழுகடிக்கக் கூடாதாவென்று நினைத்தான். அப்பொழுதுதான் தன் குடும்பத்திற்கு ஏற்பட்ட அகௌரவம் பரவாமல் இருக்கும். அந்த முழிகண்ணன், அந்தச் சோனிப்பையன், தன்னை மடையனென்று சொன்னதில் என்ன தப்பு? வீட்டில் சாமான்கள் இல்லாததைத் தெரிந்து கொள்ளாமல் இருந்தேனே... அவனுக்குமேல் அவன் ‘தாய்’. அவளை விட மூட ஸ்திரீ, உலகில் யாராவது இருப்பாளா? — சுயமரியாதை என்பதே அறியாத ஒரு ஸ்திரீயும் உண்டா? ஆனால், அவன் தன்னைப் பெற்றெடுத்த தாயா? கேவலம் வளர்த்தவள். அவன், மனோவேகத்தைச் ‘சட்’ என்று அடக்கிக் கொண்டான். ஒன்றும் அறியாத அப்பேதையைப் பற்றி அவ்வாறு நினைப்பது தர்மமாகுமா? தன் ‘அப்பா’, ஒரு மோசக்காரி போடும் பிச்சையைத் தின்றா பிழைப்பது? என்ன கஷ்டகாலம்... என்ன அவமானம்... விஷயம் தெரிந்தால், அப்பாவுக்கு வெறிபிடித்து விடுமே...

‘வரவர அவருடைய ஆரோக்கியமும் வெகு விரைவாகக் குறைந்துகொண்டு வருவதல்லாமல், அவருடைய புத்தியும் க்ஷீண தசையை அடைந்துகொண்டு வருகிறது. அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டால் — எவ்வளவு அநுகூலமாயிருக்கும்... அவர் கஷ்டம் அவருக்குத் தெரியாமற் போகுமே... இவ்வளவு துன்பங்களைக் கொடுத்ததற்குக் கடவுள் சீக்கிரம் சாவைத் தரக்கூடாதா?’ உடனே, மெய்மறந்து கைகளைக் கூப்பித் தன் ‘அப்பா’வுக்குச் சீக்கிரம் மரணம் ஏற்படவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்தான். இதர ஸமயங்களில் இச்செய்கை மிகவும் அறிவீனமானதென்று அவனுக்குப் புலப்பட்டிருக்கலாம்; ஆனால், தற்சமயம் தன்னால் தன் ‘அப்பா’வுக்குப் பண்ணக்கூடிய உபகாரம் இதுதான் என்று அவன் நம்பினான். அவனுக்கு அமைதியாய் இருக்க முடியவில்லை. திண்டு மிண்டாடினான். மல்லனும் அவனுடைய சிநேகிதர்களும் சில நிமிஷங்களுக்கெல்லாம் அவ்விடத்தை விட்டுப் போயிராவிட்டால், இவனைக் கட்டாயம் கண்டு பிடித்திருப்பார்கள்.

அந்தச் சர்ப்பம் வள்ளியிருந்தாளே, அவளை என்னதான் செய்யக்கூடாது... என்ன மோசம்... என்ன பித்தலாட்டம்... அவளுக்குக் காசும் பணமும் நகையும் நட்டும் தேவையானால், அவள் இஷ்டம்போல் நடந்துகொள்வது தானே... தன்னை ஏன் ஹிம்ஸிக்க வேண்டும்? என்ன பாசாங்கு... பாசாங்கா? — அல்ல, தன்னை நிந்தித்து அவமதித்துத் தன் இகழ்ச்சியான தரித்திர தசையைத் தனக்குச் சுட்டிக்காட்டும் ஒரு சூது... தன்மேல் இவ்வளவு கட்சி கட்டுவதற்குத் தான் அவளுக்கு என்ன அபசாரம் செய்தான்... ஒரு க்ஷணம் தன்னைப்பற்றித் தானே பரிதபித்துக்கொண்டான். அடுத்த வினாடியில், அக்கினியில் எண்ணெய் விட்டதுபோல் அவன் உக்கிரம் ஜ்வாலையிட்டது. அந்தச் சிறுக்கியையும் அவள் தாயையும் கண்டங் கண்டமாக நறுக்கிவிட வேண்டுமென்று நினைத்தான். அவன் சங்கதி அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்களுக்குக் கட்டாயம் தெரியப்படுத்துவான்; அதுவும் வெகு சீக்கிரத்தில்... பல்லைக் கடித் தான்; கைக்கருகிலிருந்த கோவைக் கொடியைக் குரங்குப் பிடியாகப் பிடித்து உலுக்கினான். வெடி குண்டினால் நன்றாகக் காயப் படுத்தப்பட்ட ஒரு வேங்கை, போராடச் சக்தியுமற்றுத் தோல்வியை அங்கீகரிக்கவும் சம்மதியாமல் உறுமித் தவிப்பது போல், அவனும் தவித்தான்.

## 10. காதலின் துன்பம்

அன்றிரவு வேலன், சாப்பிடாமல் சற்று முன்னதாகவே படுத்துக்கொண்டான். தனக்கு உடம்பு சுகமில்லையென்று, அவன் தன் தாய்க்குச் சமாதானம் சொல்லிவிட்டான். ஆனால், உண்மையில் அவன் மனதுக்குத்தான் சுகமில்லை. தூக்கம் வராமல் ஒரு பழைய கயிற்றுக் கட்டிலில், அவன் புரண்டு கொண்டேயிருந்தான். எண்ணாத எண்ணங்களெல்லாம் எண்ணினான். எது எவ்வாறு முடியுமென்று அவனுக்குத் தெரியவில்லை. நினைக்க நினைக்கச் சந்தேகமும் அவநம்பிக்கையும் அதிகரித்தன. ஆனால், ஒரு விஷயம் மட்டும் அவனுக்கு நன்றாகப் புலப்பட்டது. தனக்கு இருக்கும் கொஞ்ச நஞ்சம் சுயமரியாதையைக் காப்பாற்றவேண்டுமானால், அவன் எவ்வேலையையாவது செய்து, தன்னையும் தன் தாய் தந்தையரையும் போஷித்துக் கொள்ள வேண்டுமென்பதுதான் அது. ஆனால், தனக்குச் சுயமரியாதை என்று ஏதாவது இருந்ததா? அந்த அக்கிரமக்காரிகள், ஒருவன் தூங்கும்போது தலையில் கல் போடுவது போலன்றோ செய்துவிட்டார்கள்... அவர்களைச் சும்மா விட்டுவிடுவதா? அவன் இரத்தம் கொதித்தது. தன் மனோ பாவத்தில், தன் அரிவாளால் அவர்கள் கழுத்துக்களைச் சீவுவதாக நினைத்தான். பிறகு தன் ‘அப்பா’வுடையது, அப்புறம் தன் ‘அம்மா’ வுடையது, கடைசியாகத் ‘தன்’னுடையது... — அவன் எண்ணம் நிறைவேறிற்று... அவன் தலையணை வேர்வையால் நனைந்து விட்டது. படுக்கை விட்டு எழுந்து, வேர்வையைத் துடைத்துக் கொண்டான். நடு இரவு இருக்கும். எங்கும் இருட்டாயிருந்தது. அமைதியில்லாமல், அவன் முற்றத்தில் உலாவினான். தெருக் கோடியில் ஒரு நாய் குரைக்கத் தொடங்கிற்று. அது அவன் புண் பட்ட மனத்திற்கு வேதனையைக் கொடுத்தது. பிறகு, சுடுகாட்டுப் பக்கத்திலிருந்து ஒரு நரியின் ஊளை கேட்டது. உடனே மற்றொன்று ஆரம்பித்தது. பிறகு, பின்னும் ஒன்று சேர்ந்து கொண்டது. இரண்டு நிமிஷங்களுக்குள், உலகத்திலுள்ள நரிகளெல்லாம் ஒன்றுகூடி ஊளையிடுவதுபோல் காணப்பட்டது. அது வேலனுக்கு ஒன்றும் புதிதல்ல. ஆனால், இப்பொழுது அது சுடுகாட்டுப் பக்கத்திலிருந்து வந்ததால், பற்பல எண்ணங்களை உண்டுபண்ணிற்று. வேலன் படித்தவனல்ல. ஆனால், சென்ற நான்கு ஐந்து வருஷங்களுக்குள் அவனுக்கு

நேர்ந்த சம்பவங்களிலிருந்து, அவன் இவ்வாழ்க்கையைக் குறித்து அடிக்கடி சிந்திக்கலானான். நூதன உணர்ச்சிகள் எற்பட்டன. சில, வெகு ஆச்சரியத்தை உண்டு பண்ணித் தன் சக்திகளைத் தானே அறியாததுபோல் ரூபித்தன. மற்றும் சில, அவன் மனத்தைக் குத்திக் கிளறி, அவன் இருதயத்தைச் சித்தரவதை செய்தன. சுடுகாட்டு நினைவு வரவே, அங்கே மண்ணுக்கு இரையானவர்களின் ஞாபகங்களும் வந்தன. ஐயாக் கண்ணுவைப் போலத் தைரியசாலியை அவன் எங்குமே பார்த்ததில்லை. பயமென்பதே அவனுக்குத் தெரியாது. அப்படிப்பட்டவனைக் காலரா, இரண்டு மணிநேரத்தில் அடித்துப் போட்டு விட்டதே... அப்புறம் நாச்சியப்பன் மட்டும் என்ன? அவனுக்கு விசனமென்பதே தெரியாதே. அவன்கூட இருந்தாலே போதுமே; நாளெல்லாம் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கலாமே. நாலு நாள் காய்ச்சலில், இருந்த இடம் தெரியாமல் போனானே... ஓ, இன்னும் எவ்வளவோ பேர்கள்... அவர்களுடைய கதி என்னவாயிற்று? மானிடர் ஓய்வில்லாமல் மனக்கோட்டை கட்டுவதைப் பார்த்துச் சுடுகாடு பரிகாசம் செய்வதுபோல் தோன்றிற்று. ஆயினும், வாழ்க்கையில் என்ன வேடிக்கை... என்ன ஆனந்தம்... தனக்குமட்டும் ஒரு புதையல் அகப்பட்டால், என்ன என்ன செய்யமாட்டான்? ‘அப்பா’வின் கஷ்டமெல்லாம் காற்றாய்ப் பறந்துவிடுமே.

கண்ட இடங்களில் புதையல்கள் இருப்பதாகச் சொல்லுகிறார்களே; தனக்கு ஒன்று கிடைக்கக்கூடாதா? அவைகளைப் பேய்கள் காப்பதாயும் பலிகொடுத்தால் விடுவிக்கும் என்றும், அவன் கேள்விப்பட்டிருக்கிறான். தன்னைப் பலிவாங்கிக்கொண்டு, தனக்கு ஒரு பேய் உபகாரம் செய்யக்கூடாதா? ஒரு பேயை எப்படி நாடுவதோ தெரியவில்லையே. இவ்வாறு நினைத்துக்கொண்டே, சரலேன்று தன் மனப்போக்கை அடக்கினான். தனக்குப் பைத்தியம் பிடிக்க ஆரம்பித்துவிட்டதா என்ன? அவன் பெருமூச்சு விட்டான்; தலையைக் கழுத்து வலிக்கக் குலுக்கினான்; மூளையை யதா ஸ்தானத்தில் வைப்பதற்குப் போலும்... என்ன பண்ணியும், அவனுடைய ‘அப்பா அம்மா’வினுடைய கஷ்ட தசை, அவன் மூளையை மேன்மேலும் தாக்கிக்கொண்டே இருந்தது — ஒன்றன்பின் ஒன்றாக. தன் சொந்தத் தகப்பனாகிய அப்பாவுவின் நினைவு வந்தது. அவன் பரதேசத்தில் இருந்தானோ

இறந்தானோ, அவனுக்குத் தெரியாது. பினாங்கு, சிங்கப்பூர் சென்றவர்களில் எவ்வளவு பேர் பணத்தோடு திரும்பி வரவில்லை... தன் தகப்பனும் அப்படி வந்திருக்கக்கூடாதா? அப்படி வந்திருந்தால், எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்? தன் 'அப்பா', 'அம்மா', தகப்பனார், தான் எல்லாரும் ஒன்றுகூடித் தங்களுடைய நிலங்களையெல்லாம் மறுபடியும் கை வசப்படுத்திக்கொண்டு, எவ்வளவு சுகமாக வாழலாம்... அப்பொழுது அவன் வள்ளியை மணப்பதற்கு யார் தடை சொல்லமுடியும்? மறுபடியும் தலையைப் பலமாகக் குலுக்கினான். புத்தி பிசகுவது போல் பட்டது. அவனா வள்ளியை மணப்பது... அந்த மானங் கெட்ட கழுதையையா? தன் கஷ்டத்தைப் பார்த்துப் பரிகசித்து அவமதிக்கும் அந்த நீதியற்ற பேயையா தான் கட்டிக்கொள்வது... ஒருவேளை, அவள்மேல் தப்பு ஒன்றும் இராது; எல்லாம் அவள் தாயின் தூண்டுகோலா யிருக்கலாமென்று சந்தேகம் பிறந்தது. இருந்தால்மட்டும் என்ன? அவள் சிறு குழந்தையா? வயது பதினாறு ஆயிற்றே. அவள் தோழிகளில் சிலர் அப்பொழுதே தாய்மார் ஆயினரே... முடியவே முடியாது. அவளை உதறி எறிய வேண்டியதுதான். நல்லவேளை, இந்தச் சந்தர்ப்பங்களால் அவளுடைய நிஜ ஸ்வபாவம் வெளிவந்தது. நல்லவேளையா? எது நல்லவேளை? தனக்கு நிஜமாகவே புத்தி பிசகிவிட்டதா? அந்தக் கேடுகெட்ட கழுதையின் குணத்தைத் தான் தெரிந்து கொள்வதற்காகவா, தன் அப்பாவும் அம்மாவும் இந்தக் கதிக்கு வரவேண்டும்? என்ன மடத்தனம்... அவளைச் சிக்ஷிக்கத்தான் வேண்டும்; ஆனால் அவசரப்படக்கூடாது. பொறுத்து, நன்றாய் ஆலோசித்துச் செய்யவேண்டிய வேலை அது. அவள் சாகும் வரையில் மறவாதிருக்கும்படியான தண்டனையை அவளுக்கு அளிக்க வேண்டும். அதுவரையில், அவளோடு சிநேகமாயிருப்பது போலவே நடிக்கவேண்டும்.

சரி, அதெல்லாம் இருக்கட்டும். இப்பொழுது அவன் செய்ய வேண்டிய வேலை என்ன? இனித் தன் குடும்பத்தின் காலக்ஷேபத்திற்கு அவன் சம்பாதிக்காவிட்டால், நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாவதே நலமென்று தோன்றிற்று! உடனே, ஐந்து மைல் தூரத்திலுள்ள மஞ்சத்திடல் கிராமத்தில், வாய்க்கால் வெட்டு வேலை நடப்பது ஞாபகத்திற்கு வந்தது. தினந்தோறும் நூற்றுக் கணக்கான மனிதர்கள் வேலை செய்துவந்தார்கள். தனக்கும் வேலை

கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ஆரம்பத்தில் நான் கூலி வேலைசெய்வது யாருக்கும் தெரியக்கூடாது. தன் 'அம்மா'விடம் சொல்லித்தான் தீரவேண்டும். அவள் தடுத்தால், அப்பொழுது அவளால் 'அப்பா'வுக்கு ஏற்பட்ட அபகாரத்தை எடுத்துக் காட்டவேண்டும். ஆனால், 'அப்பா'வுக்கு மட்டும் அவன் கூலிவேலை செய்வது தெரியவேகூடாது. அம்மாவைச் சொல்லவேண்டாமென்று எச்சரிக்கை செய்யவேண்டும். மற்றபடி, 'அப்பா'விடம் வந்து சொல்வார் யாரும் இல்லை. இருந்தாலும், அவன் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

இம்மாதிரி மனக் குழப்பத்தில் வேலன் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது, கோழி கூவிற்று. வேலன் மிகவும் அயர்ந் திருந்தான். பொழுது விடிய இன்னும் ஒருமணி நேரம்தான் இருக்கும். மறுபடியும் படுத்துக்கொள்ளலாமா வேண்டாமா வென்று சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும் பொழுது, படபட வென்று மழைத் துளிகள் விழுந்தன. உடனே அவன், தாழ்வாரத்தில் சற்று வெளிப்பக்கமாயிருந்த கட்டிலை, நனையாதபடி சுவரோரமாய்த் தள்ளி, அதன்மேல் உட்கார்ந்தான். சில நிமிஷங்களுக்கெல்லாம் மழை நின்றது. பிறகு, சுகமான குளிர்ந்த காற்று அவனைத் தூங்கச் செய்வதுபோல் வீசிற்று. வேலன் படுத்துக் கொண்டான்; மறு நிமிஷத்தில் உறங்கிவிட்டான்.

விடிந்து வெகு நேரமாய்விட்டது. மணி எட்டிருக்கும். இன்னும் வேலன் தூங்கிக் கொண்டேயிருந்தான். தெருவில் தயிர்க்காரி கூவுவதும் தன் தாய் வீட்டில் நடமாடுவதும், அவனுக்கு லேசாக, ஏதோ தூக்கத்தில் கிள்ளினாற்போல் இருந்தன. 'திடும்' என்று ஒரு பெரிய செப்புப் பாத்திரத்தைக் கீழேபோட்டு உடைப்பது போல ஓர் உரத்த சத்தம் கேட்காமல் இருந்தால், அவன் இன்னும் ஒரு மணி நேரம் தூங்கியிருப்பான். ஆனால், இந்த அதிர்ச்சியைக் கேட்டு அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்து, இடுப்பைவிட்டு நழுவும் வேஷ்டியை ஒருவாறு சரிப்படுத்திக்கொண்டு, விழித்துப்பார்த்தான். தனக்கு முன் ஏழு எட்டடி தூரத்தில், வள்ளி குப்புற விழுந்து கிடந்தாள். அவள் பக்கத்தில் சாயந்து கிடந்த ஒரு பித்தளைக் குடத்திலிருந்து, அரிசி சிந்தினவாறு இருந்தது. உடனே, வேலனுக்கு முந்தின நாள் சாயங்காலத்துச்

சம்பவங்கள் அனைத்தும் மனத்தில் மின்னல் போல் பறந்தன. விஷயத்தைக் கிரஹித்துக் கொண்டான். விதி, வள்ளியின் அயோக்கியத்தனத்தை ரூபிப்பதுபோல இருந்தது. அவனுக்கு ஆத்திரம் கிளம்பிற்று. அங்கேயே அவளை நையப் புடைக்கலாமென்று பார்த்தான். அவள் எழுந்திருப்பதற்கு மிகவும் கஷ்டப்பட்டாள். நல்ல அடி விழுந்திருக்கும்போல் தோன்றிற்று. கோபத்தைக் கஷ்டத்துடன் அடக்கிக்கொண்டு, அவளிடம் சென்று, ‘‘அடி பட்டதா என்ன?’’ என்று துடுக்குடனும் அடங்கா வெறுப்புடனும் கேட்டான். அவன் குரல் தயா தாக்ஷிண்யமற்று இருந்தது. வள்ளிக்கு உடம்பெல்லாம் பதறிக் கொண்டிருந்தது. வாய்திறவாமலும், இப்படியோ அப்படியோ வென்றும் தெரியாமலும் தலையை ஆட்டிவிட்டுக் கை நடுநடுங்கச் சிந்தின அரிசியை வாரிக் குடத்தில் போட்டாள். அப்பொழுது வேலன், ‘‘உன்னோட சில சங்கதி பேசணும். ஊட்டுக்குப் போறப்ப, மாட்டுக் கொட்டாயிக்கு வந்து போ,’’ என்று அதட்டிச் சொன்னான். அதற்கும் வள்ளி தலையை அசைத்தாள். அவள் வலியால் உபாதைப்படுவது நன்கு புலப்பட்டது. கண்களில் கண்ணீர் தெரிந்தது. உதடுகள் சுவாதீனமற்றுத் துடித்துக்கொண்டிருந்தன. இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம், வள்ளி வெறுங்கையுடன் திரும்பி வந்தாள். அவள் பதற்றம் சற்றுத் தணிந்திருந்தது. ஆனால், தண்ணீர் விட்டுக் கண்களை நன்றாய்த் துடைத்திருக்க வேண்டும்; அதில் சந்தேமில்லை. ‘‘அத்தே ஊட்டுலே இல்லே. வாய்க்காங்கரைக்குப் போயிருக்காப்போலே இருக்குது. நீ என்னமோ பேசணுமின்னியே,’’ என்றாள் வள்ளி.

வேலன் அவளுக்குப் பதில் கூறாமல், தெருக்கதவைத் தாழ்ப் பாளிட்டுத் தன்னுடன் வரும்படி ஜாடை காட்டி, புழங்காதிருந்த ஓர் அறைக்குச் சென்றான். வெகுகாலம் உபயோமற்றுக் கிடந்ததால், அதன் கதவைத் திறப்பது கூடக் கஷ்டமாயிருந்தது. இது ஒரு காலத்தில் தானியம் சேகரிக்கும் இடமாயிருந்தது. ஆனால் இப்பொழுது, குப்பையும் பூஞ்சானமுமே நிறைந்திருந்தன. இருவரும் அறைக்குள் புகுந்தனர். இனி அவர்கள் பேசுவது ஒருவருக்கும் கேட்காதென்ற தைரியத்துடன், வேலன் வினவினான்: ‘‘இந்த வேலை எத்தினி நாளாச் செஞ்சுக்கிட்டிருக்கே?’’

‘‘எந்த வேலை?’’ என்றாள் வள்ளி, தலையைச் சாய்த்துக் கொண்டு அலட்சியமாய்.

‘‘இதுதான் — எங்களுக்குப் படியளக்கிற வேல. இல்லாட்டி, எங்களுக்கு எங்க கை கீளே உளுந்து போச்சின்னிட்டு எப்படித் தெரியும்? அப்பொத்தானே, உங்க கிட்டக் கொடுத்துவாங்க முடியாதூன்னு தெரிஞ்சுப்போம்... இப்போ, என் கண்ணாலத்துக்குதான் நான் அளுதுக்கிட்டு இருக்கேன்... இல்லே? ஒன்னை விட்டா, இந்த ஒலகத்துலே பொண்ணே அம்புடாதா?’’ என்று வேலன் இழிவாகச் சொன்னான்.

‘‘அப்படி யாரு சொன்னாங்க?’’ என்று வள்ளி எரிந்து விழுந்தாள். ‘‘ஒன் மூஞ்சியும் மோரையும்... எங்கம்மா, என்னை ஆத்துலே தள்ளிவிட்டாலும் தள்ளுவா, ஒனக்குக் கட்டிக்கொடுக்க மாட் டாளே, அது தெரியுமா ஒனக்கு?’’ என்றாள்.

‘‘நல்லாத் தெரியும். அப்படி இருக்கப்போ, இப்படி எங்க மானத்தைக் கெடுப்பானேன்? ஒன்னை மல்லனுக்குக் கட்டிக் கொடுத்தா, நாங்க சண்டைக்கா வரப்போறோம்? எங்கப்பா சாவக் கிடக்கிறாரு; எங்கம்மா ஒரு புத்திகெட்டவ. நானோ, ஒங்க கண்ணாலத்துக்குப் பக்கம் எட்டிக்கூடப் பாக்கமாட்டேன். அப்படியிருக்கிறபோது, நீங்க எங்க உயிரை எடுப்பானேன்? நாங்களும் வாழ்ந்தவங்கதான். இன்னிக்கி இந்தக் கதிக்கி வந்திட்டா, என்னா வேணும்னா பண்ணலாமா? நீகூடச் சேந்துகிட்டயே... நான் உனக்கு என்ன தீங்கு பண்ணினேன்?’’ என்று வேலன் மனம் நொந்து சொன்னான். அவன் கோபம் துக்கமாக மாறிற்று. வள்ளி மௌனமாய்ச் சற்றுநேரம் நின்றாள். அவளால் பேச முடியவில்லை. நெஞ்சில் ஏதோ குறுக்கிட்டதுபோல் இருந்தது. பிறகு மெள்ள, ‘‘இதெல்லாம் உனக்கு யார் சொன்னாங்க?’’ என்று விசனத்துடன் கேட்டாள்.

‘‘மல்லன் வாயாலேயே கேட்டேன். கேக்கும்படி வாச்சுது. நடந்த சங்கதியையும் சொல்லிடறேன். நேத்துச் சாயங்காலம், படுவைக் காட்டுக்குப் பூளப்பூக் கொண்டுவரலாமின்னு போனேன். அங்கே ஒரு பொதருகிட்டே

மல்லன், முனியன், மாரி இவுங்க மூணு பேரும் குடிச்சுக்கிட்டும் பேசிக்கிட்டும் இருந்தது தெரிஞ்சிச்சு. அவுங்க என்னைப் பாக்கல்லே. ஆனால், அவங்க பேச்சைக் கேக்கும்போது...'' திடீரென்று வேலனுக்குக் கோபம் பொங்கிப் பெருகிற்று: ''எங்கப்பா, அம்மா இல்லாட்டி, அந்த முளிக்கண்ணுப் பயலே, அங்கேயே களுத்தை ஒடிச்சுப் போட்டிருப்பேன்... ஒங்கம்மா, அந்தக் குதுரு இருக்குதே — அவன் அத்தைக்காரி — அவள், நீ எல்லாரும் சேந்து ஒபாயம் பண்ணினீங்களாமே, எங்க கை கீளே உளுந்து போச்சீன்னு எடுத்துக் காட்டுறதுக்கு. திருட்டுக் களுதே... ஒண்ணும் தெரியாதுபோலப் பாசாங்கா பண்றே? இதோ பாரு... போனது போச்சு. நீ அவனைக் கட்டிக்கிட்டா எனக்கென்ன? இந்த மட்டுலே தப்பிச்சுக்கிட்டேனேன்னு நான் கடவுளைக் கும்பிடறேன் — ஆனா ஒண்ணு, இனிமே இந்த ஊட்டுலே காலை வச்சியொ, உன் கருமாதிக்கி எலும்புகூட ஆப்புடாது... மறந்திடாதே...'' என்று வேலன் கர்ஜித்தான்.

வள்ளியினால் அழுகையை அடக்க முடியவில்லை. கைகளால் முகத்தை மூடிக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். ''சரி, இந்த நாடவம் இங்கே வாணாம். உம் புருசன்கிட்டே வச்சுக்கோ,'' என்றான் வேலன்.

''சீ! வாயை மூடு. யாரு என் புருசன்?'' என்று தேம்பியவாறு அவன்மேல் சீறிவிழுந்தாள். அவள் அடுத்த நிமிஷம் கீழே சாய்ந்து விம்மி விம்மி அழுதாள். ''நான் இனிமே வரவேமாட்டேன். நீ இப்போ செத்தே அந்தட்டம் போ. செத்தே அந்தட்டம் போயேன்,'' என்று தலையில் அடித்துக்கொண்டாள்.

வேலன் அசையாமல் அவளை உற்றுப் பார்த்துக்கொண்டே நின்றான். அவள் எழுந்திருக்க முயன்றாள்; ஆனால் முடிய வில்லை. முன்னமே அடிபட்ட கணுக்கால், பூட்டுப் பிசகிவிட்டது போல் இருந்தது.

''நான் ஏந்திருக்கமாட்டிலேன்னிட்டுத் தெரியில்லையா? அந் தட்டம் போயேன். ஆராவது பாத்தா என்ன நெனச்சுப்பாங்க...'' என்று அவள் கெஞ்சினாள்.

“சும்மா ஔறாதே. மொதல்லே உன்னைத் தாவாரத்துலே கொண்டுபோய் வெச்சிடுறேன். அப்பாலே உன் கால் சங்கதியைப் பாக்கறேன்.”

“எங்கால் சங்கதியை நீ பாக்கத்தேவில்லே. தாவாரத்துலே உட்டாப் போதும்,” என்றாள் வள்ளி.

வேலன், அவள் தோள்களைப் பிடித்து மெதுவாகத் தூக்கினான். அவளுடைய வலது கணுக்கால் பூட்டுப் பிசகிப் போனதைக் கண்டுகொண்டான். அவளால் வலி சகிக்க முடியவில்லை என்பதும் நன்றாகத் தெரிந்தது. அவள், கண்களை மூடிக்கொண்டு பல்லைக் கடித்துக்கொண்டு, முகத்தை ஆயிரம் கோணலாகச் சுளித்துக்கொண்டாள். வேலன், அவளை நடத்திச் செல்லமுடியாமல் சுமந்துகொண்டு போய்த் தாழ்வாரத்தில் உட்கார வைத்தான். பிறகு அவன், அவளுடைய கணுக்காலைப் பரிசோதிக்க முயன்றான். ஆனால், அவள் அதைத் தடுத்தாள், அதே சமயத்தில், வேலனுடைய தாய் புழைக்கடைக் கதவைத் தடார் என்று மூடிக் கொண்டு யார்மேலோ குறை கூறிக்கொண்டே உள்ளே வந்தாள். அழுத முகத்தோடு வள்ளி காலைப் பிடித்துக்கொண்டிருப்பதையும் அவள் பக்கத்தில் வேலன் நிற்பதையும் கண்டாள்.

“அம்மா, வள்ளிக்குக் காலிலே நல்ல அடி பட்டிருக்குது. வளிக்கி விழுந்துட்டா. விளுந்த சத்தத்திலே நான்கூட எந்திருச் சிட்டேன்,” என்றான் வேலன்.

“போனாபோவுது, அப்பொவாவது எந்திருச்சியே, அம்மாடீ... நல்ல அடிபட்டிருக்குதுடீயம்மா, ஐயையோ... எலும்பு கிலும்பு ஒடிஞ்சு போச்சா? வேலு, கொஞ்சம் வெளக்கெண்ணெய் கொண்டா.. ஓடு, ஓடு,” என்று சொல்லிக்கொண்டே, வள்ளியின் கணுக்காலை மெதுவாகத் தடவிப் பார்த்தாள். வள்ளி, கூக்குரலிட்டு அவளைத் தொடவிடவில்லை.

“அடி எங் கண்ணே... நான் என்னாடி பண்றேன்? தொட்டுப் பாக்காட்டி, எப்படியம்மா தெரியும்? என் தங்கம்... இப்பொத்தான் அந்த பாவி முண்டை

உன்னைத் திட்டிக்கிட்டு இருந்தா. அப்பவே கீளே விளுந்து காலே ஒடிச்சுக்கிட்டேயே,'' என்று அலமேலு ஆரம்பித்தாள்.

''யாரைச் சொல்றீங்க, அத்தே?'' என்று வள்ளி, வலியோடு வலியாய்க் கேட்டாள்.

''யாரைச் சொல்லுவேன் — நம் ஊருக்கெல்லாந்தான் இருக்குதே ஒரு பேய் — அந்த மீனாச்சிக் களுதைதான். அவ மருமகன் மல்லனை நீ கட்டிக்கக் கூடாதின்னிட்டு, ஒனக்குச் சொல்லிக் கொடுத்திட்டேனாம். எப்பனாச்சும் அந்த பேச்சு நான் எடுத்தேனா? தெரியாதவங்களுக்குச் சொல்லியல்ல குடுக்குறா. கிளியாட்டம் வளத்து உன்னை அந்தக் கொரங்குத்துத்தானா தள்ளனும்?''

வேலன், கையில் விளக்கெண்ணெய்ச் சீசாவோடு வரும் போதே, ''உனக்கென்ன சொன்னாலும் தெரியாது, அம்மா. ஊரு வம்புலேயெல்லாம் நீ என்னாத்துக்குத் தலையிட்டுக்கிறே? போனாப் போவுது. அவ காலைப் பாரு,'' என்று கடுகடுப்பாய்ச் சொன்னான்.

''பாக்கறேண்டாப்பா பாக்கறேன். அதுமட்டும் என் கொளந் தையல்லவா? அது சொகப்படணுமின்னு எனக்கு இருக்காதா?'' என்று சொல்லிக்கொண்டே, அலமேலு விளககெண்ணெயை வள்ளியின் காலில் தடவினாள். வள்ளி வாயைத் திறக்கவில்லை. அவள் மெய்ம்மறந்திருந்தாள்.

''கண்டவங்க கிட்டேயெல்லாம் நீ ஒண்ணும் சொல்லக்கூடாதம்மா. தங்கம்மாதான் கோள் சொன்னாப்பலே இருக்குது. 'நான் தூக்குப்போட்டாலும் போட்டுப்பேன், மல்லனைக் கட்டிக்க மாட் டேன்'னிட்டு, நீ அவகிட்ட சொன்னாயா?'' என்று கேட்டாள் அலமேலு.

வள்ளி பதில் கூறாமல், தன் முகத்தை வேலனுக்குக் காணாதபடி, வெகு கஷ்டத்துடன் சாய்த்துக்கொண்டாள்.

வேலன் மறுபடியும் தன் தாயைக் கோபித்துக் கொண்டான்.

‘‘இந்தப் பேச்செல்லாம் இப்பொத்தானா? உனக்கு எப்பொத் தான் தெரியுமோ? அவ காலைப் பாரு,’’ என்று அவன் சிடுசிடுத் துச் சொன்னான்.

அலமேலு, வள்ளி காலைத் தொட்டுத் தடவினாள். வள்ளி வலி பொறுக்கமுடியாமல் கூவினாள்.

‘‘சட்டுனு திருப்பினா, அது கூடிக்கும்,’’ என்றாள் அலமேலு, அசட்டு மூஞ்சியோடு.

‘‘பின்னே திருப்பேன்,’’ என்றான் வேலன்.

‘‘மொள்ளத் தொடறப்பவே, இந்த கத்துக் கத்தறாளே...’’

வேலன், மௌனமாய்ச் சற்று நகரும்படி தன் தாய்க்கு ஜாடை காட்டினான். வள்ளியின் முகம் அப்புறமாய்த் திரும்பியிருந்தது. பிறகு வேலன் ஒரு க்ஷணத்தில், காலைத் தொட்டுப் பார்த்து, வளைந்த பாதத்தை நிமிர்த்திப் பிசகைச் சரிப்படுத்தினான்.

‘‘ஐயோ! பாவி என் உசிரு போச்சே!’’ என்று வள்ளி கதறினாள்.

‘‘ஒண்ணுமில்லேம்மா, எல்லாம் சரியாப் போச்சு. நல்ல வேலை செஞ்சே, வேலா — இனிமே கொஞ்சம் ஒத்தடம் குடுத்தா, வலி, வீக்கம் எல்லாம் போயிடும் — பொறு, ஒன் கூச்சல் ஒங்க மாமாருக்குக் கூடக் கேட்டுடிச்சே. வேலு, நீ இங்கேயே இரு — அவளுக்கு எப்படி வேக்குது பாரு! கொஞ்சம் விசுறேன். நான் அப்பாருக்கு என்ன வேணுமோ கண்டுக்கிட்டு வாரேன்,’’ என்று சொல்லிக்கொண்டு, வெங்கடாசலத்திடம் சென்றாள். இறை வானத்தில் செருகியிருந்த ஒரு பனையோலை விசிறியை எடுத்து வேலன் விசிற ஆரம்பித்தான்.

“நீ விசிறத் தேவில்லை. என்னை விட்டு அப்பாலே போனாப் போதும். அத்தே வந்து எல்லாம் பாத்துப்பாங்க,” என்றாள் வள்ளி.

மௌனமாய் வேலன் அவளை இரண்டு நிமிஷ நேரம் உற்றுப் பார்த்தான். அவளும் சளைக்கவில்லை. இமைகொட்டாமல் அவன் உள்ளத்தைப் பரிசோதிப்பதுபோல் அவனை விழித்துப் பார்த்தாள்.

பிறகு வேலன், “நீ நெனைக்கறாப்போல நான் அவ்வளவு கெட்டவன் இல்லே,” என்று மெதுவாகச் சொன்னான்.

“நீ நல்லவனாயிருந்தா என்ன, கெட்டவனா இருந்தா என்ன — எனக்கு என்ன வந்திடிச்சு?” என்றாள் வள்ளி.

“நீ அப்படி இருக்கணுமின்னுதான் நானும் சாமியை வேண்டிக் கொள்கிறேன். நான் ஒன்னை ஏதோ பேசிட்டேன்னு கோவிச்சுக் காதே. நீ கூடச் சேர்ந்துகிட்டு, எங்களை அவுமானபடுத்தறை யாக்குமின்னு நெனைச்சிக்கிட்டேன். ஒன் மேலே எனக்கு என்ன பகை? மெய்யாலும் சொல்றேன்; உன்னைத் திட்டணுமின்னே எனக்கு இல்லை. ஆனால், மல்லன் சொன்னதைக் கேட்டப்போ இருந்து, என் ஒடம்பு எரிஞ்சுபோவுது. என்ன அக்குருமம்... என்ன அநியாயம்... அவன் கண்ணாலத்தை நான் தடுக்கவா போறேன்? ஒங்க ரெண்டு பேருக்கும் கண்ணலமாவப் போவதுதான், ஊரெல்லாம் தெரியுமே. நான் சொன்னா நீ நம்பமாட்டே; மாருலே கையை வச்சுச் சொல்றேன்; நீ சொகமா இருந்தா அதே எனக்குப் போதும். அப்படியிருக்கச்சொல்ல, எங்களை இமிசை பண்ணலாமா? இப்பக்கூட எனக்குத் தெரியல்லையே, நீ ஏன் ஒங்க ஊட்டுலிருந்து சாமான் கொண்டாறே? இது ஒங்க அம்மாளுக்குத் தெரியுமா?”

“ஒரு போது தெரியும்; இன்னொரு போது தெரியாது. ஆனா, இன்னிக்கித் தெரிஞ்சுதான் கொண்டாந்தேன்.”

“ஐயோ வள்ளி, நீ செய்யற வேலையைப் பாத்தா எனக்கு வெறி பிடிச்சுடும்போல இருக்குதே. ஏன் இப்படியெல்லாம் செய்றே?”

“ஏனா?”

“ஏன் சொல்லேன்?” என்று வேலன் கெஞ்சினான்.

“நான்...நான்... அத்தை தவிக்கிறது எனக்குத் தெரியும். நான் என்னமோ நெனைச்சேன்...” பிறகு அவளால் பேச முடிய வில்லை. கண்ணீர் தாரைத் தாரையாய்ப் பெருகியது.

வேலன், பிரமித்துச் சிலைபோல் அவளைப் பார்த்தவண்ணம் நின்றான். அப் பார்வை, தன் பிழையை மன்னிக்கும்படி, கேவலம் சொற்களைவிட நூறுமடங்கு அதிகமாகக் கெஞ்சுவதுபோல் தோன்றிற்று.

இத்தருணத்தில் அலமேலு, ஆவிபறக்கும் சுடுநீருடன் ஒற்றடம் கொடுக்க வந்தாள். உடனே, அவர்களுடைய சம்பாஷணையை நிறுத்திக்கொண்டார்கள். அரைமணி ஒற்றடம் கொடுத்தற்கப்பால், வள்ளிக்குச் சிறிது வலி குறைந்தது. ஆனால், அந்த நிலைமையில் அவள் வீட்டிக்குப் போக முடியாததால், தொப்பையின் வண்டியை உபயோகப்படுத்திக் கொள்ளலாமென்று அவர்கள் ஏற்பாடு செய்துகொண்டார்கள்.

வேலனுக்கு வள்ளியிடம் தனிமையாக அநேக விஷயங்களைப் பற்றிப் பேச ஆவலாயிருந்தது. ஆதலால், வள்ளியின் தாய் குடிப்பதற்கு ஆற்று ஜலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பாளென்றும், உடனே தன் தாய் ஆற்றுக்குப்போய் ஒரு குடம் நீரை வள்ளி வீட் டிற்குக் கொண்டுபோக வேண்டுமென்றும் சொல்லி, வேலன் தன் அம்மாவைத் துரத்திவிட்டான்.

# 11. ஓர் ஒப்பந்தம்

தன் தாய் வீட்டை விட்டு வெளியே சென்றவுடனே, வேலன் தெருக் கதவைத் தாழ்ப்பாளிட்டு, வள்ளியிடம் வந்தான். வள்ளி சுவர்மேல் சௌகரியமாகச் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருந்தாள். கொஞ்ச நேரம், வேலன் அவளை இமை கொட்டாமல் பார்த்தான். பிறகு ஒரு பெருமூச்சுவிட்டு, அவள் சமீபத்தில் உட்கார்ந்து, அவளுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு மன்னிப்புக்கேட்டுக் கொண்டான். வள்ளிக்கு மிகவும் சங்கோசமாய்விட்டது. அவர்கள் இருவரும் நெருங்கிப் பேசி வெகுகாலமாயிற்று. வேலன் தன் கைகளைத் தொட்டதும், அவள் அறியாத ஒரு பேரானந்த உணர்ச்சி அவளுடைய தேகமெல்லாம் மின்சார சக்திபோல் தாக்கிற்று. மன்னிப்பதற்கு ஒன்றுமில்லையென்று சொல்ல அவள் யத்தனித்தாள். ஆனால் வாய் எழாமல், புரிந்தும் புரியாமலும் ஏதோ முணுமுணுத்தாள். வேலனுக்கோ, அவள் கையைத் தொட்ட மாத்திரத்தில், தான் எங்கோ ஆகாசத்தில் பறப்பதுபோலத் தோன்றிற்று. தன் உயிரெல்லாம் வள்ளிமேல் ஆதரவுபட்டிருப்பதை அவன் இதுவரையிலும் உணரவில்லை. திடீரென்று, கட்டிலிருந்து திமிறிக் கொள்வதுபோல எழுந்து, மௌனமாய் உலாவினான். அவன் முகத்தில் துயரம் குடிகொண்டுவிட்டது. மிகக் கவலையுடன் வள்ளி, அவன் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தாள். அவன் மனச்சங்கடத்தை அவள் அறிந்தாள். சரேலென்று வேலன் அவள்முன் நின்றான்.

“அந்தப் பயல் பேச்சைக் கேட்டுவிட்டு நான் குதிச்சேன். நீ ஒண்ணும் மனசிலே வச்சுக்காதே. நீ எப்பவும்போலத்தான் இருக்கிறேங்கறது எனக்கு எவ்வளவு சந்தோசமா இருக்குது, தெரியுமா? இன்னும் ஒரே ஒரு சங்கதி. வள்ளி என் உயிரெல்லாம் ஒம்மேலே இருக்குதுன்னு ஒனக்குத் தெரியும் — என் பேச்சை செத்தே கேப் பையா?”

வள்ளி குறிப்பாகத் தலையை ஆட்டினாள்.

“நீ மல்லனைக் கட்டிக்கோ.”

திடீரென்று, யாரோ முதுகில் ஈட்டியாற் குத்தினதுபோல் வள்ளிக்குத் தூக்கிவாரிப்போட்டது. அந்தத் தருணம், அவள் முகக் குறியை இன்னதென்று விவரிக்கவே முடியாது. கோபம் ஒரு புறம், பயம் ஒருபுறம், துணையற்ற நிலை மற்றொரு புறம், கலந்து புரண்டன.

“என்ன சொன்னேநு நான் ஆருன்னு நெனைச்சே? நீ என்னை வெலக்கி வாங்கிட்டயா, அதிகாரம் பண்ண?” என்று வள்ளி சீறினாள்.

“வள்ளி! பொறுத்துக்கோ. நான் வெலக்கி வாங்கலை; நீதான் என்னை வாங்கிட்ட. நீ என்னை தெரிஞ்சுக்கல்லையே. நீ கஷ்டப்படக் கூடாதின்னிட்டுத்தான்... ஒன்மேலே எனக்குப் பிரியமில்லையா? ஒனக்காவ உயிரை வேணுமின்னாலும் குடுப்பேனே... அது கடவுளுக்கல்ல தெரியும்,” என்று வேலன் படபடப்புடன் சொன்னான்.

“என்ன பிரியம்! — அந்தச் சோனிப்பயலுக்கு என்னைத் தள்ளி வுடறதா? இதோ பாரு, ஒன்னையே கட்டிக்கணுமின்னு நான் அளறேன்னு நீ நெனச்சுக்காதே! பொம்பளையா பொறந்தா, யாரை யாச்சும் கட்டிக்கிணுமின்னு அடிச்சுக்கறாங்களே, அதுக்காவ — போனாப்போவுது. நீ இனிமே எனக்குப் புத்திசொல்லத் தேவில்லை. எனக்கு என்ன பண்ணிக்கணுமோ தெரியும்.”

“என்ன பண்ணப் போறே?” என்று வேலன் கேட்டான்.

வள்ளிக்கு அடங்காத கோபம் வந்தது. “நீ யாரு கேக்கறதுக்கு? நீ இவ்வளவு பயங்காளின்னு இப்பொத்தானே தெரிஞ்சுச்சு. மல்லனும் அவன் சிநேகிதக்காரங்களுமாச் சேந்து ஒன்னைப் பொடச் சுடுவாங்கோன்னு பயமா? — ஐயோ ஆம்பளையே!” என்று அவள் ஏளனமாகச் சொன்னாள்.

வேலனுக்குச் சுருக்கென்று பட்டது. “ஒளறாதே! மல்லனைப் போல் ஆயிரம் பேரைப் பார்த்துக்க எனக்குத் தெறமை உண்டு. சமயம் வந்தா, நான் எப்படியிருப்பேன்னு உனக்கே தெரியும்.”

“அப்போ, ஏன் பயப்படறே? நான் ஒரு களுத்தறுப்பூன்னுட்டு நெனைக்கறயா?”

வேலன் தன் உதட்டைக் கடித்தான். அவள் சொன்னதில் கொஞ்சம் உண்மை இருந்தது; தன் பயத்தை ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது. ஆனால், அவன் தன் கஷ்ட சுகங்களுக்காகப் பயப்படவில்லை; எல்லாம் அவளை உத்தேசித்தே. வள்ளியினால் அதைக் கண்டுகொள்ள முடியவில்லை. அவளுக்கு விளங்கும்படி சொல்வது அவனுடைய கடமை. ஆகையால், கோபத்தை அடக்கிக்கொண்டு மறுபடியும் சொல்லத் தொடங்கினான். “வள்ளி, நீ விசயத்தை அறிஞ்சுக்க மாட்டேங்கறயே. தெரியுமின்னா, மாரைப் பொளந்து காட்டுவேனே! இதைப்பத்தி நான் ராவும் பகலுமா யோசிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன். எனக்கு எந்த வளி போறதுன்னு தெரியல்லையே. நான் சொல்றதைச் செத்தே காது குடுத்துக் கேளு. எங்கப்பாரு, நாலு அஞ்சு மாசத்துக்குமேலே பொளைக்கமாட்டாரு. அதுவரையிலும், அவருக்கு மனசு நோவாதே என் உயிரைக் குடுத்துக் காப்பாத்தணும். எங்கம்மா ஏதோ ரகசியமாய் பணம் சேத்து வச்சிருந் தாங்கோன்னிட்டு எண்ணிக்கிட்டு இருந்தேன். அந்தக் குட்டும் வெளிப்பட்டுப் போச்சு. இப்போ நான் மண்வெட்டியாவது சம்பாதிக்கணும். அவர் செத்த பொறவு, எங்கம்மாவை அவுங்க அண்ணாரு ஊட் டுக்கு நல்ல பேச்சுச் சொல்லி அனுப்பிச்சுடணும். அப்புறம் அந்தம்மாளுக்குச் சோத்துக்கும் துணிக்கும் கொறவில்லை. அதுக் கப்பாலே துணியை ஓதறிக்கிட்டு இந்தப் பாவிப்பய, ஊரைவிட்டுக் கண்காணாத சீமை ஓடிடறேன். என் வவுறு என்னமா எரியுதோ, உனக்கென்ன தெரியும். இவுங்கதான் தாய் தோப்பன்னு நம்பும்படி அப்படி வளத்தாங்களே... இப்போ அவுங்க தவிக்கும் போது, நான் ஒண்ணும் செய்யமாட்டலயே... நான் இருந்தா என்ன, செத்தா என்ன? ஆனா ஒண்ணு, நானா அவுங்களுக்கு ஒரு துன்பத்தையும் கொண்ணாந்துவிடல்லே. இப்போ ஒன் சங்கதியிலே, ஒன் துன்பத்துக்கெல்லாம் காரணம் நான்தான். சொகமாக் காசு பணத்தோடே வாழ்ந்துக்கிட்டிருக்கிறவளைக் கண்காணாத சீமைக்கு இளுத்துக்கிட்டுப் போயி, தேயிலைத் தோட்டத்திலியோ கருப்பந் தோட்டத்திலேயோ சாவ அடிச்சா, அந்தப் பாவம் ஆருக்கு? அங்கே போன பொறவு, ஐயான்னா முடியுமா,

அப்பான்னா முடியுமா? எங்கப்பாருக்குச் செய்யாத கொறை ஒண்ணு போதாதா எனக்கு? ஒன்னையும் கூடவா கொல்லணும்! ஐயோ! வள்ளி! நீ யோசிக்கமாட்டேங்கிறயே! நான் ஒன்னைக் கெஞ்சிக் கேக்கிறேன்; எம் பேச்சைக்கேளு,'' என்று வேலன் வெகு உருக்கத்துடன் கேட்டுக்கொண்டான்.

வள்ளி, சற்றுநேரம் வாய்திறவாமல் உட்கார்ந்திருந்தாள். அவள் மனம் விசனத்தில் மூழ்கியிருந்தது. ''சாமி ஒரு வளிவுட மாட்டாரா?'' என்று எங்கோ கவனமாகச் சொன்னாள்.

அவ்வார்த்தை வேலனைச் சவுக்கால் அடிப்பதுபோல் இருந்தது: ''சாமியாவது பூதமாவது! சாமி ஒண்ணு இருக்குதா? இருந்தா, எங்கப்பாரு இப்படித் தவிப்பாரா? அவரு ஆருக்கு என்ன தீங்கு பண்ணினாரு? எல்லாருக்கும் ஒவகாரந்தானே செஞ்சாரு? ஒரு சாமி இருந்தா, இவ்வளவு அக்குருமம் நடக்கவுடுமா? அறுப்புக்கு மொதநா, பெருமாளையும் சின்னப்பனையும் சண்டைபோட உட்டுருக்குமா? தோட்டக் காடெல்லாம் தீயிலே எரிஞ்சிருக்குமா, நாங்கதான் இந்தக் கதிக்கு வந்திருப்பமா? சாமியேது, பூதமேது! நான் நம்பல்லே.''

''அதென்னா பேச்சு! நம்பத்தான் வேணும். பாட்டி பெரியாயியும் அத்தெயும் சொல்றாங்களே. அவுங்களுக்குத் தெரியாதா? நாம் பொம்மையாட்டம் பாத்தமே, அதுலே அந்த அரிச்சந்திர ராசா எவ்வளவு கஷ்ப்பட்டாரு! அந்த ராசாத்தி பட்ட பாட்டைப் பாத்தா, நான் அளுது அளுது எம் முந்தானியெல்லாம் நனைஞ்சுபோச்சே. கடசியா, சாமி அவங்களுக்கு நல்ல வளி உடலையா?''

''ஆமாம், அதெல்லாம் வெறுங் கதே. நான் கேக்றதுக்குப் பதில் சொல்லு. ஒங்கப்பா அம்மாவை உட்டுட்டு, கண்டியோ பினாங்கோ, எங்கயோ கண்காணாத சீமையிலே என்னோட கூலி வேலை செஞ்சு பொளைக்க நீ தயாராயிருக்கிறயா?'' என்று வேலன் கேட்டான்.

“ராமரு காட்டுக்குப் போறப்போ, சீதையும் கூடப் போவலியா?” என்றாள் வள்ளி.

“ஐயோ வள்ளி! ஒனக்கு ஒண்ணும் புத்தி சரியா இல்லையே. போனாப்பாலே திரும்பிவர முடியுமா? அங்கேயே தானே சாவணும்! அப்படி சாவடிக்கிறதுக்கு ஒன்னை இங்கேயே கொன்னிடலாமே. நான் ஒங்கிட்டச் சொல்லாத ஓடிட்டா என்ன பண்ணுவே?”

வள்ளிக்கு ஒரு நிமிஷம் சோகத்தில் ஆழ்ந்திருந்தாள். பிறகு மெள்ளச் சொன்னாள்:

“காவேரியம்மா எங்கே போயிட்டா? அவகிட்டே எனக்குத் தானா எடம் இல்லாத போச்சு?”

வேலன் அவளை ஏற இறங்க பார்த்தான். அவள் சொன்னபடி நிறைவேற்றுவாளென்று நிச்சயித்துக் கொண்டான். பிறகு, அவளுடைய இரு கைகளைப் பிடித்துக் கொண்டு, அவன் மறுபடியும் கேட்டான்:

“செத்தாலும் பொளச்சாலும் ஒண்ணாத்தான்னு சொல்லு?”

வள்ளி பதில் கூறாமல், தன் தலையை அவன் கைகளில் மறைத்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள். ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்திருக்க முடியாதென்று அவர்கள் நன்கு உணர்ந்தார்கள். எக்காலத்திலிருந்து, அவர்களுக்குப் பரஸ்பரம் அவ்வளவு பிரியம் ஏற்பட்டதென்பது அவர்களுக்கே தெரியாது. அது வருஷக் கணக்காக வளர்ந்த அன்பு. அது சிறு பிராயத்திலிருந்து ஆரம்பித்து, நாளடைவில் விருத்தியாகி, இப்பொழுது அவர்கள் அறியாமலே பரிபக்குவம் அடைந்தது.

“இந்தச் சங்கதி ஆருகிட்டேயும் சொல்லாதே — ஊம்! அம்மா கிட்டக்கூட வேணாம். பொறுக்கலாம். என்ன ஆவுதோ பாக்கலாமே. ஆனால், சாமான்

மட்டும் கொண்டாராதே. நான் எப்படியாவது சம்பாதிச்சுக்கிறேன். அதுக்காவ, இந்தப் பக்கம் வாராத இருந்துடாதே?'' என்று சிரித்தான்.

"நீ எப்படிச் சம்பாதிக்கப் போறே?''

"மஞ்சத்திடலுலே, வாய்க்கா வெட்றாங்களாம். ரொம்ப ஆளுங்க வேலை செய்யுதாம். நானும் சேந்துக்குறேன்.''

"அது என்னா வேலை, உன்னாலே முடியுமா? நீதான் தென்ன மரம் ஏர்றதுலே கெட்டிக்காரனாச்சே; மரமேறிச் சம்பாதிக்கக் கூடாதா?''

"பாளை தட்டச் சொல்றியா?'' என்று அவன் சிரித்தான். வள்ளிக்கும் சிரிப்புப் பொறுக்கமுடியவில்லை.

"நீ ஒரு பயித்தியம். தேங்காதான் பறிக்கச் சொல்றேன். நம் மூருலேருந்து மேலநத்தம் வரையிலும், வாய்க்கா மோட்டுத் தென்னமரத்தையெல்லாம் ஆரோ சிறூருக்காரன் குத்தகை எடுத்திருக்கிறானாமே? அவன் அங்கம்மா கோயிலண்டே கூட்டம் போட்டுக்கிட்டு, மரமேர்றதுக்கு ஆள் பிடிச்சுக்கிட்டு இருக்கான். நேத்துப் பொளுதோடே அந்தட்டம் நான் வந்துக்கிட்டு இருந்தேன். அப்போ எல்லாத்தையும் பாத்தேன். எத்தனையோ கோடி மரம் இருக்குதாம். ஆனால், அன்னன்னிக்குக் கூலி கிடையாதாம். ஆயிரத்துக்கு இவ்வளவுன்னிட்டுக் கொடுக்கிறானாம். இது இன்னும் நல்லதாப் போச்சு. ஒரு நாளைக்கு ஒரு ரூவா நீ சம்பாதிக்கலாமே. நீ ஏன் அவங்கிட்ட போகக்கூடாது? சங்கரனும் குப்பனுங் கூட அவங்கிட்ட பேசிக்கிட்டு இருந்தாங்க.''

வேலனுக்கு மிகவும் சந்தோஷமாய்விட்டது. "வெளையாட்டுப்போலத் துட்டு அடிச்சிடலாமே,'' என்றான்.

"நீ இப்போதுகூடப் போவலாம். எனக்கு ஒடம்பு சரியாப் போச்சு. எனக்காவ நீ இங்கே இருக்காதே. எங்கம்மா வந்தாலும் வருவா. நம்ப ரெண்டு பேரையும் பாத்தா, அவளுக்குப் பொல்லாத கோவம் வரும்,'' என்று வள்ளி, புன்சிரிப்புடன்

சொன்னாள். வேலன், அவள் முன் ஜாக்கிரதையை மெச்சினான். பிறகு, அவளை விட்டுப் பிரிய மனமில்லாமல் தயங்கித் தயங்கி கடைசியாகத் தெருக்கதவைத் திறந்துகொண்டு வெளியே போனான்.

## 12. ஓர் எச்சரிக்கை

வேலன் தன் புதுவேலையை வெகு திறமையாகச் செய்து வந்தான். முதலில் பிறர் ஏதாவது நினைப்பார்களோவென்று அவன் சங்கோசப்பட்டான். ஆனால், வரவர அந்த உணர்ச்சி மறைந்து, 'நாம் சுயமாகக் கஷ்டப்பட்டு நம் தாய் தந்தையரைக் காப்பாற்றுகிறோம்,' என்ற உற்சாகம் மேலிட்டது. இரண்டு வாரங்களுக்குள், வேலன் மற்றவர்களைவிட அதிகத் திறமையும் நாணயமும் உள்ளவனென்பதை அவன் முதலாளி கண்டுகொண்டான்; அவனுக்கு அதிகச் சம்பளம் கொடுத்து நிரந்தரமாக வைத்துக் கொள்வதாகவும் சொன்னான். இதைக் கேட்ட வேலனுக்கு மிகவும் சந்தோஷமாயிருந்தது.

ஒருநாள் பிற்பகல் சுமார் மூன்று மணி இருக்கும்; வாய்க்கால் கரையில் வேலன் இளநீர் குடித்துக்கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் குவியல் குவியலாய்த் தேங்காய்கள் விழுந்துகிடந்தன. வீட்டிற்குக் கொண்டுபோவதற்காக இரண்டு இளங்காய்களைக் காம்புகளினால் ஒன்றாகக் கட்டிக்கொண்டிருந்தான். அச்சமயத் தில், வீரப்பனும் மதுரையும் அவ்வழியே போவதைப் பார்த்தான். அவனுக்கு அவர்களைக் காண்பதில் இஷ்டமில்லை. ஆனால், அவர்கள் அவனைப் பார்த்துவிட்டதால், அவன் எழுந்திருந்து மரியாதை செய்ய வேண்டியதாயிருந்தது. தான் செய்துகொண்டிருக்கும் வேலையை எண்ணி முதலில் அவன் சிறிது கூச்சப்பட் டான். பிறகு, அவர்கள் தன்னிடம் பேசவந்த பொழுது, அவன் தன் நாணத்தை ஒருவாறு மறைத்துக்கொண்டான். சம்பாஷணையிலிருந்து, அவர்கள் தன் 'அப்பா'விடம் ஒரு முக்கிய விஷயத்தைப் பற்றிப் பேச அவசரமாகப் போவதாகத் தெரியவந்தது.

அவர்கள் சென்றதும், வேலனுக்குப் பற்பல யோசனைகள் பிறந்தன. வெகு நாளாய் அவன் வீட்டுப் பக்கமே வராதவர்கள் இன்றைக்கு ஒன்று சேர்ந்து வரவேண்டுமானால், அதில் ஏதோ மர்மம் இருக்கவேண்டும். அதுவும் தவிர, அவர்கள் நடந்து கொண்டே இரண்டு மூன்று தடவை அவனைத் திரும்பிப் பார்த்தார்கள். அவனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்களென்பதில்

சந்தேகமில்லை. விஷயம் என்னவாயிருக்கும்? நல்லதொன்றும் இராதென்றமட்டில் வேலன் ஊகித்துக்கொண்டான். அவர்களைப் பின்தொடர்ந்து போகவேண்டுமென்று அவன் ஆத்திரப்பட்டான். அவன் வேலையும் முடிந்துவிட்டது. ஆனால் அவன் முதலாளி, காய்களையெல்லாம் வண்டிகளில் ஏற்றிவிட்டு வீட்டுக்குப் போகும்படி சொல்லியிருந்தான். அதற்குமுன் எப்படி அவ் விடத்தை விட்டு அகலுவது? ஆகையால், பல்லைக் கடித்துக் கொண்டு, கடைசிக் காயை வண்டியில் எடுத்துப் போடும்வரையில் அவன் தங்கினான். பிறகு, கட்டிவைத்திருந்த இளநீர்க் காய்களைத் தோளில் தொங்கவிட்டுக்கொண்டு, விரைவாக வீட்டுக்குச் சென்றான்.

வீரப்பனும் மதுரையும் எந்தக் காரியத்தை உத்தேசித்து வந்தார்களென்பது, அவன் தாய்க்குச் சொல்லத் தெரியவில்லை. ஆனால், இருவருமாய்ச் சேர்ந்து 'அப்பா'வுக்குக் கடுங்கோபம் வரும்படி செய்துவிட்டுப் போய்விட்டார்களென்று மட்டும் அவள் சொன்னாள். காலதாமதம் செய்யாமல், வேலன் உடனே தன் ‘அப்பா’வின் அறைக்குச் சென்றான்.

‘அப்பா’வின் முகம் படபடப்பாயிருப்பதை அவன் பார்த்தான். அவன் வாயைத் திறப்பதற்கு முன்னமே ‘அப்பா’ ஆரம்பித்து விட்டான்: “வேலு, இப்படி ஒக்காரு. அந்தப் பயக, மதுரையும் வீரப்பனும் இப்பொத்தான் வந்திட்டுப் போனாங்க. என்னத்துக்கு வந்தாங்க தெரியுமா? நம்ப நெலத்தையெல்லாம் வித்திடணுமின்னிட்டு புத்தி சொல்லவாம்! யாருக்குத் தெரியுமோ? — அந்தக் கொசப்பட்டிக் கங்காணிப் பயலுக்கு. அவன் நம்மூரை யெல்லாம் வளச்சு வாங்கிட்டான். நம்முதையும் கட்டிக்கிணுமின்னு பாக்கறாப்போல இருக்குது. அதுவும் அவுங்க சொல்றதையல்ல நீ கேக்கணும்! நம்ம நன்மைக்காவத்தான் விக்கணுமாம்! மதுரை இவ்வளவு நன்னி கெட்டவன்னு நான் நெனைக்கல்லே. மீனாச்சி கிட்டே பணம் வாங்கச் சகாயம் பண்ணினான்; நெசந்தான். நான் இல்லேன்னு சொல்லல்லே. ஆனா, நான் எவ்வளவு செஞ்சிருக்கேன். அவனுக்கு ஏதுநாச்சும் நெஞ்சுலே ஈரம் இருந்தா, அவனே தெரிஞ்சிக்குவான். அட, அவனை உட்டுத் தள்ளு; எச்சிக்கலை நாயுங்க, எங்கே எச்சிக்கலை உளுதோ அங்கேதான் ஓடும். வீரப்பன் சங்கதியைச் சொல்லு. என் வவுத்துலே

இருக்கிறதெல்லாம் அறிஞ்சவன் அவன் ஒருவன்தான். அவனே அவனோடு சேந்துக் கிட்டானே!''

''மதுரை சொல்லிக்கொடுத்திருப்பாரு,'' என்றான் வேலன்.

''அது ஒண்ணும் இருக்காது. அவனுக்கே என்னமோ பிடிச்சுக் கிட்டுது. நெலத்தை விக்காட்டி ரொம்பத் துன்பப்படுவோமாம் — மடையன்! வித்தாக்க, என் மனசு என்ன பாடுபடும் என்கிறதை அவன் காணல்லியே! எங்க பாட்டாரு, ஊருக்கு அப்பாலே இருந்த ஒரு அரைக்காணி நெலத்தை, தம் பேச்சைக் கேக்காதே வித்திட்டாருன்னிட்டு, எங்க முப்பாட்டாரு சீதபேதி கண்டு செத்தாரு. தோட்டந் தொரவுன்னா சும்மாத்தானா? உயிருக்கு உயிரில்லையா? நம்ம 'தாலிகட்டு'க்குப் போயிட்டா, அந்த மாமரங்க, 'வா வா'ன் னிட்டு அளைக்கிறாப்போல் அல்ல இருக்குது! 'நத்தக்காட்டு'க்குப் போனா, வாய்க்காலோரம் இருக்கிற மணல் திட்டுலே கொஞ்ச நேரம் ஒக்காரதே வரமுடியாதே. வேலி, வரப்புங்கூட நம்மெக் கண்டு பேசராப்பலே இருக்குதே. இதெல்லாம் மடையன்களுக்குத் தெரியமா? — துன்பப்படணுமாம், துன்பம்! பட்டா என்ன குடி கெட்டுப்போச்சு? வேலு, இப்போ சொல்றேன் பாரு, நம்ப நெலங்களெல்லாம் நம்ம கிட்டே திரும்பி வந்திடுது — ஆமாம், அங்கிருந்துதான் பணம் வருது. ஆமாம்! அவன்கிட்டே இருந்து தான். சந்தேகமில்லை! — ஆனா, நான் அவனைப் பார்க்கமாட்டேன்,'' என்று கூரையைப் பார்த்தபடி ஆள்காட்டி விரலை ஆட்டிக் கொண்டு, தனக்குத்தானே பேச ஆரம்பித்தான் வெங்கடாசலம்.

வேலனுக்கு சிறிது பயம் ஏற்பட்டது.

''வளியிலே போறவங்க எதுநாச்சும் சொன்னா, அதுக்கா நாம் நொந்துக்கறது? ஒதச்சுத் தள்ளுங்க, அப்பா. 'ஒங்க யோசனையும் வேணாம், நீங்களும் எங்க ஊட்டண்டே வரவேணாம்' இன்னிட்டு, அவுங்களைக் கண்டு நான் சொல்லிடுறேன்,'' என்றான் வேலன்.

“அப்படியே சொல்லு. அந்தப் பொளப்பத்த பயக இனிமே இங்கே வரத் தேவிலே.”

“அம்மா ஆப்பம் சுடுறாங்க. ரெண்டு கொண்டாரட்டுமா?”

“வாணாம். அது நெஞ்சிலியே நிக்கிது. ஆனா, சரிப்பட்டா கொஞ்சம் பொரி வாங்கியாந்தின்னா, படுத்தவாக்கிலே கொறிச்சுக்கிட்டு இருப்பேன்,” என்று வெங்காடசலம், தன் மனம் படும் கஷ்டத்தை மூடிவைக்க முடியாமல் சொன்னான்.

தன் ‘அப்பா’வுக்குப் பொரியே ஒரு தின்பண்டமானதைப் பற்றித் துக்கித்து, வேலன் உடனே கடைக்குச் சென்று அதை வாங்கிக் கொடுத்தான். ஆப்பங்கள் சுடச் சுட இருந்தன. வேலன் தின்பதற்கு ஆசைப்பட்டான். ஆனால், அலமேலு அவனுக்குப் பரிமாற வில்லை.

“கொஞ்சம் பொறு. வள்ளி தேன்பாகு கொண்டு வருவா; போட்டுக்கிட்டுச் சாப்பிடலாம்.”

“அவ இப்போ வருவான்னிட்டு ஒனக்கு எப்படித் தெரியும்? — அவ காலு சரியாப்போச்சா?”

“ஒ, அப்பவே சரியாப் போச்சே. அவ இப்போ வாரேன்னு சொன்னாள். அவளும் அவுங்கம்மாவும் காலம்பற வந்து, ரொம்ப நாளி பேசிக்கிட்டு இருந்தாங்களே.”

“அது என்னாது! ஆச்சரியமா இருக்குதே. நீ இந்நேரம் எங்கிட்டச் சொல்லல்லியே!”

“என்னமோ, வேலையிலே மறந்திட்டேன். அது... வள்ளிக்கும் மல்லனுக்கும் கண்ணாலம் நிச்சயமாயிட்டுதாம். எல்லாம் நல்ல வளியா நடந்தா, இந்த மாசக் கடைசியிலே முடிஞ்சிடுமாம்...”

“அதுக்குள்ளாரவா? — ஏன் எல்லாம் நல்லபடியா நடக்காதெ என்ன?”

“கண்ணாலத்துலேமுட்டும், தாலி கட்றவரையிலும் எதுவுஞ் சொல்ல முடியாது. இந்தச் சேதி சொல்லத்தான் லச்சுமி வந்தா; அப்படியே எனக்கும் கொஞ்சம் கண்ணைத் தொடைச்சிட்டுப் போனா.”

“ஒன் கண்ணைத் தொடைப்பானேன்?” என்றான் வேலன், உதட்டைக் கடித்துக்கொண்டு.

அலமேலு பெருமூச்சு விட்டாள். “ஒரு காலத்துலே, ஒனக்கும் அவளுக்கும் கண்ணாலம் பண்ணிடறதூன்னிட்டுப் பேசிக்கிட்டோம். இந்தக் கதிக்கு வருவோமின்னு, கனவுலேகூட நெனைக் கில்லையேடா, என்னப்பா!” என்று அவள் பல பல வென்று கண்ணீர் விட்டாள்.

“என்ன பயித்தியம் அம்மா, நீ! நாம் என்னா கதிக்கு வந்துட்டோம்? நாம் எப்படி ஆவறோம் பார். இதுக்கா அளுவறது?” என்று வெகு அன்புடன் அவள் கரங்களைத் தடவிக்கொடுத்தான்.

“ஆவறது ஆவட்டும். ஆண்டவன் ஆணையில்லாட்டி, ஒண்ணும் நடக்காது. ஆனா, எனக்கு என்னா பொறுக்கமாட்டிலே யின்னா, வள்ளியோடே நடத்தைதான். அவளுக்கு என்னா சந்தோசம் அவனைக் கட்டிக்கிறதுலே! கூடை கூடையாக நகையிருக்குதாம். அதைப்பத்தி என்ன பெருமை அடிச்சுக்கறா!”

“அதுலே என்ன ஆச்சரியம், அம்மா? பொம்பளெங்க எல்லாம் அப்படித்தான்; அவுங்களுக்கு நகைதானே வேணும்?”

“ஆமாண்டா, ஒனக்கு ரொம்பத் தெரியும்!” என்ற அலமேலு சொல்லிக்கொண்டிக்கும் பொழுதே, வள்ளி ஒரு சட்டி தேன்பாகுடன் வந்து சேர்ந்தாள். அவள் முகத்தில் ஆரோக்கியமும் லாவண்யமும் பிரகாசித்தன.

“இதோ, ஒங்களுக்கெல்லாம் நல்ல தேன்பாகு கொண்ணாந்திருக்கேன்,” என்றாள் வள்ளி, சிரித்த முகத்துடன்.

“சரி, இப்போநாச்சும் ஆப்பத்தைக் கொண்டாம்மா. என்ன தீஞ்ச நாத்தம் வருதே. அடுப்பிலே அப்படியே வச்சிக்கிட்டு வந்திட்டாயா? — பாரு பாரு,” என்று அலமேலுவைச் சமையலறைக்குத் துரத்திவிட்டு, அவள் முதுகு மறைந்ததும், வேலன் வள்ளியை முத்தமிட எத்தனித்தான். ஆனால், அதற்கு வள்ளி இடம்கொடுக்க வில்லை.

“சும்மா இரேன்; உன்னாலேயே காரியமெல்லாம் கெட்டுடும் போல் இருக்குதே,” என்று வள்ளி அவனைச் சற்றுக் கண்டித்தாள்.

“ஒரு சமாசாரம் இருக்குது; அத்தையை மொள்ள எங்கூட்டுக்கு அனுப்பிச்சிடுறேன் — என்ன அத்தே, ரொம்ப தீஞ்சு போச்சா!” என்று, அலமேலு சமையலறையிலிருந்து வருவதைப் பார்த்துக் கேட்டாள்.

“ஒண்ணும் ஆவல்லை. இதோ, சுடச்சுடக் கொண்டாந்திருக்கேன். வேணத்தை சாப்பிடுங்க,” என்று அலமேலு சொல்லிக் கொண்டே, அவர்களுக்கு ஆப்பங்களைப் பரிமாறி, அவற்றின் மேல் தேன்பாகையும் ஊற்றினாள்.

“அத்தே, எங்கம்மா ஒன்னைச் சட்டுனு வரச்சொன்னாங்க. ரெண்டு மூணுவகை ஊறுகாய் பண்ணிக்கிட்டு இருக்கா, அதுக் கெல்லாம் நீ வந்துதான் உப்புக்காரம் போடணுமாம்.”

“கண்ணாலத்துக்காங் காட்டியும்?”

“அதைக் கேக்கணுமா, அத்தே?” என்றாள் வள்ளி புன்னகையுடன்.

“வேலு, வள்ளிக்கும் மல்லனுக்கும் அடுத்த மாசம் மூணாந்தேதி வாக்குலே கண்ணாலம், தெரியுமல்ல?”

‘‘அதுக்குள்ளறவா! இன்னும் எட்டுநாள்கூட இல்லையே. கண்ணாலம் என்கிறது ஊரெல்லாம் தெரிஞ்ச சங்கதிதான். ஆனா, அவ்வளவு சட்டுனு முடிஞ்சிடுமின்னு நான் நெனைக்கல்லே,’’ என்றான் வேலன்.

‘‘கண்ணாலமானா என்ன அத்தே? நான் மாறிடுவேனா? கொளந்தப்போ இருந்து ஒங்கமேலே எல்லாம் பிரியமா இருந்திட்டு, இப்போ மட்டும் வேறே ஆவனா? நீங்க அப்படி ஆவீங்களோ என்னமோ! நான் செத்தாலும் எப்பவும் போலத்தான் இருப்பேன்.’’

அலமேலு விழித்தாள். அவள் மூளையை இழந்துவிட்டது போலக் காணப்பட்டாள்.

‘‘என்ன அத்தே, முளிக்கிறே?’’ என்றாள் வள்ளி, விஷமத்துடன்.

‘‘ஒண்ணும் இல்லேம்மா. இந்தக் காலத்தவங்க சங்கதியே, எனக்கு ஒண்ணும் விளங்கல்லே. எங்க நாளெல்லாம் — அது ஒரு போக்கு. கண்ணாலத்தைப் பத்தி நீங்க ரெண்டு பேரும் இவ்வளவு அசட்டையாய்ப் பேசுறீங்களே!’’

‘‘ஐயோ, அத்தே! அப்பாவி நீ!’’ என்று சொல்லிக்கொண்டு வள்ளி, கையை அலம்பி அலமேலுவைக் கட்டிக்கொண்டாள்.

‘‘போனால் போவுது; நீ எங்கூட்டுக்குச் சட்டுனு போ. இல்லாட்டி, எங்கம்மா என்னைத் திட்டுவா. எந்திருச்சுப் போயேன்; போ,’’ என்று வள்ளி வற்புறுத்தினாள்.

‘‘என்ன இவ்வளவு அவசரம், அடுப்பைக் கிடுப்பை அணைக்க வேண்டாமா? எல்லாத்தையும் போட்ட இடத்திலே போட்டுட்டா போவச் சொல்றே?’’

‘‘அதெல்லாம் நான் பாத்துக்கறேன். நீ போ, அத்தே. எங்கம்மா முன்னெப்போல இல்லே. எடுத்ததுக்கெல்லாம் என்னைத் திட்றா. அவளுக்குப்

பயம், நான் எங்கே மல்லனைக் கட்டிக்கமாட்டே னோன்னிட்டு. அவ, ஒண்ணும் இல்லாத்துக்கெல்லாம் பயந்துக் கிட்டா, நான் என்னா செய்யறது? அவன் ஊருக்கெல்லாம் பணக் காரனிங்கிறது எனக்குத் தெரியாதா? அவனைக் கட்டிக்கிட்டாச் சொகமா இருக்கமாட்டேனா? நான் என்ன அவ்வளவு புத்தி கெட்டவளா? எங்கம்மாவுக்கு எனக்கு ஒண்ணும் தெரியாதின்னிட்டு நெனைப்பு. அது போவுது; நீ எந்திருச்சிப் போயேன். நீ எனக்குத் திட்டு வாங்கி வெக்கணும்னு பாக்குறே. எந்திரி, போ போ,''என்று அலமேலுவை இமிசைப்படுத்தி துரத்திவிட்டாள்.

''ரொம்பக் கத்துக்கிட்டெயே,'' என்றான் வேலன், சிரித்துக் கொண்டு.

''கத்துக்காட்டி, என்ன பண்றது? இன்னும் ரொம்ப நாளைக்கு நாம் ஒத்தரை ஒத்தரு காணமுடியாது.''

''ஏன்?''

''அந்த மூளிக்கண்ணுப் பயல், நான் இங்கேயும் அங்கேயும் அலையக்கூடாதுங்குறான்னா; அதுவும் ஒங்க ஊட்டுக்கு வரவே கூடாதாம்! அவனைச் சமாதானப்படுத்தறதுக்கு, எங்கம்மா ஊட்டைவிட்டே நகரக் கூடாதுங்குறா. அந்தச் சோனிப்பய இப்பவே என்னை அதிகாரம் பண்ண ஆரம்பிச்சிட்டான்; நல்லாருக்குதில்லை? அவன் முப்பாட்டன் பொறந்து வந்தாக்கூட, அவன் எனக்குத் தாலிகட்ட மாட்டான்னிட்டு, அவன் கண்டுக்கல்லே! இன்னொரு சங்கதி. நான் கொஞ்ச நாளைக்கு ஒரு அறையிலே பூந்துக்கிட்டு, உள்பக்கம் தாப்பாப் போட்டுக்கப் போறேன்; சிரிக்காதே. எல்லாத்தையும் கேளு. எங்கப்பாவுக்கு ஒரு தங்கச்சி இருந்தாங்களாம். அந்த அம்மாவுக்கு, கணணாலத்துக்கு மொத நாள் பயித்தியம் பிடிச்சிப்போச்சாம். நான் அந்த அம்மாவைப் பாத்ததே இல்லை. நான் பொறக்காத்துக்கு முந்தியே செத்துட்டாங்களாம். நான் அந்த அம்மாவைப் போலையே இருக்கேனாம் — அப்போ, என் கண்ணாலத்தும்போது, எனக்கு மட்டும் ஏன் பயித்தியம் பிடிக்கக்கூடாது? ஒரு குடும்பத்துலே பயித்தியம் இருந்தா, அது ஆருக்காவது வந்துக்கிட்டு இருக்குமாமே — நீ

சிரிச்சாச் சிரி — நான் அப்படித்தான் செய்யப்போறேன். இல்லாட்டி, தாலி கட்டாமெ இருக்கிற வளி வேறொண்ணும் எனக்குத் தெம்பிடுல்லே.''

''வயித்தியம் பண்றமின்னு, ஒன்னை அடிச்சுப் பிடிச்சாங் கோன்னா, என்ன செய்வே?'' என்றான் வேலன்.

''என்னைத் தொடமாட்டாங்கா. எங்கப்பா உட்டுடுவாரா? என் மேலே கையை வச்சா, கொன்னுடமாட்டாரு? நான் மட்டும் சும்மாயிருப்போனா? ஆட்டி வெச்சுடமாட்டேன்! நீயும் வேணும்னா வந்து வேடிக்கையைப் பாரு,'' என்று பகபகவென்று சிரித்தாள்.

''இன்னொண்ணுகூட ஒன்கிட்டச் சொல்லணுமின்னு வந்தேன் — மீனாச்சி ஒனக்கு விரோதமா என்னமோ பண்ணிக்கிட்டு இருக்கா. எங்கப்பாவுக்கும் அம்மாவுக்கும் அது தெரியும்போல் இருக்குது. எந்நேரமும் குசுகுசுன்னு ரவசியம் பேசிக்கிறாங்க. என்னைக் கண்டா, பேச்சை நிறுத்திடறாங்க. அதைப் பத்தி அடிக்கடி சண்டைகூடப் போட்டுக்கறாங்க. மதுரையும் மீனாச்சியோடே கலந்துகிட்டாப்போலே இருக்குது. அதனாலே, நீ ரொம்ப சாக்கிரதையா இருக்கணும். எதுநாச்சும் முத்திப்போனா, அத்தெகிட்டே சங்கதி சொல்லி யனுப்பு — அத்தெ எங்கூட்டுக்கு அடிக்கடி வரும்படி நான் பாத்துக்கறேன். எனக்கு எதுநாச்சும் தெரிஞ்சுதுன்னா, நானும் சொல்லியனுப்பறேன். அத்தைக்கு இந்தச் சமாசாரமெல்லாம் தெரியவேணான்னு பாத்தேன். ஆனா, இப்போ அந்த அம்மாளையும் கைக்குள்ளே போட்டுக்காட்டி, காரியம் நடவாது. சாமி இருக்காரு, பாத்துக்கலாம்!''

''நம்மை ஒண்ணாச் சேத்துவச்ச சாமிக்கு நம்மைக் காப்பாத்தத் தானா தெரியாது?'' என்று சொல்லிக்கொண்டே, வேலன் மறுபடியும் வள்ளியை முத்தமிட முயன்றான். வள்ளி தலையை அசைத் துக்கொண்டு,

''வேல், நீ வர வர ரொம்பத் துடுக்கா இருக்கே. கண்ணாலம் ஆவாதே, முத்த... தீண்டவே கூடாது,'' என்றாள்.

“ஐயோ பயித்தியமே! முத்தங் கொடுத்தாத் தப்பா? நீ ஆரு? நான் ஆரு? ஆருநாச்சும் சிரிக்கப்போறாங்க. சாமியாலே கூட ஆவாதே நம்மைப் பிரிக்கறதுக்கு, வாள்ந்தா ஒண்ணா வாளலாம்; செத்தாலும் ஒண்ணாச் சொல்லியபடியே சாவலாம்,” என்று வேலன் அவளை ஆலிங்கனம் செய்துகொண்டான். வள்ளியும் அவன் அபிப்ராயத்தைச் சம்பூர்ணமாக அங்கீகரித்தாள்.

# 13. மர்மம் வெளிப்பட்டது

வள்ளி சென்று வெகுநேரம் வரையில், வேலன் அசைவற்று உட்கார்ந்திருந்தான். ஆனால், அவன் முகம் மட்டும் புன்சிரிப்பால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இவ்வாழ்க்கையிலும் ஆனந்தம் உண்டென்பதை அவன் அறிந்தான். அவனும் வள்ளியும் சுகமாகக் கழிக்கப்போகும் காலத்தைப் பற்றி, நினைத்து நினைத்துச் சந்தோஷப்பட்டான். வரவர, எதிர்கால நினைப்பால் பல சந்தேகங்களும், அவை மூலம் மனத்திற்கு வருத்தமும் ஏற்பட்டன. யோசிக்க யோசிக்க, வள்ளி சந்தேகப்படுவது சரியென்று அவனுக்குப் புலப்பட்டது. வீரப்பனும் மதுரையும், நிலங்களையெல்லாம் குசப்பட்டி கங்காணிக்கு விற்கும்படி தன் ‘அப்பா’வுக்குப் போதித்ததிலிருந்து, மர்மம் சற்று அதிகரித்ததே யொழியக் குறைய வில்லை. எக்காரணத்தினால் அவர்கள் இவ்வாறு தூண்டினர்கள் என்பதை, அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் பிரயத்தனங்கள் மீனாக்ஷிக்கு அநுகூலமானவையா? அல்லது பிரதி கூலமானவையா? மீனாக்ஷிக்கு விரோதமாக மதுரை நடப்பானா? அவளிடமிருந்து எவ்வளவோ லாபங்களடைய அவனுக்கு அவகாசம் இருந்ததே. ஆனால், அவர்கள் நிலங்களைப் பற்றிய மட்டில் மீனாக்ஷிக்கு என்ன குறைவு? அவள்தான் எல்லாவற்றையும் அனுபவித்துக்கொண்டு வந்தாளே. இதையெல்லாம் யோசித்துப் பார்க்குமளவில், மீனாக்ஷியின் சூழ்ச்சிகள் வள்ளியின் கலியாணத்திற்குச் சம்பந்தப்பட்டவை யென்று தோன்றின. ஒருகால், அக் கலியாணத்திற்குத் தன்னால் இடையூறு நேரிடுமென்று நினைத்தாளோ என்னவோ... எவ்வளவு மூடத்தனம்... பிறகு, வள்ளியே உண்டாக்கப்போகும் விக்கினங்களை நினைத்துத் தனக்குத் தானே சிரித்துக்கொண்டான். நேரில், மதுரையையே கேட்டு விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாமா வென்று அவன் யோசித்தான். அவன் சொல்லாமல் மறைத்து வைத்தால்? வீரப்பனைக் கேட்பது நடவாத காரியம். ஒருவிதமான கௌரவமும் நாணமும் தடை செய்தன. ‘சரி, இருக்கட்டும். எல்லாம் ஒரு வாரத்திற்குள் தெரிந்து விடும். அதற்குள் நடவடிக்கைகளைச் சரியாகக் கவனித்துப் பார்த்துக் கொண்டிருக்கலாம்,’ என்று அவன், ஒருவாறு தீர்மானித்துக் கொண்டான்.

மறுதினம் வருஷப் பிறப்பு. எல்லோரும் ஆனந்தமாய் இருக்க வேண்டிய நாள். அன்றைய தினம் மனத்திற்குக் கஷ்டமோ, சுகமோ எது ஏற்படுகிறதோ, அது வருஷம் முழுவதும் நேரிடப் போகும் சம்பவங்களுக்கு ஓர் அறிகுறியல்லவா? ஆகையால், இந்நாளை வெகு சந்தோஷமாகக் கழிக்கவேண்டுமென்று வேலன் நிச்சயத்துக்கொண்டான். ஆனால், மாங்காயும் வேப்பம்பூவும் இல்லாமல் எங்காவது வருஷப் பிறப்பு உண்டா? கிராமத்தில் ஒரு வேப்பமரம், மாமரம் பாக்கியில்லாமல், சிறுவர்கள் ஏறிப் பாழாக்கினார்கள். ஆனால், இக்காலையில் அதிகக் கும்பல் கூடின இடம், கழிவு வாய்க்கால் கரைதான். இவ்விடத்தில், வளைந்து வளைந்து போகும் வாய்க்கால் மேட்டில், ஏறக்குறைய முப்பது மாமரங்கள் இருந்தன. இம்மரங்களெல்லாம், வாய்க்காலை ஒட்டியிருந்த நிலக்காரர்களுக்குப் பொதுச் சொத்து. ஆனால், மரங்களை வெட்டும் பொழுது தவிர, மற்றச் சமயங்களில் இவ்வுரிமையை ஒருவரும் கவனிப்பதில்லை. இம்மரங்களிலெல்லாம், வாலிபர்கள் குரங்குகளைப்போல் கிளைகளில் தொத்திக் கொண்டு, போட்டிபோட்டுக் காய்களைப் பறித்துக் கொண்டிருந்தனர். வயோதிகர் சிலர், கீழே விழுந்தவைகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தனர். எங்கும் ஒரே கூச்சலும் விளையாட்டுமாக இருந்தது. வேலனும் அவன் சிநேகிதர்களில் இருவரும், ‘தேங்காய்க்காச்சி’ என்ற மரத்தின்மேல் இருந்தார்கள். அம்மரத்தின் காய்கள் பெரியனவாகவும் இனிப்பாகவும் இருக்குமாகையால், ஆதிமுதல் வேலனுக்கு அம்மரத்தையே சுற்றித் திரிவது வழக்கம். அதுவும் தவிர, இது அவர்களுடைய ‘நத்தைத்தோட்ட’த்தையும் ஒட்டியிருந்தது. காய்களைப் பறித்துக் கொண்டு மரத்திலிருந்து இறங்கும்பொழுது, மல்லன், அவனுடைய தகப்பனார், அவர்கள் வேலையாட்களில் ஒருவன், இம் மூவரும் அம்மரத்தண்டை வருவதை வேலன் பார்த்தான். அம் மரத்துக் காயை எல்லோரும் விரும்புவது சகஜம்தான். மல்லன் இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு, வெகு தோரணையுடன் வேலன் இறங்குவதைப் பார்த்துக்கொண்டிருந்தான். வேலன் கீழே வந்தவுடன், மல்லன் அவனை ஏற இறங்கப் பார்த்து, “உனக்கு வெக்கமில்லே?” என்று கேட்டான்.

வேலன் திகைத்துப்போய்விட்டான். ஆயினும், முன்னே நடக் கப்போகும் காரியங்களை உத்தேசித்து, அவன் சண்டையில்லாமல் ஒதுங்கிக்கொள்வது நலமென்று நினைத்து, ‘‘நீ சொல்றது எனக்கு ஒண்ணும் தெரியில்லையே,’’ என்றான்.

‘‘இந்த மரத்துலே, காய் பறிக்க ஒனக்கு என்ன அதிகாரம் இருக்குது?’’ என்று மல்லன் சீறினான்.

‘‘ஓ, அதுவா? தெரிஞ்சிச்சு, தெரிஞ்சிச்சு. இவர்களுக்கெல்லாம் என்ன அதிகாரம் இருக்கு?’’ என்று அவன் அங்கிருந்தவர்களை யெல்லாம் சுட்டிக் காட்டினான்.

‘‘அவுங்களுக்கெல்லாம் இங்கே நெலம் இருக்குது,’’ என்றான் மல்லன்; நிலமில்லாதவர்கள் சிலர் அங்கிருந்தபோதிலும் அவன் இவ்வாறு கொன்னான்.

‘‘எங்களுக்கும் இருக்குது. ‘நத்தைத்தோட்டம்’ எங்கிளுது இல்லையா? ஒத்திக்கி வச்சா, எளந்திட்டாப்பலேதானா?’’

‘‘அப்போ, வெள்ளாமை இடுறதுதானே?’’ என்று மல்லன் வெகு இகழ்ச்சியாகச் சொன்னான்.

அவன் அற்பத்தனமாகச் சொன்னது யாருக்கும் பிடிக்கவில்லை. வேலன் வாய்திறந்து பதில் சொல்வதற்குமுன், அவன் சிநேகிதன் ஒருவன் குறும்புத்தனமாக, ‘‘கண்ணாலம் கிட்ட நெருங்க நெருங்க, மல்லன் ஆம்பிளை ஆரான்டா,’’ என்றான்.

இப்படிக் குறிப்பாகத் தன்னை அவமதிப்பதைக் கேட்டவுடன், மல்லனுக்கு அளவில்லாத கோபம் வந்தது; சரியான பதில் சொல்வதற்குத் தத்தளித்தளித்துக் கொண்டிருந்தான். அச்சமயம் வேலன், ‘‘அவனுக்குக் கலியாணந்தான் நெருங்குதோ இல்லை வேறே எதினாச்சும் நெருங்குதோ, நீயே

பாப்பே, இரு'' என்றான். சொன்ன பின், வேலன் உதட்டைக் கடித்துக் கொண்டான்.

இதுவரையில் மல்லனுடைய தகப்பனார் வாயைத் திறக்கவில்லை. ஆனால் இம்மாதிரி வேலன் சொன்னவுடன், இவன் வெறிபிடித்தவனைப்போல் எல்லோரையும் தள்ளிக்கொண்டு வேலனிடம் வந்து, கைகளும் கால்களும் பதறப் பதறச் சொல்லலானான்: ‘‘என்ன, என்ன சொல்றே? நீ என்னடா பண்ணிடுவே? அந்த மெரட்டலுக்கு வெவரத்தைச் சொல்லு நீ — ஊரான் சொத்தை வெக்கமில்லாத வறண்டிவிட்டு, மெரட்டல் வேறேயா? இதோ, நீங்க இத்தனைபேரும் கேட்டுக்கிட்டு இருந்தீங்க — அவன் எங்களை என்ன செய்யணுமின்னு எண்ணிக்கிட்டு இருக்கானோ, அதைச் சொல்லாட்டி நான் அவனை உட மாட்டேன்,'' என்று சொல்லிக்கொண்டு, வேலன் கையைப் பிடித்துக் கொண்டான்.

‘‘எடு கையை!'' என்று வேலன் கர்ஜித்து, அவன் கையை உதறிவிட்டான். ‘‘நீயோ, ஒன் சொத்தோ! இந்தா, இதெல்லாம் ஒன் தலையிலேயே போட்டுக்கோ,'' என்று சொல்லி, வேலன் மாங்காய்களை அவன் முகத்தில் எறிந்தான். மாயாண்டி நடுநடுங்கிச் சரேலென்று பின்வாங்கினான்.

‘‘பிச்சைக்காரப் பயலே! ஒனக்கு இவ்வளவு துணிச்சலா? கன்னியப்பா, அந்தப் பயலைச் செருப்பாலே அடி. இதாலே ஆயிரஞ் செலவானாலும் சரி,'' என்று மல்லன், தன் பண்ணை ஆட்களுக்குக்கு கட்டளையிட்டான்.

‘‘மானங்கெட்டப் பயலே! இதோ, இங்கேயே இப்பவே ஒன் முளிபுதுங்குறாப்போலே அடிக்காட்டிக் கேளு,'' என்று கூவிக் கொண்டு, வேலன் மல்லன்மேல் புலிபோல் பாய்ந்தான். சமீபத்தில் இருந்தவர்கள் வேலனைக் கட்டிப் பிடித்துக்கொண்டார்கள். ஆனால் இதற்கு முன்னரே, மல்லன் வெகு முன் ஜாக்கிரதையுடன் பின்வாங்கிவிட்டான்.

‘‘பிச்சையெடுத்துத் திங்கிறதுலே கொறவில்லை; ஒனக்கு இவ்வளவு ஆணுவமா? ஒனக்குத் தகுந்த மருவாதி நாளைக்குப் பண்றேன். டேய்!

நாளைக்குத் தப்பாது. அப்போ என்னை நெனைச்சுக்கோ,'' என்று மல்லன் இரைந்தான்.

வேலனுக்கு ஆத்திரம் பொறுக்க முடியவில்லை. ''சாதி கெட்ட பயலே! ஒனக்கு மருவாதி இப்பவே பண்றேன்டா,'' என்று கூச்சல்போட்டு, தன் சிநேகிதர்களைத் திமிறிக்கொண்டு மல்லன் மேல் விழுந்து, அவன் குடுமியைப் பிடித்து இழுத்து, 'தபால்' என்று கீழே தள்ளினான். உடனே, அங்கிருந்தவர்கள் வேலனைக் கட்டிப்பிடித்துத் தள்ளிக்கொண்டு போனார்கள்.

சண்டை முற்றி விபரீதமாக முடியுமென்று பயந்து, வேலனுடைய சிநேகிதர்கள் அவனைப் பலாத்காரமாக வீட்டுக்கு இழுத்துக்கொண்டு சென்றனர். வீட்டண்டை வந்தவுடன், அவர்களில் ஒருவன் அவனுக்குச் சில மாங்காய்களையும் கொடுத்தான். வேலனுக்கு அழாத துக்கம். ஆயினும், தன் சிநேகிதனுடைய அன்பிற் கும் அநுதாபத்திற்கும் வந்தனம் அளிப்பது போல் சிரிக்க முயன்றான்.

இச்சண்டையைப் பற்றித் தன் தாய் தந்தையரிடம் சொல்ல வேலனுக்கு இஷ்டமில்லை. அவன் ஏகாந்தமாக இருக்க விரும்பினான். ஆகையினால், ஓசை செய்யாமல் மாங்காய்களைச் சமையலறையண்டை போட்டுவிட்டு, காலியாய்ப் பாழடைந்து கிடக்கும் தானிய அறைக்குள் சென்றான். துண்டு வேஷ்டியால் தூசியைத் தட்டிவிட்டு, அத்துண்டையே கீழே பரப்பி, அதன்மேல் அவன் மல்லாந்து படுத்துக்கொண்டான். புது வருஷம் தனக்கு இவ்வாறுதானா பிறக்க வேண்டுமென்று, அவன் வருத்தப்பட்டான்.

சண்டை எப்படி ஆரம்பித்ததென்று அவன் நிதானமாக யோசித்துப் பார்த்தான். தான் ஒரு குற்றமும் செய்ததாக அவனுக்குப் புலப்படவில்லை. அவன் உரிமை ஒரு பக்கம் இருக்கட்டும்; வருஷப் பிறப்பன்று மாங்காய் பறிப்பதை எங்கேயாவது தடுப்பதுண்டா? யார் மரமாக இருந்தாலென்ன? யார் பறித்தாலென்ன? இப்புதுமையை அவன் கண்டதும் இல்லை கேட்டதும் இல்லையே; மல்லனும் அவன் தகப்பனும் காரணம் ஒன்றுமில்லாமல் தன்னுடன் வம்புச் சண்டைக்கு வந்ததாக அல்லவா தோன்றிற்று? ஆனால்,

அவன் ஒரு காரியம் செய்திருக்கலாம். கலியாணத்தின்போது சம்பவிக்கப்போகும் இடையூற்றைப் பற்றி ஜாடை யாகக்கூடச் சொல்லாமல் இருந்திருக்கலாம். அனாவசியமாக, அவன் அவர்களுக்கு ஓர் எச்சரிக்கை கொடுத்ததுபோல் ஆயிற்று. ஒருவிதத்தில் வள்ளியையும் காட்டிக்கொடுத்தாற்போல் இருந்தது அவன் செயல். இதனால், அவள் யோசித்திருக்கும் ஏற்பாட்டிற்கு ஒரு வேளை தடங்கல் நேரிடுமோ என்னமோ!

நடந்துபோனதைப் பற்றிச் சிந்திப்பதில் என்ன லாபம்! இனி நடக்கப்போகும் விஷயங்களைப்பற்றி அல்லவா கவனிக்க வேண்டும்? மறுநாள் தனக்கு எதோ‘மரியாதை’ பண்ணுவதாக மல்லன் பிதற்றினானே; அது என்னவாயிருக்கும்? நிச்சயம் அது ஒரு பெரிய ஆபத்தாகத்தான் இருக்கவேண்டும். இல்லாவிடில், மல்லன் அவ்வளவு தைரியமாகப் பேசியிருக்கமாட்டான். இருக்கட்டும்; ஓர் இரவு கழிந்தால் எல்லாம் தெரிந்துவிடுகிறது. ஆனால், அதுவரையிலும் ஏன் காத்திருக்க வேண்டும்? அவ்விஷயம் மதுரைக்கும் வீரப்பனுக்கும் தெரியாமல் இராதே. வள்ளியின் வீட்டுக்குப் போவது நடவாத காரியம். ஆகையினால், தனக்குத் தெரிந்ததை யெல்லாம் கக்கும்படி மதுரையை வற்புறுத்த வேண்டியதுதான். அவன் முடியாதென்று சொல்லிவிடுவானா? அதையுந்தான் பார்க்கலாமென்று நினைத்ததுதான் தாமதம். அடுத்த க்ஷணமே வேலன் மதுரையின் வீட்டிற்கு ஓடினான்.

அவன் மல்லனோடு சண்டைபோட்ட செய்தி ஊரெல்லாம் பரவிவிட்டது. எல்லாரும் தன்னையே ஆதரிப்பார்களென்பது வேலனுக்குத் தெரியும். இருந்தபோதிலும், சண்டை நடக்கும் சமயத்தில் சமீபத்தில் இல்லாதவர்களெல்லாம், அவனைப் பற் பல கேள்விகள் கேட்கும்பொழுது, அவனுக்குக் கஷ்டமாயிருந்தது. ஆகையால், தான் அவசரமாக மதுரை வீட்டிற்குப் போக வேண்டுமென்று, அங்கொரு வார்த்தை இங்கொரு வார்த்தை சொல்லிவிட்டு, விரைவாக மதுரையின் வீட்டையடைந்தான். மதுரை அவனை வெகு ஆவலுடன் வரவேற்றான். மதுரையினுடைய மனப்பூர்வமான அன்பைப் பார்த்து வேலன், தான் அவனைச் சந்தேகிப்பது தப்பென்று நினைத்தான்.

மதுரை, ‘‘வேலு, சங்கதியெல்லாம் என் காதிலே உளுந்திச் சப்பா. என் மனசு எவ்வளவு வருத்தப்படுதென்பது ஒனக்குத் தெரியாது. என்ன கொடுமை; நான் சொன்னாலும் நம்பமாட்டாங்க. கொஞ்சம் பேரு, நான் மீனாட்சியோடு சேர்ந்து கிட்டு ஒங்களைக் கெடுக்கிறேனின்னு கூடச் சொல்றாங்க. அதுவும் எனக்குத் தெரியும். நான் மறுத்துப் பேசினா, பாசாங்குன்னுகூடச் சொல்லுவாங்க — ஆனால், உளுமை கடவுளுக்குத்தான் தெரியும்,’’ என்று கை கூப்பி வானத்தை நோக்கிச் சொன்னான்.

‘‘மெய்யாலும் மாமா, நான்கூட அப்படித்தான் நெனைச்சேன். ஆனா, இப்போ தெரிஞ்சுக்கிட்டேன். நீ ஒண்ணும் மனசுலே வச்சுக்காதே. நான் இப்போ என்னாத்துக்கு வந்தேன்னா... சங்கதி ஒண்ணு தெரிஞ்சுக் கொள்ளணும், ஒன்னைக் கேக்க வாண்டாமுனு பாத்தேன். ஆனா, வேதனை பொறுக்க மாட்டலே. சோறு தண்ணிகூட எறங்கமாட்டேங்குது,’’ என்றான் வேலன்.

‘‘வேலு, எனக்குத் தெரிஞ்சதெல்லாம் ஒனக்குச் சொல்லாட்டி, ஆருக்குச் சொல்லப்போறேன்? ஒனக்கு என்ன வேணும்? சொல்லப்பா,’’ என்று சொல்லிக்கொண்டே நாலு பக்கங்களிலும் சுற்றிப் பார்த்து, அவன் வேலனிடம் நெருங்கினான்.

‘‘அன்னிக்கு, நீயும் வீரப்பனும் மாமனும் எங்கப்பாருகிட்டே என்னாத்துக்கு வந்தீங்க?’’

‘‘ஓ! அதா? வேலு, நீயும் கொஞ்சம் சாமர்த்தியக்காரன்தான்! நான் என்னமோண்ணு நெனைச்சேன். என்னத்துக்கு வந்தமா? — அந்தப் பாவியோடு கலந்து பேசி, அவனுக்கு எங்களாலே ஆன நம்மையைப் பண்ணலாமுன்னு வந்தோம். நெலத்தை எல்லாம், ஒரு பாடா கொசப்பட்டிக் கங்காணிக்கு வித்திட்டு, மிஞ்சினதை வச்சுக்கிட்டுக் கஷ்டப்படாமே காலத்தைக் களிக்கலாமின்னு அவன்கிட்டே சொல்லிப் பாத்தோம். ஆனா, அவன் நாங்க சொல்லறதைக் கடசீவரையிலும் கேக்கமாட்டானே. பயித்தியம் பிடிச்சவன்போலே இல்ல கத்த ஆரம்பிச்சுட்டான்? என்ன திட்டு, என்ன பேச்சு! இன்னும் கொஞ்ச நாளி அங்கே இருந்திருந்தா, அண்டை

ஊட்டுக்காரங்களெல்லாம் வந்து, கும்பல் கூடிப்போயிருக்குமே. எங்க பாடு திண்டாட்டமாவ அல்ல போயிருக்கும்? அந்த எளவுக்காகத்தான் வாயை முடிக்கிட்டுத் திரும்பிட்டோம்.''

''எங்கப்பாரு சங்கதியெல்லாம் நல்லாத் தெரிஞ்சுகூட, நெலத்தை விக்கற பேச்சு ஏன் மாமா அவருகிட்ட எடுக்கறீங்க? அதை உட்டுட்டு, வேறே எதுனாச்சும் பேசக்கூடாதா?'' என்று கெஞ்சினாற்போல் வேலன் உரைத்தான்.

''வேலு, அவன் நெலத்தை விக்க ஒப்பமாட்டான் என்கிறது எனக்குத் தெரியாதா? ஆனா எல்லாத்தையும் அடியோட எளந்துடருதைவிட, கொஞ்சம் சாட்பாட்டுக்குநாச்சியும் நிப்பாட்டிக்கிறது நல்லதில்லையா? நீயே சொல்லு.''

''அப்படி தலை போற ஆபத்து, இப்போ என்ன வந்திடிச்சு, மாமா? இன்னும் அறுவது வருசத்துக்கு, நெலத்துக்கிட்டே எவன் போவ முடியும்? அதுக்குள்ளே, என்ன என்ன ஆவுதோ, ஆரு கண்டாங்க?'' என்றான் வேலன்.

''அந்தப் பாவியும் அப்படித் தாண்டாப்பா எண்ணிக்கிட்டு இருக்கான். ஆனா, விசயம் ரொம்பதூரம் போயிடுச்சு. அந்தப் பயல் மாயாண்டி பெரிய சூது செஞ்சிட்டானே! இன்னும் ஒரு மாசத்துக்கெல்லாம், ஒங்க சொத்தெல்லாம் அடியோடு ஏலத்துக்குக் கொண்ணாந்து, வாயிலே போட்டுக்கப் போறாண்டாப்பா? ஊட்டைக்கூடப் பிடுங்கிக்கிட்டு, ஒங்களைத் தெருவுலே தொரத்தப் போறானாம். சரிதானா?'' என்று மதுரை வயிறெரிந்து சொன்னான்.

வேலனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. ''நீ சொல்றது ஒண்ணுமே புரியில்லையே, மாமா. கொஞ்சம் வெவரமாச் சொல்லக் கூடாதா?'' என்று வேலன் கெஞ்சினான்.

மதுரை, மறுபடியும் தன் சுபாவம்போல் நாலுபுறத்திலும் சுற்றிப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான்: ''வேலு, இந்தப் பேச்சை வெளியிலே மட்டும் விட்டுவிடாதே. நெலத்தை ஒத்திக்கி வச்ச ரெண்டு வருசத்துக்கெல்லாம், வெங்கடாசலம், வண்ணாரப்பேட்டைப் பளனியாண்டி பிள்ளைகிட்ட அன்னூறு

ரூவா கடன் வாங்கினான். அதுக்காவ இதுவரையிலும் ஒரு காசுகூடக் கொடுக்கலை. இதுக்கு வெங்கடாசலத்து மேலே நான் குத்தம் சொல்லல்லே — அவன் என்ன பண்ணுவான் பாவி? பளனியாண்டி பிள்ளைக்கு இப்போ பணமொடையாம். இதை எப்படியோ மாயாண்டி தெரிஞ்சுக்கிட்டு, அவனுக்கு வட்டியும் மொதலும் கொடுத்திட்டுப் 'பாண்டை' தன்மேலே மேடோவரும் பண்ணிக்கிட்டான் — அதாவது மாத்திக்கிட்டான். தம்பேருலே மாத்திக்கணுமிங்கற ஆத்துரத்துலே, இன்னுங்கூடக் கொஞ்சம் பணம் கொடுத் தான்னிட்டு செல பேரு சொல்றாங்க. அது கடவுளுக்குத்தான் தெரியும். மொட்டச்சி பணத்தைத் தின்னிட்டு, திமிரு பிடிச்சு திரியறானே, அந்தப் பாவி. அவன் எவ்வளவு பொல்லாதவன் தெரியுமா? மீனாச்சிகூட அவ்வளவுக்கு போகவாணாமின்னா. அந்தப் பய கேக்கமாட்டேன்னிட்டு, ஒரு கால்லே நின்னில்லே, காரியத்தை முடிச்சுட்டான்! ஐயோ வேலு! அவன் ஒன்னை இந்த ஊரைவிட்டே தொரத்திடல்ல பாக்கறான் — என்னாத்துக்குத் தெரியுமா? நீ அவன் மகனுக்குப் போட்டிக்காரனாம். நீ இந்த ஊரிலே இருக்கறமட்டும், வள்ளி அவன் மகனைச் சட்டை செய்ய மாட்டாளாம். அவனை உட்டுட்டு, ஒன்னோட ஓடிடுவாளாம். எவ்வளவு வெக்கங் கெட்டவனோ, பாரு.''

''மானங்கெட்ட பய! சரி, அவன் சங்கதியை நான் பாத்துக்கறேன். ஆனா, திடும்முனு இப்போ என்ன தலைபோறது வந்திடிச்சு? அதைச் சொல்ல மாட்டேங்கறையே, மாமா?''

''சொல்றேண்டாப்பா, சொல்றேன். மொதலும் வட்டியும் சேத்து, ஆயிரம் ரூவாயிக்கு ஒங்கமேலே மாயாண்டி பிராது பண்ணிட்டான். சம்மனு, இன்னிக்கு வருதோ நாளைக்கு வருதோ. தாவா பண்ணின பணத்தைக் குடுக்காட்டி, சொத்து மேலேதான் போவாங்க. இந்தக் காலத்துலேதான், நன்மைக்கும் சரி தீமைக்கும் சரி, வளி தேடிக் குடுக்க வக்கீலுங்க இருக்காங்க. அவங்களை வச்சிக்கிட்டு, ஒங்களுக்குக் கால்துட்டுக்கூட மிஞ்சாமெ, நெலம் புலம், ஊடு வாசல் எல்லாத்தையும் கட்டிப்பாங்க. அப்பவும் கடன் தீராட்டி, ஆளையும் பிடிச்சி ஜெயில்லே வச்சாலும் வெப்பாங்க. அந்தச் சண்டாளப்பயல் என்னதான் செய்யமாட்டான்!''

“எங்கப்பாருக்கு, இந்த வெவரமெல்லாம் தெரியுமா?” என்று வேலன் கேட்டான்.

“அவனுக்கு எப்படித் தெரியும்? அன்னிக்குத்தான் எங்களை வாயைத் தெறக்கவே உடலையே. வெறிபிடிச்சவனாட்டம் கத்த ஆரம்பிச்சுட்டானே. என்னைக் கண்டபடி திட்டினான். அவன் நொந்தவன். அவன் வெசவை நான் சட்டையே பண்ணல்லை. ஆனா, நான் நெனைச்ச காரியம் முடியல்லையே. மாயாண்டி, தூங்கிறவன் தலெலே கல்லைப் போடறவனாச்சே! என்ன என்ன கூத்து நடக்கப் போவுதோ, ஆண்டவனுக்குத்தான் தெரியும்! இனிமே ஒன்னைவிட்டா, யாரும் இந்த விசயத்தைப்பத்தி, அவன் கிட்டே பேச முடியாது. நான் சொல்றபடி செய். சம்மனு வர்ற வரையிலும் சும்மாயிரு. சம்மனு வந்தப்பறம் அதைக் கையிலே வச்சிக்கிட்டு, எவ்வளவு ஆபத்து என்கிறதை எடுத்துக்காட்டி, நீ அவனை வளிக்கிக் கொண்டாந்துட்டியானா, நீ ஒரு கோயிலைக் கட்டி வச்சாப்பலே இருக்கும். ஒன்மேலே அவனுக்கு உசிரு. அதனாலே, நீ சொன்னால் கேட்டாலும் கேட்பான். கெஞ்சிக் கூத்தாடி எப்படியாச்சும் அவன் மனசைத் திருப்பிடுடா, அப்பா!” என்று மதுரை கேட்டுக்கொண்டான்.

“இவ்வளவுதானா? இன்னும் எதுநாச்சும் இருக்குதா?” என்றான் வேலன், வெகு விசனத்துடன்.

“இது போதாதாப்பா! ஊம், இருக்கட்டும். நீ எதுக்கும் பயப்படாதே. சாமி ஒண்ணு இருக்குது. ஒரு வளி விடாத போவாது.”

“சாமியாவது! மல்லனையும் மாயாண்டியையும் படச்ச சாமி ஒரு சாமியா?” என்று வேலன் அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

“அப்பிடியெல்லாஞ் சொல்லாதே! நாம போன பொறவியிலே என்ன பாவம் பண்ணினமோ, அதெல்லாம் தீத்துக்கத்தானே வேணும்?”

“அந்த எளவு எப்படியோ போவட்டும், மாமா. சரி, நான் போய் வர்றேன்,” என்று சொல்லி, வீட்டுக்குத் திரும்பினான்.

# 14. மண்ணாசை

வருஷப் பிறப்பன்று சாயங்காலம், பஞ்சாங்கக்கார ஐயர் புதுப் பஞ்சாங்கத்தைப் படித்துப் புது வருஷத்தின் பலாபலன்களை, அதுவும் விவசாயத் தொழிலைப் பற்றி முக்கியமாகச் சொல்வது வழக்கம். வழக்கம்போல் இவ்வருஷமும், பெருமாள் கோவில் முன் உத்ஸவத்திற்காகப் போட்டிருந்த கொட்டகையில், புரோகிதப் பிராமணர் உபந்நியாசம் செய்து கொண்டிருந்தார். கொட்டகை நிரம்ப ஜனங்கள் இருந்தார்கள். பெரியவர்கள், ஐயர் எடுத்துரைக்கும் கந்தாய பலன்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால், அங்கிருந்த சிறுவர்களின் கவனமெல்லாம், உபந்நியாசத்திற்கப்பால் விநியோகம் செய்யப்படும் சுண்டல், வாழைப்பழம், பானகம், நீர்மோர் முதலிய தின்பண்டங்களில்தான் இருந்தது. அதனால், அச்சிறுவர்கள் தங்களுடைய விளையாட்டிலேயே ஈடுபட்டு, உபந்நியாசத்தைக் கேட்பவர்களுக்குக் கோபம் வரும்படி, அடிக்கடி கூச்சல் போட்டார்கள். வேலன் ஒதுக்குப்புறமாக ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்தான். அச்சிறுவர்கள் செய்யும் குறும்புகளைப் பார்த்து, மற்றக் காலங்களில் அவன் ஆனந்தித்திருப்பான். ஆனால் இன்றையத் தினம், அவன் மனம் துக்கத்திலேயே ஆழ்ந்திருந்தது. அவர்களில் ஒரு பையன் மிகவும் பொல்லாதவனாயிருந்தான். அவனை வேலன் கோபித்துக்கொண்ட பொழுது, அவன் நகைப்புக்காட்டி, வேணுமென்றே அதிகக் கூச்சல் போட ஆரம்பித்தான். அப்பொழுது வேலன் அவனை அடிக்கப் போனான். அச்சிறுவன் பந்தலை விட்டு வெளியே ஓடினான். வேலனும் அவனைப் பயப்படுத்துவதற்காகத் துரத்தினான். அச் சமயத்தில் வேலன், அருகிலிருந்த ஒரு பெரிய வேப்பமரத்தடியில், மதுரையும் சட்டை தலைப்பாகை அணிந்த உத்தியோகஸ்தனைப்போல் தோன்றின ஒரு மனிதனும், வெகு ஊக்கத்துடன் பேசுவதைக் கண்டான். மதுரை, வேலனைப் பார்த்தான். உடனே, அவன் அந்த உத்தியோகஸ்தனை மரத்தடியிலேயே நிறுத்திவிட்டு, விரைவாக வேலனண்டை வந்தான்.

“அவன்தான் சம்மன் கொண்டுவந்திருக்கும் அமீனா. அளச்சுக்கிட்டுப் போ,” என்று சொல்லிக்கொண்டே, வேலனிடம் நில்லாமல் கொட்டகைக்குள்

நுழைந்தான்.

வேலன் தலையை ஆட்டிக்கொண்டு, அமீனாவிடம் சென்றான். அவன் மிகவும் நல்லவனாகக் காணப்பட்டான். சம்மன் கொண்டுவரும் அமீனாக்கள் இவ்வளவு நல்லவர்களாயிருப்பார் களென்று வேலன் நம்பவேயில்லை.

''மதுரையை நான் வெகுநாளாய் அறிவேன். உன்னுடைய தகப்பனார் சமாச்சாரமெல்லாம் அவர் சொன்னார். உங்களுடைய கஷ்டத்தை ஊரெல்லாம் தமுக்கடிக்கிறதில் எனக்கு என்ன லாபம்? உன் தகப்பனாரிடம் என்னை அழைத்துக்கொண்டு போ; சீக்கிரம் காரியத்தை முடித்து விடலாம். என்னைப் பார்த்துச் சந்தோஷப் படுகிறவர்கள் யாரும் இல்லை. என்னைத் திட்டாமல் இருந்தால், அதுவே பெரிய காரியம்,'' என்று புன்னகையுடன் அந்த அமீனா சொன்னான்.

வேலன் அவனுடைய இரக்கத்தைப் பாராட்டிவிட்டு, அவனைத் தெருவுக்குப் பின்புறம் இருக்கும் ஒரு குறுக்கு வழியாய்த் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

முதலில், வெங்கடாசலம் அந்தச் சம்மன் தன்னுடையதாயிருக்குமென்று நம்பவேயில்லை. அதைக் கண்ணால்கூடப் பார்க்கமாட்டேனென்று சொல்லிவிட்டான். பிறகு, மெள்ள மெள்ள, வேலன் அவனுக்குப் பழனியாண்டி பிள்ளையிடமிருந்த லேவாதேவியை ஞாபகப்படுத்தினான்.

அப்புறம் படிப்படியாக, மாயாண்டி செய்த அநியாயத்தையும், எக்காரணத்தினால் அவன் அப்படிச் செய்தான் என்பதையும், வேலன் எடுத்துரைத்தான். அப்பொழுதுதான், வெங்கடாசலம் சம்மனை வாங்கிப் பார்த்தான். பார்த்த மாத்திரத்தில், அவன் தலைமேல் இடிவிழுந்தாற்போல் இருந்தது. அக்காகிதம் அவன் கையைப் பொசுக்குவதுபோல் இருந்தது. அவனுடைய இருதயம் படபட வென்று அடித்துக்கொண்டது. அந்தப் பிராதினால் உண்டாகப்போகும் தீமைகள், அவன்முன் மலைகள்போல் வந்து நின்றன. மனம் சஞ்சலப்பட்டுத் தவித்தது. ''அந்த அக்குருமக் காரப் பசங்க

வேலை இது,'' என்று கூச்சலிட்டான். ஆத்திரத்தில் தான் முடவனாய்விட்டான் என்பதை மறந்து, திடீரென்று எழுந்து உட்கார முயன்றான்; முடியாமல் வலியுடன் தவித்தான்.

''இது மதுரை ஔவே; வீரப்பன்கூடத்தான்,'' என்று மறுபடியும், பல்லைக் கடித்துக்கொண்டு இரைந்தான்.

''அவுங்க இதுலே ஒண்ணுங் கலக்கல்லே, அப்பா. அவுங்களாலே ஆனமுட்டும் ஒதவிதான் பண்ணிக்கிட்டு இருக்காங்க'' என்றான் வேலன்.

''நமக்கு ஒதவியா பண்றாங்க, அட மடயா! அட புத்தி கெட்டவனே! அந்தக் கொலைக்காரப் பாவிங்க நம்ம களுத்துக்குச் சுருக்கு மாட்டத் தயாராயிருக்காங்க — நீ அதுலே களுத்தை நீட்டலாங்கரையேடா? ஒன் புத்திக்கு நான் என்ன சொல்லுவேன்!'' என்று வெங்கடாசலம் நொந்துகொண்டான்.

தன் அப்பாவை மறுத்துப் பேசியது தப்பென்று வேலனுக்குப் பட்டது. வேற்று மனிதன் முன், தன் வீட்டு விஷயங்களைப் பேச அவனுக்குச் சிறிதுகூட இஷ்டமில்லை. ஆதலால், தன் அப்பாவினிடம் சமாதானமாகச் சொன்னான். ''ஐயாவைக் கையெளுத்துப்போட்டு அனுப்பிச்சிடுங்க. அவரை காக்க ஏன் வைக்கணும்? நமக்காவ, வளியை உட்டு வளி வந்தாரே.''

''மெய்தான், மெய்தான்,'' என்று சொல்லிக்கொண்டு வெங்கடாசலம், காட்டின இடத்தில் படுத்தவாறே கையொப்பமிட்டான். உடனே அமீனா, காகிதங்களைச் சுருட்டிக்கொண்டு, இடத்தை விட்டு நகர்ந்தால் போதுமென்று, விரைவில் விடைபெற்றுக் கொண்டான். வேலன், தன் தந்தையின் கோபம் தணியுமாறு சற்றுநேரம் மௌனமாய் உட்கார்ந்தான். ஆனால், புகைந்து புகைந்த எரிமலை தீமாரி பெய்வதுபோல, வெங்கடாசலம் முன்னிலும் பதின்மடங்கு அதிக ஆவேசத்துடன் கூவத் தொடங் கினான். ''கொலைக்காரப் பாவிங்க! ரெண்டுபேரும் சேந்துகிட்டு என் களுத்தை அறுத்திட்டாங்களே! கூடப் பொறந்தவங்கபோல நம்பினதுக்கு, என்னை நடு ஆத்திலே தள்ளிட்டாங்களே!

ஒரு பகையாளிகூட இப்படிப் பண்ணமாட்டானே! எச்சிக்கலை நாயிங்க! இப்போ இங்கே வந்தாங்கன்னா, களுத்தைத் திருகிடு வேனே!'' என்று பல்லைக் கடித்தான். ''அந்தச் சாதிகெட்ட பய பளனியாண்டி, எங்கிட்ட ஒரு பேச்சு சொல்லக்கூடாது? எண்ணூத்தி அம்பெத்தெட்டு ரூவா! நான் எங்கடாப்பா போவேன்! ஐயோ! கடவுளே! என்னைக் கவுக்க வளி தேடிட்டாங்களே!'' என்று கதறினான்.

''கவுக்கிற ஒவாயந்தான் இது — ஆனால் மதுரை மாமனும், வீரப்பன் மாமனும் ஒரு பாவமும் அறியாங்கப்பா, இதெல்லாம் மாயாண்டிப்பய செஞ்ச வேலை. எப்படிநாச்சும் என்னை ஊரை வுட்டுத் தொரத்திடணுமின்னு பாக்கறான். நாளன்னிக்கு வள்ளிக்கும் அவன் மகனுக்கும் கண்ணாலம்...''

''நாளன்னிக்கா! அதுக்குள்ளறவா! எல்லாம் ஜாலவித்தையாட் டம் இருக்குதே! வள்ளியை அந்தக் கொரங்குக்கா கட்டிக்குடுக் கறாங்க! காலம் என்னா கெட்டுப்போச்சு!'' என்று கையைப் பிசைந்துகொண்டு, வேறு கவனமாய்ச் சொன்னான்.

வெங்கடாசலத்தை மேலே பேசவிடாமல், வேலன் சொல்லத் தொடங்கினான்: ''வெக்கங்கெட்ட பய, இன்ணென்னுகூட சொல்லிக்கிட்டு திர்ரான் — நான் இந்த ஊருலே இருக்குமட்டும், வள்ளி அவன் மகன்கிட்ட வாளமாட்டாளாம்.''

தன் கஷ்டங்களை மறந்து, வெங்கடாசலமும் சிரித்தான்.

''இப்போ தெரியுதாப்பா, நம்ம மேலே ஏங்கச்சி கட்றாங் கோன்னிட்டு? மீனாச்சிக்குக்கூட இவ்வளவு தூரம் போவ இஷ்ட மில்லையாம். ஆனால், அந்தப் பய கேட்டாலல்ல? மதுரை மாமனும் வீரப்பன் மாமனும் இதிலிருந்து எப்படித் தப்பிக்க வக்கிறதூன்னிட்டு, ராவும் பகலுமா யோசிச்சுகிட்டு இருக்காங்க. அது எனக்கு நல்லாத் தெரியும். அப்படியிருக்கையிலே, நாம அவுங்க மேலே பளி போட்டுத் திட்டினாப் பாவமில்லை?'' என்று வேலன் விசனமாகக் கூறினான்.

இச்சொல் வெங்கடாசலத்தின் மனத்தில் உறைத்தது.

“வேலு, அவுங்களை நான் அறியேனா? துன்பப்பட்டுப்பட்டு, என் மனசெல்லாம் நொந்து போச்சுடாப்பா! என்னை அறியாமே கோவம் வருது; நான் என்ன பண்ணுவேன்? அவுங்களை விட்டா, எனக்கு யாரு இருக்காங்கடாப்பா? என்ன ஏற்பாடு செஞ்சிக்கிட்டு இருக்காங்க?” என்று வெங்கடாசலம், வெகு ஆவலுடன் வினவினான்.

வேலன், உடனே அவன் மனப்போக்கை கண்டுகொண்டான். அவன் மனத்திலிருந்த ஒரு கெட்ட அபிப்பிராயத்தை மாற்றப் போக, ஒரு பொய் நம்பிக்கையையல்லவா உண்டு பண்ணிவிட்டான்! ஆகையால், அதை உடனே திருத்தினான்: “ஐயோ பாவம்! அவுங்களாலே, என்ன முடியுமப்பா? யோசனைதான் சொல்லு வாங்க. கையிலே காசா பணமா? நம்மப்போலத்தானே அவுங்களும்?”

“நெஜந்தான், நெஜந்தான்,” என்று வெங்கடாசலம் ஒப்புக் கொண்டான். “ஆனா, நான் என்ன பண்றது இப்போ? பிராது தீர்ப்பு ஆன மக்யா நாளே, நெலங்களை ஏலத்துக்குக் கொணாந் துடுவானே! எனக்கு ஆரு ஒதவி செய்வாங்க? ஆரும் தெம்பட வில்லையே! ஆகா! அவன் மட்டும் இப்போ இங்கே இருந்தான்னா, நான் எதுக்கும் பயப்படமாட்டேனே! எவ்வளவு யோசனை சொல்லுவான். என்ன துணிச்சலு! அவன் தைரியமே அல்ல அவனைக் கொன்னிடுச்சி; நான் ஆரைச் சொல்றேன் தெரியுதா, வேலு?”

வேலன், தெரிந்துகொண்டவனைப்போலத் தலையை ஆட்டினான்.

“அட கொளந்தே! ஒனக்கு என்னடா தெரியும், நீ காதாலே கேட்டதுதானே? ஒங்கப்பன் ஊரை விட்டுப்போனபோது, நீ தாய் வவுத்துலே இருந்தேடாப்பா. அவன் என்னிக்கு என்னை உட்டுப் பிரிஞ்சானோ, அன்னிக்கே என் கை உளுந்து போச்சு; எனக்கு பாதி உசிரு போச்சு. ‘நீ போவாணாமுடா, என் சொத்தெல்லாம் ஈடுகாட்டி ஒன்னை நிப்பாட்டிக்கிறேன்,’ இன்னு எவ்வளவு சொன்னேன். கேக்கமாட்டேனிட்டான். ‘நானுங் கெட்டு நீயும் கெடவேணாம்,’

இன்னுட்டான். ஆனா, அதென்னமோ மெய்தான். கண்ணை மூடிக்கிட்டுக் கடனை வாங்கிட்டான். ஒங்கம்மா சாவுற போது, நீ அஞ்சு நாள் கொளந்தை. ஒன்னைப் பெத்தவங்களைப் பத்தி ஒனக்கு என்னடாப்பா தெரியும்? நாங்க வளக்கத்தானே வளத்தோம்? அப்பா வேலு, நீ எப்பொனாச்சும் ஒனக்கு அப்பா அம்மா இல்லாமே போயிட்டாங்களேன்னு நெனைச்சயா?''

''அப்பா! வாணாப்பா,'' என்று வேலன், தாரை தாரையாய்க் கண்ணீர் விட்டுக்கொண்டு, தேம்பித்தேம்பி அழுதான்.

''பாத்தியா! பாத்தியா! ஒன்னை என்னமோ சொல்லிட்டேன்,'' என்று வெங்கடாசலம், உதறும் விரல்களோடு வேலன் கையைத் தடவிக்கொடுத்தான்.

''நீங்க ஒண்ணும் சொல்லல்லே, அப்பா. நான் நூறு பொறப்பு எடுத்தாலும், ஒங்க கடனைத் தீத்துக்க முடியாதே!'' என்றான் வேலன், ஒரு நொடியில் தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு.

''என்னமோ, அறியாமே ஒம் மனசை நோவ அடிச்சிட்டேனப்பா. ஏதோ, வாய்க்கு வந்ததெல்லாம் சொல்லிடுறேன் — நான் ஒன்கிட்டே என்ன சொல்ல வந்தேனின்னா, ஒங்கப்பனைப்போல லெச்சத்துலே ஒரு ஆளைக் கண்டுபிடிக்க முடியாதுடா ராசா! தன் சங்கதியே மறந்திடுவான்; ஊரு எளவெல்லாம் இளுத்துப் போட்டுப்பான். அப்படிச் செஞ்சு செஞ்சுதான், அந்தக் கதிக்கு வந்தான். அவனுக்கு எதுவும் பெரிசில்லே; ஒண்ணையும் சட்டை செய்யமாட்டான். இப்போ நெனைச்சுக்கிட்டாக்கூடப் பகீல் இங்குதே! ஒரு கையெளுத்திலே முப்பது ஏக்கரா நஞ்சையை வித்து எறிஞ்சுட்டானே! அப்படிச் செய்ய என்னலே முடியாதப்பா! அவன் ஊரைவிட்டுப் போய் இருவது வருசமாச்சு. பாவி! செத்தானோ பொளச்சானோ ஆண்டவனுக்குத்தான் தெரியும்,'' என்று வெங்கடாசலம் சொன்னான்.

அவன் பேச்சைத் தடுக்க இஷ்டமில்லதவனாய் வேலன் மௌனமாய் உட்கார்ந்திருந்தான். யோசனையில் ஆழ்ந்தவண்ணமே, வெங்கடாசலம் மேலே

சொல்லத் தொடங்கினான்: ‘‘அவனுக்கு அப்பாலே, எத்தினிபேர் போய்ப் பணம் சம்பாதிச் சுட்டு வரல்லே! ஆனா, அவன் கால் துட்டு மீத்திக்கமாட்டான். கங்காணிப் பொளப்பு அவனுக்கு ஒருநாளும் பிடிச்சிருக்காது; அது ஆளைக் கொன்னு திங்கிற வேலையில்லை? ஆனா, இது அக்குருமக்காரர்களுக்குத்தானே காலமாயிருக்குது? கொசப்பட்டி கங்காணியைப் பாரு. அவன் ஊரு ஊரா வளைச்சு வாங்கிக்கிட்டு இருக்கான். அப்பவும் அவன் பணத்துக்குக் கங்குகரையில்லே போலே இருக்குதே... வேலு! எனக்கு ஒரு யோசனை வருது. அவனை ஏன் கொஞ்சம் கடன் கேக்கக்கூடாது? தொளாயிரம் ரூவாய் அவனுக்கு எத்தோடு சேத்தி?’’ என்றான் வெங்கடாசலம். திடீரென்று நம்பிக்கை பிறந்ததும், அவன் முகத்தில் ஓர் உற்சாகம் தோன்றிற்று.

‘‘அவன்தான் அப்பவே மதுரை மாமன்கிட்டே சொல்லிட்டானாமே. வெலைக்கு வேணுமின்னா வாங்கிப்பாணாம்; கடன் கொடுக்கமாட்டானாம்..’’

‘‘ஆமாம், மதுரை ரொம்பக் கண்டான்! நீ போயி காரியத்தை முடிச்சிக்கிட்டு வா. எல்லாம் நீ கேக்கற மாதிரியிலே இருக்குது. நம்ம சங்கதியெல்லாம் அவன் அறிவான். நம்ப மேலே அவனுக்கு மதிப்புக்கூட இருக்குது. எனக்கு என்னமோ அவன் ஒதவி பண்ணுவான்னு தோணுது. அப்பா! நான் ஒன்கூட வாரதுக்கில்லையே,’’ என்று வெங்கடாசலம், பரிதாபப்படும்படி சொன்னான்.

வேலன், மறுநாள் பொழுது விடிந்ததும் இக்காரியத்தைச் செய்து முடிப்பதாகத் தன் ‘அப்பா’வுக்கு வாக்களித்தான்.

வீரமங்கலத்திற்கும் குசப்பட்டிக்கும் ஆறுமைல் தூரம் இருக்கும். போய்த் திரும்புவதற்கும், அங்கே சற்றுத் தாமதித்துப் பேசு வதற்கும், ஐந்தாறுமணி நேரமாகுமாகையால், வேலன் அதிகாலையிலேயே பழையசோற்றைச் சாப்பிட்டுவிட்டு கிளம்பினான்.

ஊர் எல்லையைத் தாண்டினதும், கிராமக் குயவனும் அவன் மனைவியும், பலவிதமான மட்பாண்டங்களைக் கூடைகளில் சுமந்துகொண்டு, எதிரே சிறிது தூரத்தில் வந்துகொண்டிருந்தார்கள். அவனைப் பார்த்ததும், அவர்கள் ஒருவருக்கொருவர் ரகசியம் பேசிக்கொள்வதுபோல வேலனுக்குத் தோன்றிற்று. அது வள்ளியின் கல்யாணத்தைப் பற்றித்தான் இருக்கவேண்டும். தன்மேல் அன்புள்ளவர்களாகையால் அனுதாபப்படுவார்களே யொழிய, அவதூறு சொல்லமாட்டார்களேன்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆயினும் தன் மனதுக்கு யாதொரு கஷ்டமுமில்லை யென்று, அந்நல்லவர்களுக்கு எடுத்துரைக்க வெண்டுமென்று அவன் ஆசைப்பட்டான். ஆகையால், அவர்களைப் பார்த்துப் புன்னகையுடன், கண்களைச் சிமிட்டியபடியே, ‘‘மல்லன் கண்ணாலத்துக் காங்காட்டியும்?’’ என்றான்.

‘‘ஆமாம் அப்பா, நம்ம கண்ணாலமெல்லாம், நாம பொறக்க றப்பவே சாமி முடிச்சுப்போட்டுடுறாரு. அதுக்காவது நாம் கவலைப்படக்கூடாது,’’ என்று குயவன் ஆறுதலாகச் சொன்னான்.

‘‘அட பயித்திக்கார! நான் அளுதுகிட்டு இருக்காறாப்போலே அல்ல நீ சொல்றே? என்னைப் பாத்தா அப்படித் தோணுதா? எனக்கென்ன வந்திச்சு? கண்ணாலத்துக்குப் போவறதுக்கில்லை யேன்னிட்டு நான் வருத்தப்பட்டுக்கிட்டு இருக்கேன்; நீ என்னமோ பேசிறயே. அது சரி, பொண்ணும் மாப்பிள்ளையும் நல்லா அமஞ்சிருக்காங்க இல்லே?’’ என்று சொல்லி, அவன் பகபகவென்று சிரித்தான். ‘‘போனாப் போவுது. எப்போ தாலி கட்றது?’’ என்று அவன் மறுபடியும் கேட்டான்.

‘‘நாளைக் காலமே இருட்டோடே நாலு மணிக்கு யசமான்,’’ என்று குயவன், வேலனுடைய உள்ளக்குறிப்பை அறிய முடியாமல் சொன்னான்.

‘‘நல்லது, பொண்ணும் மாப்பிள்ளையும் சொகமா இருக்கட்டும். ஒங்களுக்கும் நல்ல சாப்பாடும் பலவாரமும் கெடைக்கட்டும்,’’ என்று சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டு, வேலன் குசப்பட்டிக்குச் சென்றான்.

வழி முழுவதும், இன்னும் இருபத்திநான்கு மணிகளுக்குள் சம்பவிக்கப்போகும் விஷயங்களைப் பற்றியே அவன் யோசித்துக் கொண்டு போனான். வள்ளி பித்துப் பிடித்தவள்போல் இருக்கும் போதல்லவா சங்கதி தெரியப் போகிறது? அப்பொழுது ஊரெல் லாம் இதுதான் ஒரே பேச்சாயிருக்கும். கல்யாணக்கோலம் எவ்வாறு முடியுமோ! விருந்தாளிகளும் உறவின்முறையார்களும் என்ன நினைப்பார்களோ! — இவ்வாறு, திருப்பித் திருப்பி ஒரே விஷயத்தில் அவன் மனம் ஈடுபட்டிருந்ததால், அவன் குசப்பட்டிக்கு வந்ததும், இரண்டு மூன்று நிமிஷங்கள் வரையில், நாம் எதற்காக இவ்விடம் வந்தோம் என்பதைக்கூட மறந்து போய் விட்டான்.

கங்காணி மிகவும் நல்லவனாகக் காணப்பட்டான். அவனிடம் ஆடம்பரமே இல்லை. அவனும் அவ்வளவு பணக்காரனாவென்று வேலனுக்குச் சந்தேகம் வந்தது. வேலன் சொன்னதையெல்லாம் வெகு பொறுமையுடன் அவன் கேட்டான். பிறகு, வேலனுக்கு மனம் நோவாதபடி, ஆனால் அழுத்தம் திருத்தமாக, அவன் சொல்லலானான்: “நான் நிலங்களின் மேல் கடன் கொடுப்பதேயில்லை. வேண்டுமானால் ஒரே மட்டாய் விலைக்கு வாங்குவேன். வேறு எவ்விதமான ஈட்டின் மேலும் நான் கடன் கொடுப்பதில்லை. கடன் என்கிற பேச்சே என்னிடம் கிடையாது. நான் வட்டி வியாபாரம் செய்யவில்லை. அதனாலே நீ வித்தியாசமாய் எண்ணிக்கொள்ளாதே, தம்பி. ஆனால், உனக்காக ஒரு காரியம் செய்கிறேன். எல்லாரும் உங்களுடைய நிலங்களைப்பற்றி மிகவும் சொல்லுகிறார்கள். அதற்காக, இன்னும் கொஞ்சம் விலை அதிகமாக வேணுமானாலும் நான் கொடுக்கிறேன். என்னால் அவ்வளவுதான் முடியும். அதுவும், ஒரு பெரிய குடும்பம் பாழாய் விட்டதே யென்றுதான். உங்களூர் ஆள் மதுரை, இதைப் பற்றி முன்னாலேயே என்னிடம் பேசியிருக்கிறான். அவன் சொன்னது இதுதான்: நான் உங்களுடைய கடனையெல்லாம் கட்டிவிட வேண்டும். அப்புறம், யாதொரு வில்லங்கமும் இல்லாமல் இரண்டாந்தரமான நஞ்சையிலே ஒரு காணியை உங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும். ஊருக்குக் கொஞ்சம் தொலைவிலே, அதுமாதிரி ஒரு நிலம் இருக்கிறதாமே — அதற்குக்கூட எதோ ஒரு பெயர் சொன்னானே...”

“கொசவன் பட்டறையா?” என்றான் வேலன்.

“ஆமாம், அதுதான் அதுதான். அது, ஐந்து காணியுள்ள ஒரே சதுரம். ஆனால், ஒரு போகந்தான் விளையுமென்று சொன்னான் — நிஜந்தானா?”

“நெஜந்தான். ஆனால், மொதத்தரம் நஞ்சை போகத்துக்கு முப்பது கலங்கண்டா, அது நாப்பத்தஞ்சு காணுமே!” என்றான் வேலன்.

“ஆனால், முதல்தரம் நஞ்சையிலே நீங்கள் மூன்று போகம் எடுக்கிறதில்லையா?” என்று கங்காணி கேட்டான்.

“மெய்தான். ஆனால், அதுக்காவ இதுக்கு மூணுலே ஒரு பங்கு வெலை போடலாமா?” என்று வேலன் வாதித்தான்.

“நீ பேசுகிறது என்னமோ என்பக்கந்தான்,” என்று கங்காணி நகைத்துக்கொண்டு சொன்னான்: “மதுரை, ‘கொசவன் பட் டறை’யிலே ஒரு காணிகொடுத்தால், உங்கள் சின்னக் குடும்பத் திற்குச் சாப்பாட்டுக் கஷ்டம் இருக்காதென்று சொன்னான். இப்போது, நான் அதை இரண்டு காணியாக்கி விடுகிறேன். இவ்வளவுதான் என்னால் முடியும். இதுக்குமேலே உங்களுக்கு யாரும் கொடுக்கமாட்டான்.”

வேலனுக்குச் சந்தோஷம் ஒருபுறம், ஆச்சரியம் ஒருபுறம்.

“இதைப்போல், யாரு சொல்லப்போறாங்க!” என்றான். இதற்கு மேல் அவனுக்குப் பேசத் தெரியவில்லை. ஆனால், அவனுடைய உண்மையான உணர்ச்சியைக் கங்காணி தெரிந்து கொண்டான்.

“நான் இதை ஒரு வியாபாரமாக எண்ணவில்லை, தம்பி. உங்களுடைய குடும்ப சமாசாரமெல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியும். உங்கப்பாவுக்கு மனம் எவ்வளவு கஷ்டப்படுமென்பதும் எனக்குத் தெரியும். ஆகையினாலே, நான் மோசம் பண்ணிக் கட்டிக்கொண்டதாக, அவர் எப்பொழுதும் நினைக்கக்கூடாது.

இதையெல்லாம் யோசித்துத்தான், நான் அந்தத் தீர்மானத்துக்கு வந்தேன். சரி, நான் அவசர வேலையாய் வெளியே போகவேணும். நீ நிதானமாய் யோசித்துக்கொண்டு மறுபடியும் வா. பொழுதாய்விட்டது; சாப்பிட்டுவிட்டு போ.''

``அதுக்கென்னாங்க... ஆ... ஆ.. இன்னொரு பேச்சு, ஒங்ககிட்டே சொல்லணும்,'' என்று வேலன் தயங்கினான்.

``என்ன அது? சும்மா சொல்லு.''

``நீங்க பண்ணர ஒவகாரத்தை நான் எப்பவும் மறக்கமாட் டேனுங்க. ஆனா, எங்கப்பாரு ஒரு பயித்தியமுங்க. ஒண்ணையும் விக்கக்கூடாது விக்கக்கூடாதுன்னூ அடிச்சுக்கிறாரு. அவரை வளிக்குக் கொண்டுவரத்துக்குக் கொஞ்ச நாளாவுங்க. அதுக்குள்ளே — எங்களுக்கு ரொம்பப் பணமொடையாய் இருக்குது. கொஞ்சம் கடன் குடுத்தீங்கன்னா...''

``உங்கள் அப்பாவுக்கு விற்கிறது எப்படி இஷ்டமில்லையோ, அப்படியே கடன் கொடுக்கிறதற்கும் எனக்கும் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. ஆகையினாலே, கடன் பேச்சை மட்டும் எப்போதும் எடுக்காதே. உங்க அப்பாவுக்குச் சொல்லிப்பார். ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாய்ச் சொல்லிப் புத்தியைத் திருப்பு. சரி, எனக்கு அதிக நேரமாச்சு. நான் போகணும். இதோ, ரெங்கா, இந்த ஆளை அழைத்துக் கொண்டுபோய், தவசிப் பிள்ளையைச் சாப்பாடு போடச்சொல்லு,'' என்று ஒரு வேலையாளிடம் சொல்லிவிட்டுக் கங்காணிச் சரேலென்று புறப்பட்டுவிட்டான்.

வேலனுக்கு வேண்டாம் என்று சொல்லக்கூட அவகாசம் இல்லாமல் போய்விட்டது. அதுவும் தவிர, வேலனுக்குக் கங்காணி மேல் மிகவும் நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டுவிட்டபடியால், அவனுக்கு அவ்வீட்டையும் வீட்டிலுள்ளோர்களையும் பார்க்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அதனால், அவன் வேலைக்காரனைப் பின்பற்றிச் சாப்பாட்டு அறைக்குச் சென்றான். அங்கே தவசிப்பிள்ளை, அவனுக்கு இனிய விருந்தளித்தான். அவ்விதமான சாப்பாட்டை வேலன் தன் ஜன்மத்தில் தின்றதும் இல்லை,

கண்டதும் இல்லை. தன் தகப்பன், கங்காணித் தொழில் செய்கிறவர்கள் அனைவர் மீதும் கெட்ட அபிப்பிராயம் வைத்திருப்பது தப்பென்று அவனுக்குப்பட்டது. அவர்களுக்குச் சம்பவித்திருக்கும் கஷ்டத்தைத் தீர்த்து, மறுபடியும் அவர்களைத் தலை எடுக்கச் செய்ய உதவி செய்வோர், இக்கங்காணியைத் தவிர வேறு யாரும் இல்லையென்று அவன் நன்றாகத் தெரிந்துகொண்டான்.

திரும்பி வரும்போது, வழியெல்லாம் தன் 'அப்பா'வின் புத்தியை எவ்வாறு மாற்றுவதுதென்றே வேலன் யோசித்துக் கொண்டு வந்தான். ஊர் நெருங்க நெருங்க, மல்லனுடைய கல்யாணத்திற்கு மும்முரமாக நடக்கும் ஏற்பாடுகள் காணப்பட்டன. குடம் குடங்களாகப் பால், 'பண்ணை'வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்தது. புஷ்பங்களும் குடலை குடலைகளாகச் சாய்ந்து கொண்டிருந்தன. சற்றுத் தூரத்திற்கப்பால், இரண்டு இரட்டை மாட்டு வண்டிகளில், கூடு இடிக்கத் தாரோடு வாழை மரங்கள் கொண்டு போகப்பட்டன. இவற்றையெல்லாம் பார்த்தால், கல்யாணம் வெகு விமரிசையாகவே நடக்கும்போலத் தோன்றிற்று. வள்ளி ஏற்பாடு செய்துகொண்டபடி நடப்பாளோவென்ற சந்தேகமும் உதித்தது. அவள் தவறிவிட்டால்? மேலே அவனுக்கு யோசனை ஓடவில்லை.

நல்லகாலமாக, அவன் மனம் படும் கஷ்டத்திற்கு மாற்றாக, ஒரு சச்சரவு ஏற்பட்டது. சமீபத்தில் யாரோ உரக்கக் கைகொட்டிச் சிரித்து விளையாடும் சத்தம் கேட்டது. வேலன் அப்பக்கம் திரும்பிப் பார்த்தான். உடனே, அவன் அருகில் இருந்த வடிகாலைத் தாண்டி ஒரு வாழைத்தோட்டத்திற்குள் புகுந்து ஓடினான். சற்றுத் தூரம் போய்ப் பெருமூச்சு விட்டுக் கொண்டு திரும்பிப் பார்த்தான். அவனுக்கு யாரும் தென்படவில்லை. தானும் யாருக்கும் தென் படமாட்டானென்ற நிச்சயமும் ஏற்பட்டது. மல்லனும் அவன் சிநேகிதர்களும் அங்கே என்ன செய்துகொண்டிருந்தார்கள்? அதுவும் அந்நேரத்திலே! அவன் தன் வாழ்க்கைளில் எப்பொழுதும் இவ்வளவு கூச்சப்பட்டதில்லை. நல்ல காலம், அவர்கள் அவனைப் பார்க்கவில்லை. அதைப்பற்றிச் சந்தேகமேயில்லை. ஆனால், மறுபடியும் அவன் அப்படி எக்கச்சக்கமாக

அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. ஆகையினாலே, வாய்க்கால் வயல்களைத் தாண்டி, ஊரையெல்லாம் சுற்றிக்கொண்டு அவன் வீடு வந்து சேர்ந்தான்.

பிறகு சாவதானமாக, குசப்பட்டியில் நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் அவன் தன் ‘அப்பா’விடம் சொன்னான். ஆனால், கங்காணி மற்றொரு காணியையும் இனாமாகக் கொடுப்பதாகச் சொன்ன சங்கதியைமட்டும் நிறுத்திக்கொண்டான். இவ்விஷயத்தை ஆட்டக் கடைசியில் அடிப்பதற்கு ஒரு சீட்டுத் துருப்பைப்போல் அவன் வைத்திருந்தான்.

“வேலு, இது ஒரு நாளுலே ஆவுற வேலை இல்லைப்பா, ஒரு தரத்துக்கு மூணு தரமாய்ப் பாக்கணும். அப்போதான் அவர் மனசு எளகும். நான் சாமிக்கி வேண்டிக் கிட்டதெல்லாம் வீணாய்ப் போவாது,” என்று வெங்கடாசம், வெகு நம்பிக்கையுடன் சொன்னான்.

“அவருதான் கடன் குடுக்க முடியாதுன்னிட்டு கண்டிப்பாச் சொல்லிட்டாரே, அப்பா. வேணுமின்னா, வெலைக்கு வாங்கு வாராம். கடன் இங்கிற பேச்சே எடுக்கக்கூடாதாம். இதைத் திருப்பித் திருப்பி எத்தினிதரம் சொன்னாரு தெரியுமா? எனக்கே மனசு கஷ்டமாய் போச்சு, அப்பா”.

“பொணம் தின்னிப் பயக! எல்லாரும் நம்ப சொத்தைக் கட்டிக்கப் பாக்கறாங்களே ஒளிய, நம்பளுக்கு ஒதவி செய்யறவன் எவனும் தெம்படமாட்டான்.”

“ஆனா, அந்தக் கங்காணி அவ்வளவு கெட்டவன் இல்லை அப்பா. அவன் பேச்சிலிருந்து, நம்ப நன்மையைத் தேடறவன் தான்னு தெரியுது.”

“அப்பா, வேலு! இந்தமாதிரி கூர்கெட்டவனாட்டம் பேசுறயே. அவன் நம்ப நெலங்களையெல்லாம் அடியோடு வாயிலே போட்டுக்கப் பாக்கறான் — அவன் நம்ப நன்மையைத் தேடுறானிங்கறயே; உன் புத்திக்குத்தான் என்ன சொல்லுவேன்!”

“கொஞ்சம் பொறு, அப்பா. மீனாச்சியும் மாயாண்டியும் மட் டும் என்ன பண்ணறாங்க? நம்ப சொத்தை யெல்லாம் பிடுங்கிக் கிட்டு, நம்பனைத் தெருவுலே வெரட்டி அடிக்கப் பாக்கறாங்க. இன்னும் ஒரு மாசம் போனா, இந்த ஊடுகூட நமக்கு நிக்கிதோ இல்லையோ. அவங்களைக் காட்டிலும் கங்காணி எவ்வளவு நல்லவரு! நம்ப நெலங்களை யெல்லாம் எடுத்துக்க வேண்டியது; நம்ப கடனை யெல்லாம் கட்டிக்க வேண்டியது. அப்புறம் ஒரு வில்லங்கம்கூட இல்லாதே நமக்குக் ‘கொசவன் பட்டறை’யிலே ஒரு ஏகரா நஞ்சையைக் கொடுத்திடறதூன்னிட்டு, அவரு மதுரை மாமன்கிட்டே சொன்னாராம். இப்போ அவரு எங்கிட்டே சாடையாச் சொன்னது என்னாண்ணா, சாடை இன்னா, ஓடச்சே சொல்லிட்டாரு; நமக்காவ, ரெண்டு ஏக்கரா இனாமாகக் கொடுத்திடறாராம். அவரு அப்படிச் சொன்னது எனக்கு ரொம்ப ஸந்தோசமாப் போச்சு. இப்படி யாரு செய்யப் போறாங்க? அவரு பேச்சைக் கேட்டா, நமக்குச் சாப்பாட்டுக்கு ஒரு திண்டாட்டமும் இருக்காது. ஒரு பயலுக்கும் தலையைக் குனியவேண்டியதில்லை. இல்லாட்டி என்ன என்ன நடக்கப் போவுதோ, கடவுளுக்குத்தான் தெரியும்.”

திடீரென்று வெங்கடாசலத்தின் தோற்றத்தில், கோரமான குறிகள் ஏற்பட்டன. பிறகு, “அதுக்காவ?” என்று அவன் வினவினான். வேலன் வெகு பயபக்தியுடன், வெங்கடாசலத்தின் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு கெஞ்சுவதுபோல், “கஷ்டம் வந்தபோது நாம் பொறுத்துக்கத்தானே வேணும்? மானத்தையும் எளந்து சாப்பாட்டுக்கும் தவிக்கிறதைக் காட்டிலும், ஒருவாக்குலே நெலங்களை வித்திட்டு, மிஞ்சினதை வச்சிக்கிட்டுக் காலத்தைத் தள்ளலாம். அப்பா,” என்றான்.

வெங்கடாசலம் அளவிலா வெறுப்புடன் வேலனைத் தள்ளி, தன் கைகளை விடுவித்துக் கொண்டான். “அட துரோகக்காரப் பயலே! நீயும் வீரப்பனோடேயும் மதுரையோடேயும் சேந்துக் கிட்டாயா? என்ன துணிவுடா உனக்கு! என் நெலத்தையா விக்கச் சொல்றே? நீ யார்ராவன்? அந்தப் பேச்சை யெடுக்க ஒனக்கென்ன அதிகாரமடா? ஹ! ஹ! என் புத்தியை செருப்பாலே அடிக்கணும். ஆயிரம் செஞ்சாலும் நீ வேத்தி மனிசன்தானே! என் வவுத்துலே

பொறந்தவனா? நான் எங்க நெலத்து மேலே எவ்வளவு உயிரு வச்சிருக்கேன்; நீ என்னத்தைக் கண்டே? சாப்பாட்டுக்கா ஏற்பாடு செஞ்சிட்டு வந்தே? அடே, நாய்கூட வவுரு பொளைக்குதுடா! இதோ பாரு, எங்களுக்கு எங்க நெலங்க எங்க உயிருக்கு மேலே, உ.... ஊம், அறிஞ்சுக்கோ. உன்னைச் சொல்லி என்ன லாபம்! உன்னைப்போல ஒரு மூணாம் மனிசன் கிட்டே இந்த வேலையைக் குடுத்தேனே, என் புத்தியைச் சொல்லு.''

''அப்பா! அப்பா! அறியாதே சொல்லிட்டேனப்பா!'' என்று வேலன் நடுங்கிக் கதறினான்: ''நீங்க சொகமாக இருக்கணுமின்னு தானப்பா, அப்படிச் சொன்னேன். எனக்காகவா? இல்லைப்பா, மெய்யாலும் அப்பா, மெய்யாலும்.''

''போதும், போதும். நீ எனக்காகக் கவலைப்படத் தேவையில்லை — ஏன்? உன்னை வளத்தேனிட்டா? என்னைப்போல மடையன் எங்கேநாச்சும் இருப்பானா? நீ எங்களவன் ஆயிடுவே இன்னிட்டு நெனச்சேனே! வெதையொண்ணு போட்டா, சொரை யொண்ணு முளைக்குமா? ஆனால், உலகத்துலே நன்னியின்னு ஒண்ணு இருக்குதே. அதுநாச்சும் இருக்காதா....''

''அப்பா, வாணாம்! நான் அவ்வளவு பாவியா! இனிமேலே என்னாலே பேச்சுப் பொறுக்க முடியாது. இதோ, இந்த அருவாளாலே என் களுத்தை வெட்டிடு; அப்பாலே உன் மனம் போல பேசிக்கோ,'' என்று அரிவாளை வெங்கடாசலத்தின் கையில் வைத்துவிட்டு, ''ஐயோ கடவுளே! நானா நன்னி கெட் டவன்! நானா, நானா?'' என்று அவன் தேகம் துடிக்க, தாரை தாரையாகக் கண்ணீர்விட்டு அழுதான். வெங்கடாசலம் திக்குத் திசையற்றவன்போல் விழித்தான். இரண்டொரு நிமிஷங்களுக்கு அவனுக்குப் புத்திஸ்வாதீனம் அற்றுப் போய்விட்டது. பிறகு, ''என்ன சொல்றே? என்னடா சொல்றே? போதுமடா உன் பேச்சு. போ அப்பாலே; நிக்காதே இங்கே,'' என்று அவன் இரைந்தான்.

வேலன் அரிவாளை எடுத்துக்கொண்டு, தட்டுத் தடுமாறியபடி வெளியே சென்றான். அவன் தேகமும் மனமும் பட்ட கஷ்டம், இவ்வளவென்று

சொல்லிமுடியாது. மெதுவாக நகர்ந்து, பாழடைந்த கிடந்த தானிய அறைக்குள் அவன் புகுந்தான். பிறகு, வெட்டப்பட்ட மரம்போல் அவன் சாய்ந்தான்.

## 15. விடிந்தால் கல்யாணம்

மகாசமுத்திரத்தில் கப்பல் உடைபட்டுத் திக்குத் திசையற்றுத் தவிப்பவன்போல், வேலன் தத்தளித்தான். நட்டுவாய்க்காலி கொட்டினால் படும் துன்பத்தை அவன் அறிவான். அப்பொழுது, நூறு நட்டுவாய்க்காலிகள் ஒரேகாலத்தில் தன்னைக் கொட்டுவது போல் அவனுக்குப் புலப்பட்டது. ஒரு சமயம், தான் இறக்கைகள் பூண்டு ஆகாயத்தில் பறப்பது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட் டது. மறுநிமிஷத்தில், படுபாதாளத்தில் தள்ளப்பட்டு மூச்சுக்கூட விட முடியாமல், தான் கடகடவென்று உருண்டு போவதுபோலத் தோன்றிற்று. யாராகிலும் அவனுக்கு என்ன கஷ்டமென்று அவனைக் கேட்டிருந்தால், அவனால் இன்னதென்றுகூடச் சொல்ல முடியாது. இருகைகளாலும் தன் தலையை இறுகப்பிடித்துக் கொண்டு, தன் மனக்குழப்பத்திலிருந்து தப்ப அவன் முயன்றான். ஆனால், நினைக்க நினைக்கக் குழப்பம் அதிகரித்ததே யொழியக் குறையவில்லை. பிறகு, படிப்படியாக அவனுக்கும் புத்தி ஸ்திரம் ஏற்பட்டது; தன் துக்கத்திற்குக் காரணங்கள் என்ன என்பதையும் அவன் ஒருவாறு உணர்ந்தான்.

'வவுத்துலே பிறக்கில்லேயாம், வவுத்துலே! இவுங்க வவுத்துலே பிறந்தேன்னு, நான் சொல்லிக்கிட்டேனா? — ஐயோ! அம்மாடி! நீ சாவுறப்போ என்னையும் கொன்னிருக்கக்கூடாதா?' என்று அவன் குமுறி அழுதான்.

'நன்னி நன்னிட்டு அடிச்சுக்குராறே, அது என்ன பேச்சு? நானா நன்னி கெட்டவன்? நான் என் நன்மைக்கா விக்கச் சொன்னேன்? எவ்வளவு அல்பம்! சோறு தண்ணி கொடுத்து வளத்துட்டா மட்டும் எது வேணும்னாலும் சொல்லலாமா? ஐயோ கடவுளே! நான் இப்படியும் பொளைக்கணுமா?' என்று அவன் கதறினான். வெங்கடாசலத்தின் மீது ஒருவிதமான வெறுப்பும் அவனுக்கு உண்டாயிற்று. மனம் இந்நிலைமையில் தவிக்கும்பொழுது, அவன் தான் பிறந்து வளர்ந்த விஷயங்களைப் பற்றி நினைக்கலானான். ஆனால், அந்நினைப்பு அவன் துக்கத்தை அதிகப்படுத்தியதேயொழிய குறைக்கவில்லை.

குழந்தைப் பருவத்திலிருந்து இதுவரையிலும் தனக்குத் தன் 'அப்பா' செய்த நன்மைகளையும், தன்மீது அவன் பாராட்டிய அன்பையும் சற்றும் யோசியாமல், இப்பொழுது அவன் மீது கெட்ட அபிப்பிராயப்படுவது நியாயமாவென்று அவன் சிந்தித்தான்.

ஒருவேளைகூட வேலனை விட்டுவிட்டுப் புசிக்கமாட்டானே! அஸ்தமனமான சிறிது நேரத்திற்கெல்லாம் வேலன் வீட்டிற்கு வராவிடில், ஊரெங்கும் தேடி அவனைக் காணும்வரை 'அப்பா' வுக்குச் சாந்தி இராதே! அப்படிப்பட்டவனுக்கு இப்பொழுது திடீரென்று புத்தி மாறுவானேன்? ஏதாவது பேய் பிசாசு பிடித்து விட்டதா! — மறு வினாடியில், அப்பேய் மாயாண்டி உருவமாகத் தோன்றியது? ஆமாம்! அந்த மாயாண்டிப் பேய்தான்! சந்தேகமில்லை; தன் வீட்டைக் கெடுக்க, தன் 'அப்பா'வின் மூளையைச் சிதற அடித்தது அதுதான்! ஆனால், அதனுடைய எண்ணத்தை நிறைவேற விடலாமா? ஒருகாலும் கூடாது; தன் உடலில் ஆவி உள்ளவரையில் அது நடக்காது! — திடீரென்று அவன் எழுந்தான். கை கால்களை உதறிக் கொண்டான். பிறகு, தன்முன் யாரோ நிற்பதுபோல் கண்ணடித்தான். மறுநிமிஷம், குத்துச்சண்டை செய்பவன்போல் அவன் இருகைகளாலும் குத்தத் தொடங்கினான்; பிறகு, அவன் இடி இடியென்று சிரித்தான். அப்பொழுது அவன் நடத்தையைப் பார்த்தவர்கள், அவன் மதி கெட்டவனென்றே நினைத்துக்கொள்வார்கள். அரிவாளை முத்தமிட்டு அதை இடுப்பில் செருகிக்கொண்டு, ஒரு குதி குதித்து அவன் வீட்டை விட்டு வெளியே சென்றான்.

அவ்வூருக்கு முன் ஒரு சிறு வாய்க்கால் உண்டு. அதற்கு ஒரு சிறிய பாலம் இருந்தது. இப்பாலத்திற்கு அருகில், காற்றினால் கீழே விழுந்த ஒரு தென்னைமரம் காய்ந்துகிடந்தது. வேலன் இதன்மேல் உட்கார்ந்துகொண்டு, தன் அரிவாளைத் தீட்டிக் கொண்டிருந்தான். அரிவாளைச் சரியாகப் பதன்படுத்துவதற்காகத் தன் காலின் கீழ் இருந்த நொய் மணலை அடிக்கடி அவன் தூவிக் கொண்டிருந்தான். அவன் இவ்வேளையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த பொழுது, ஆறுமுகமும் மாசிலாமணியும் ஊருக்கப் புறமிருக்கும் கள்ளுக்கடையை நோக்கி, அவ்வழியே வந்து கொண்டிருந்தார்கள்.

ஆறுமுகத்திற்குச் சுமார் நாற்பத்தைந்து பிராயம் இருக்கும். அவன் எப்பொழுதும், பலரோடு கூடிக் கலந்து சந்தோஷமாகக் காலத்தைக் கழிப்பவன். வேடிக்கையாகப் பேசிப் பிறரைச் சிரிக்கச் செய்யும் வன்மையுடையவனானதால், சிறுவர்களுக்கு அவனிடம் இஷ்டம் அதிகம். அதுவும் தவிர, அவன் மிகவும் அன்புடையவன். சுயநலமற்று, தன்னால் இயன்றமட்டும் பிறருக்கு உதவி செய்வதையே அவன் கருத்தாகக் கொண்டவன். அவனுக்கு ஒரு கெட்ட வழக்கம் மட்டுமுண்டு. குடிப்பதில் அவனுக்கு மிஞ்சினவன் அவ்வூரில் யாரும் இல்லை.

ஆறுமுகம் வருவதைப் பார்த்த வேலன், அவனைக் கூப்பிட்டு, ‘‘ஏ மாமா, என்னாத்துக்கு அருவாளைத் தீட்டுறேன், தெரியுமா?’’ என்று கேட்டான்.

‘‘ஓகோ! யாரூட்டுத் தென்னை மரத்துலேயோ பெருத்த குலையாய்த் திருடப் போறாயாங்காட்டியும்,’’ என்று ஆறுமுகம் சிரித்தான்.

‘‘இல்லே இல்லே, யோசித்துச் சொல்லேன்,’’ என்று வேலன் கண்ணடித்தான்.

‘‘இல்லாட்டி, பந்தயத்துக்கு கரும்பு வெட்றயாங்காட்டியும்.’’

‘‘போ, மாமா அதெல்லாம் ஒண்ணுமில்லே. இந்த அருவா என்ன கேக்குது தெரியுமா? அந்த மாயாண்டிப் பய பொடனி ரத்தத்தை ருசி பாக்கணுமிங்குது! இப்ப தெரிஞ்சிச்சா,’’ என்று அவன் தலையைப் பலமாய் ஆட்டினான்.

ஆறுமுகத்திற்குத் தூக்கிவாரிப்போட்டது. ‘‘பயலுக்குப் பயித்தியம் பிடிச்சுப் போச்சுபோல் இருக்குதே!’’ என்று மாசிலாமணியிடம் ரகசியமாகச் சொன்னான்.

‘‘பின்னே பயித்தியம் பிடிக்காது? இவ்வளவு நாளாகக் காத்திருந்திட்டு, வள்ளியை மல்லன் அடிச்சுட்டுப் போறதுன்னா, அவனுக்குப் பொறுக்குமா?’’ என்று மாசிலாமணியும் ரகசியமாகச் சொன்னான்.

‘‘ஆமா! அதுவா சங்கதி?’’ என்று ஆறுமுகம், அபாயமான நிலைமையை உடனே கண்டு கொண்டான். எப்படியாவது வேலனுடைய புத்தியைக் கலைத்துவிட வேண்டுமென்று, ஆறுமுகம் தீர்மானம் செய்துகொண்டான். ‘‘தம்பி வேலு, கண்ணாலம் பண்ணிக்கிட்டவங்க, என்ன சொகத்தைக் கண்டுட்டாங்கன்னு நெனைக்கிறே? ஒரு பொண்ணு போனா, பத்து வருது. அட, ஒரு மனிசனுக்குப் பொண்ணாலேதானா சுகம்? என் பின்னோடே வா நீ. உனக்கு ஒரு ஜோக்குக் காட்டுறேன், பாரு,’’ என்று தமாஷாக ஆறுமுகம், அவன் தோளில் கையைப் போட்டு இழுத்தான்.

‘‘ஹா, ஹா, ஹா! நீ சொல்றது எனக்குத் தெரியாதூன்னிட்டு எண்ணிக்கிட்டாயா, மாமா?’’ என்று வேலன் சிரித்தான்.

‘‘இத்தினி நாளாய் இல்லாதே, இப்போ ஏன் நான் குடிக்கணும்?’’

‘‘ஏன் குடிக்கக்கூடாது, சொல்லேன்? குடிக்காத பயல்களுக்கு அந்தச் சொகம் என்ன தெரியும்? அட, பயித்திக்காரா! குடிச்சா, சொர்க்கத்தை எட்டிப் பாக்கலாம்டா,’’ என்று ஆறுமுகம் பகபகவென்று சிரித்தான்.

எப்படியாவது வேலனைக் கள்ளுக்கடைக்கு அழைத்துச் சென்று, அவனைப் போதையால் மெய்ம்மறக்கும்படி செய்ய வேண்டுமென்று, ஆறுமுகம் தீர்மானித்துக் கொண்டான். ஆறுமுகம் அயோக்கியன் அல்ல. ஆயினும், அச்சமயம் வேலனைக் குடியில் இறக்குவது சரியா தப்பா வென்பதைக் குறித்து, அவன் சற்றும் யோசிக்கவில்லை.

வேலன் ஒரு க்ஷணம் யோசித்தான். பிறகு, சண்டைக்குத் தயாராயிருக்கும் சேவல்போல் அவன் தலையை நிமிர்த்தி, ‘‘சரி, மாமா போகலாம் வா. யாருக்குப் பயப்படணும்? எதாயிருந்தாலும் ஒரு கை பாத்திடறேன்,’’ என்று அவன் அரிவாளை இடுப்பில் செருகிக்கொண்டு, ஆறுமுகத்தைப் பின்தொடர்ந்தான்.

ஒரு பெரிய தென்னங் கீத்துக் கொட்டகையில் கள்ளுக்கடை இருந்தது. சிலர் குடித்துவிட்டு, மீசையைத் தடவிக்கொண்டு வெளியே வந்துகொண்டிருந்தனர். மற்றும் சிலர், அருகில் இருந்த வேப்பமரத்தின்கீழ் ஏதோ வாக்குவாதம் செய்து கொண்டிருந்தனர். ஒருவன் ஆனந்தமாகத் தலையை அசைத்துப் பாடிக் கொண்டிருந்தான். அவனுக்கு உதவியாக ஒருவன் தாளம் போட்டான். மொச்சைச் சுண்டலை ஒவ்வொன்றாகத் தின்று கொண்டு பலர் இவர்களைச் சுற்றி நின்றனர். இதையெல்லாம் பார்த்ததும், வேலன் கள்ளுக்கடையில் நுழையச் சற்று தயங்கினான். ஆனால், ஆறுமுகமும் மாசிலாமணியும் அவனைத் தட்டிக் கொடுத்துத் தரதரவென்று உள்ளே இழுத்துச் சென்றனர்.

ஒருவாய் குடித்ததும், வேலனுக்கு உண்டான வேதனையைச் சொல்லமுடியாது. அவன், முகத்தை ஆயிரத்தெட்டுக் கோணலாக்கிக் கொண்டான். பைத்தியம் பிடித்தவன்போல் காறித் துப்பினான்; மெதுவாகத் தப்பி ஓடவும் முயன்றான். ஆனால், ஆறுமுகம் அவனை விடுகிறவனாயில்லை. வெகு சாமர்த்தியமாக அவன், வேலனைச் சிறுகச்சிறுகப் பருகச் செய்தான். வரவர வேலனுக்குப் புத்திமயக்கம் ஏற்பட்டது. அவன் குழந்தைபோல் பிதற்ற ஆரம்பித்தான். போதை அதிகரிகத்க அதிகரிக்க, அவன் தன் ரகசியங்களை யெல்லாம் அங்கிருந்தவர்களிடம் சொல்ல ஆரம்பித்தான். பிறகு, படிப்படியாகப் பேச்சுத் தடுமாற்றம் ஏற்பட்டது. கடைசியாக மெய்ம்மறந்து அவன் கீழே படுத்தான்.

அங்கிருந்தவர்களில் சிலர், வேலனை அவ்வாறு குடிக்கச் செய்ததற்காக ஆறுமுகத்தைக் கோபித்துக் கொண்டார்கள். அதற்கு ஆறுமுகம், தான் அப்படிச் செய்திராவிட்டால், ஊரில் ஒரு கொலை நடந்திருக்குமென்று அவர்களுக்குச் சமாதானம் சொன்னான்.

வெகுநேரம் ஆய்விட்டது. சித்திரைச் சந்திரன், கண்ணையும் மனத்தையும் கவரும்படி காய்ந்துகொண்டிருந்தது. கள்ளுக் கடைக்கு வந்தவர்களில் அநேகர், வீடுபோய்ச் சேர்ந்தனர். கடைக்காரனும் மீதியிருந்த கள்ளை ஒரு சுரைக்குடுக்கையில் போட்டுக் கொண்டு வீட்டிற்குக் கிளம்பினான்.

கடைசியாகக் கடையில் தங்கியிருந்தவர்கள், ஆறுமுகமும் மாசிலாமணியும் வேலனுமே. வேலனை எவ்வாறு வீட்டிற்குக் கொண்டு போவதென்பதைப் பற்றி, ஆறுமுகமும் மாசிலாமணியும் யோசித்தார்கள். வேலன் அசைவற்றுப் பிணம்போல கிடந்தான். அவனைத் தூக்கிச் சுமந்து போவதைத் தவிர வேறு வழி அவர்களுக்குப் புலப்படவில்லை. ஆனால், தாங்களே தள்ளாடும் நிலைமையில் இருப்பதால், அப்படிச் செய்வதும் அவர்களுக்கு அசாத்தியமாயிருந்தது. அதனால், அவனை அவ்விடத்திலேயே விட்டுவிட்டுப் போவது நலமென்று அவர்கள் தீர்மானத்துக் கொண்டார்கள். ஆயினும், அவன் முகத்தில் குளிர்காற்றுப் பட்டால் போதை சீக்கிரம் தெளியுமென்று எண்ணி, அவர்கள் அவனைக் குடிசையின் வாசற்பக்கம் இழுத்து விட்டனர். வேலனைக் குடிக்கத் தூண்டும் உற்சாகத்தில் ஆறுமுகம், தன் அளவிற்கு மிஞ்சியே உட்கொண்டுவிட்டதால், அவனுக்கு அதிகமான போதை ஏற்பட்டது. குடிசையில் ஒரு மூலையிலிருந்த பானையிலிருந்த குளிர்ந்த தண்ணீரை ஒரு குடுவையில் எடுத்து, முகத்தில் விட்டுக்கொண்டான்; சிறிது குடிக்கவும் குடித்தான். ஆயினும் அவன் வேதனை சற்றும் தணியவில்லை. பிறகு அவன், மாசிலாமணியின் தோளில் கையைப் போட்டுக்கொண்டு மெதுவாக வீட்டை நோக்கிச் சென்றான். வழியெல்லாம் அவன் தான் செய்தது சரியென்றும், வேலன் அப்படி ‘உளுந்து கிடக்காட்டி’ மாயாண்டியைக் கொன்றுவிடுவானென்றும், ‘கொஞ்ச நேரத்துக் கெல்லாம் தானே எளுந்திருச்சிடுறான்’ என்றும் சொல்லிக் கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தான்.

வேலனுக்காகக் காத்துக் காத்து, அலமேலு அலுத்துப் போனாள். சமைத்து வைத்ததெல்லாம் ஆறிப்போய் விட்டது. அன்றைக்கென்று அவள் முருங்கைக்காய்க் ‘கொளம்பு’ செய்திருந்தாள். முருங்கைக்காயென்றால் வேலனுக்கு உயிர். அவ்வளவு நேரமாகியும் அவன் வராததற்குக் காரணம் தெரியவில்லை. அண்டை வீட்டுக்காரர்களெல்லாம் இரவுக்கு வாசக் கதவுகளைத் தாழ்ப்பாள் இட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவளுடைய கணவனுக்கு அவள், விளக்கு வைத்ததுமே சாப்பாடு போட்டுவிடுவது வழக்கம். அவனுக்கு இதற்குள்ளே ஒரு தூக்கம் ஆயிருக்கும். சீக்கிரத்தில் ஊரில் அரவம் அடங்கிற்று. இன்னும் வேலன் வருவதைக் காணவில்லை.

அலமேலுவுக்குப் பற்பல யோசனைகள் உதித்தன. இரவு அடர்ந்துகொண்டே வந்தது. ஆனால், வேலனைப் பற்றி மட்டும் பேச்சுமூச்சைக் காணவில்லை. அலமேலு திகில் அடைந்தாள். தன் புருஷனை எழுப்பலாமென்று யோசித்தாள். என்ன பயன்? தான் அவஸ்தைப்படுவது போதாமல் அவனுடைய மனத்திற்கும் கஷ்டத்தை உண்டாக்குவதைத் தவிர, வேறொன்றும் காணப்படவில்லை.

கடைசியாக அவள், வாசற்கதவை வெளிப்புறம் தாழ்ப்பாள் இட்டுக்கொண்டு, வேலனுடைய தோழர்களில் ஒருவன் வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டி எழுப்பி விசாரித்தாள். அவன் அன்றெல்லாம் வேலனையே பார்க்கவில்லையென்று சொல்லிவிட்டான். பிறகு, அவள் மற்றொருவன் வீட்டிற்குப் போனாள். அவன் தூக்கக் கண்ணைத் துடைத்துக்கொண்டு வெளியே வந்தான். அவனும் அன்றைத் தினமெல்லாம் வேலனைப் பார்க்காவிடினும், வேலன் நாலு மைல் தூரத்திலிருந்த அமராவதிக் கிராமத்திற்குத் தான் போயிருக்கவேண்டுமென்று நிச்சயமாகச் சொன்னான். ஏனெனில், அவ்வூரிலிருந்த நண்பன் ஒருவன், அங்கே நடந்துவரும் பொம்மையாட்டத்தைப் பார்க்க வரும்படி, வேலனை ஒரு வாரமாகக் கட்டாயப்படுத்திக் கொண்டிருந்தான். ஆகையினால், வீணாகக் கவலைப்பட வேண்டாமென்றும், விடிச்சதும் வேலன் திரும்பி வந்துவிடுவானென்றும் சமாதானம் சொல்லி, அவன் அலமேலுவை அனுப்பிவிட்டான். அலமேலுவுக்கும் ஒருவாறு சாந்தி ஏற்பட்டது. ஆயினும், தன் பையன் தன்னிடம் சொல்லாம் எங்கும் போமாட்டானே; ஒருவேளை அவன் சிநேகிதன் அவசரமாக இழுத்துக்கொண்டு போனதால், வீட்டிற்கு வந்து சொல்ல நேரமில்லாமல் போய்விட்டதோ என்னமோ — இருந்தாலும் இருக்கலாம் என்று எண்ணினாள்.

இவ்வாறு ஆறுதல் செய்துகொண்டு வீடு சேர்ந்து, அவள் படுத்துக்கொண்டாள். ஆனால், மனக்குழப்பத்தால் அவளுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை! சங்கடப்பட்டுக்கொண்டு, இப்புறமும் அப்புறமும் புரண்டுகொண்டே இருந்தாள். பாதி இரவு கழிந்து விட்டது. காற்றும் வரவரக் குளிர்ந்து கொண்டே வந்தது. எங்கும் அமைதி குடிகொண்டிருந்தது. எங்கும் நிசப்தமாயிருந்தது. ஆனால் அலமேலுக்குமட்டும் சாந்தி ஏற்படவில்லை.

தோன்றாத எண்ணங்களெல்லாம் தோன்றின. வயற்காட்டில் நடந்து வரும் பொழுது சர்ப்பம் தீண்டி, அவன் இறந்து கிடப்பதுபோலத் திடீரென்று அவளுக்கு ஒரு காட்சி புலப்பட்டது! உடம்பெல்லாம் வியர்த்தது; நெஞ்சு அடைத்தது. மூச்சு விடமுடியாமல் திக்கு முக்காடினாள். இதே சமயத்தில், "ஐயோ!" என்ற சப்தம் அவள் காதைத் துளைத்தது. சப்தம் அருகிலிருந்து வருவதுபோலவே தோன்றிற்று. பிறகு, "கொல்றானே! கொல்றா..." என்ற வார்த்தைகளுங்கூடத் தெளிவாகக் காதில் பட்டன. அப்பால் அக்குரல் தாழ்ந்து ஓய்ந்துவிட்டது — இதெல்லாம் ஒரு நிமிஷங்கூட இராது.

அலமேலு வாரிப் புடைத்துக்கொண்டு எழுந்திருந்தாள். அவள் வாசற்கதவைத் திறந்துகொண்டு தெருவுக்குப் போகுமுன்னமே, அங்கே ஒரே கூக்குரலாயிருந்தது. ஜனங்கள் இங்கும் அங்கும் ஆவேசம் பிடித்தாற்போல் ஓடிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவராவது அவள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்ல வில்லை. மாயாண்டியின் வீட்டிற்கு முன், ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்ததை அவள் பார்த்தாள்; உடனே, கதவைத் தாழ்பாளிட்டுக்கொண்டு அங்கே ஓடினாள். கிழக் குப்பன் முன்னடியிலேயே நின்றுகொண்டிருந்தான்; வெகு ஆத்திரத்துடன் அவனைச் சங்கதி என்னவென்று விசாரித்தாள்.

"ஐயோ, அலமேலு, மாயாண்டி ஊட்டிலே கொலை நடந்து போச்சாமே!" என்று அக்கிழவன், கைகளை விரித்துக்கொண்டு சொன்னான்.

"எ...எ...என்னாது? மா...மா...மாயாண்டியை அல்ல கொன்னுட்டாங்க!" என்றான் திக்குவாய்ச் செல்வன்.

"மாயாண்டியையா கொன்னுட்டாங்க! ஐயோ கடவுளே!" என்று அலமேலு வாயில் அடித்துக்கொண்டாள்.

"காலம் என்ன கெட்டுப் போச்சு! நான் பொறந்தப்போ இருந்து இதுவரையிலும் நம்மூருலே ஒரு கொலையுண்டா?" என்றான் கிழக் குப்பன்.

“மாரிக்கவுண்டன் சங்கதி என்ன?” என்றான் ஒருவன் அசந்தர்ப்பமாய்.

“அடே, அவன் நம்மூருலேயா கொன்னான்?” என்றான் குப்பன், சற்றுக் கோபமாய்.

“அது போவுது, மாமா. மாயாண்டியை யாரு கொன்னாங்க? என்னாத்துக்கு?” என்று அலமேலு, படபடப்போடு கேட்டாள்.

“அது தெரிஞ்சா, நாங்க இப்படித் தேடி அலைவானேன்?” என்று சொல்லிக்கொண்டே கண்ணன், மற்றிருவரோடுகூட அவளைத் தள்ளிக்கொண்டு ஓடினான். அலமேலுவுக்குத் திருப்தி உண்டாகவில்லை. உண்மையாக நடந்த சம்பவங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது. கும்பலைத் தள்ளிக் கொண்டு, அவள் வீட்டிற்குள்ளே நுழைய எத்தனித்தாள். ஆனால் அது அசாத்தியமாயிருந்தது. ஏனெனில், கல்யாணத்திற்காக வந்த விருந்தாளிகளில் அநேகர், யாவரும் வீட்டிற்குள் நுழையாதபடி வழியை மறித்து நின்றனர். பார்த்த முகமெல்லாம் வேற்று முகமாயிருந்தது. ஆகையால், அவள் திரும்பித் தனக்குத் தெரிந்த வர்களாகத் தேடிச் சிறிது சிறிதாகச் சங்கதி அனைத்தையும் கண்டு கொண்டாள். உதயத்தில் நடக்கும் கல்யாணத்திற்காக இரவில் வெகுநேரம் வரையில் மாயாண்டி ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்ததாகவும், அப்பொழுது தனியாகக் கொல்லைப்புறம் போக நேர்ந்தபோது, யாரோ ஒருவன் அவனைத் தாக்கிக் கத்தியால் குத்தி விட்டதாகவும் தெரியவந்தது.

உயிர் உடனே போய்விட்டது. ஆனால், கொலையாளியை மட்டும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் வீட்டிற்குப் பின்புறமிருந்த அறுவடையான வயல்களின் வழியாகத்தான் ஓடியிருக்க வேண்டும். ஆனால், வெயிலில் தரை நன்றாகக் காய்ந்து கிடந்த தால், அடிச்சுவடுகள் புலப்பட இடமில்லை. மாயாண்டியைக் பாராமல் இருந்ததில் அலமேலுவுக்கு ஒரு விதத்தில் சந்தோஷந்தான். அவள் கேட்டதிலிருந்து, அக்கொடூரமான காயங்களைப் பார்த்து அவளால் சகிக்கமுடியுமென்று அவள் நம்பவில்லை. பிறகு, வெகு துக்கத்தோடு வீடு திரும்பினாள். கிராமத்தில், குஞ்சு குழந்தை

பாக்கியில்லாமல் எல்லோரும் எழுந்துவிட்டார்கள். அங்கங்கே கும்பல் கும்பலாக ஜனங்கள், இவ்விஷயத்தைப் பற்றியே பேசிக்கொண்டு நின்றார்கள்.

அலமேலுவின் வீட்டிற்கு இரண்டு வீடு தாண்டி, ஒரு பாழடைந்த மனை இருந்தது. அதன் முன் சிலர் கூடி, வெகு தாபத்தோடு பலத்த குரலில் பேசிக் கொண்டிருந்தனர். அலமேலு கதவைத் திறந்து உள்ளே நுழையும் சமயத்தில், அவள் காதில் சில வார்த்தைகள் விழுந்தன. அவ்வளவுதான்; அவளுக்கு நெஞ்சடைத்துக் கண்ணிருண்டது.

"இது வேலன் செஞ்ச வேலைதான். இதுலே சந்தேகமில்லை. நான்தான் என் காதாலே கேட்டேங்கிறேனே. நான் இப்படி நிக்கிறேன்; அவன் அப்படி இருந்து ஆறுமுகத்துக்கிட்டே சொல்றான்: 'இந்த அருவா என்னா கேக்குது தெரியுமா மாமா — மாயாண்டி பொடனி ரத்தத்தை ருசிபார்க்கணுமிங்குது!' இன்னும் என்ன சந்தேகமப்பா?"

"அதுதாண்டா, இவ்வளவு கலவரத்துலே அவனை ஆளையே காணோம்," என்றான் ஒருவன். "ஒருவேளை ஊட்டிலே அசந்து தூங்கறானோ என்னவோ," என்றான் மற்றொருவன்,

"உனக்குப் பையித்தியமா? நீ வேணுமின்னா அவுங்க ஊட் டுலே போய் பாரு," என்றான் தாதன்.

அலமேலுவுக்கு ஒரே நடுக்கம் எடுத்துவிட்டது. உலகத்தில் இருக்கும் பேய்களெல்லாம் அவளைப் பிடிக்கத் துரத்திவருவது போல் அவளுக்குத் தோன்றிற்று. ஒரு க்ஷணத்தில் ஓடிப் பதுங்கா விட்டால், தப்புவது கஷ்டம்போல் இருந்தது. மறு வினாடியில், உள்ளே புகுந்து அவள் கதவைப் படார் என்று தாழ்ப்பாளிட்டாள். ஹிருதயம் பட படவென்று அடித்துக்கொள்ள, அவள் ஒரு நிமிஷம் கதவண்டையே தயங்கி நின்றாள். யாரும் அவளைத் துரத்தி வருவதாகத் தெரியவில்லை. பயம் சற்றுத் தணிந்தது. ஆனால் மறு நிமிஷமே, தாதன் சொன்ன வார்த்தைகளை நினைத்துத் தலையில் இடிவிழுந்தாற்போல் அவள் கீழே சாய்ந்தாள்.

## 16. சட்டத்தின் திட்டம்

சூரியோதயத்திற்கு ஒருமணி நேரம் இருக்கும். இருட்டு மெதுவாக மறைந்துகொண்டிருந்தது. ஆயினும், அப்பொழுதே விவசாயிகள் ஒவ்வொருவராகத் தங்கள் நிலங்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். சிலர் இதற்குள் தங்களுடைய வேலையையுங் கூடத் துவக்கிவிட்டனர். தாதனுடைய கொடிக்கால் தோட்டம், மற்றவர்களுடைய நிலங்களைக் காட்டிலும் சிறிது எட்டாக்கையில் இருந்தது. பல வாய்க்கால்களையும் வரப்புகளையும் தாண்டித்தான் அவன் அங்கே போகவேண்டும். தாதன் ஓர் ஓடையைத் தாண்டிக் கொண்டிருந்த பொழுது, தனக்கு மேல்புறத்தில் எவனோ ஒருவன் கைகால் அலம்புவதுபோல அவனுக்குக் காணப் பட்டது. இது வெகு சகஜமான சம்பவமாயிருந்தபோதிலும், தாதனுக்குச் சற்று வியப்பு உண்டானதற்குக் காரணமென்ன வென்றால், அம்மனிதன் ஒரு கந்தையை அணிந்திருந்த போதிலும், அதை அலசிக் கொஞ்சம் கொஞ்சமாகக் கிழித்து எறிந்துகொண்டேயிருந்தான். தாதன் அவனை அணுகி உற்றுப் பார்த்தான்; அவன் வேலன்! அவனுடைய துணியெல்லாம் ரத்தக்கறையாயிருந்து. அவன் தாதனைத் தலையெடுத்துப் பேச எத்தனிப்பதுபோல் தோன்றிற்று. ஆனால், நாவிலிருந்து வார்த்தை மட்டும் எழும்பவில்லை. பிறகு வெகு கஷ்டப்பட்டு, ‘‘இந்தக் கறை போகமாட்டேங்குதே!’’ என்று அவன் முணுமுணுத்தான்.

‘‘ரத்தக்கறை அவ்வளவு சுளுவாய்ப் போயிடுமா?’’என்று சொல்லிவிட்டுத் தாதன், தன் வெற்றிலைத் தோட்டத்திற்கு விரைவாகப் போவதுபோல் பாவித்து, தலை மறைந்ததும் கிராமத்திற்கு வேறொரு வழியாக ஓடினான்.

வம்பு, தாதனோடு கூடப் பிறந்தது. தினம், இவன் அப்படி அவன் அப்படி என்று வீண் வம்பு அடிக்காவிட்டால், அவனுக்கு உண்ட உணவு கூட செரிக்காது. தற்சமயம் தான் கண்டதை ஊரில் ஒருவர் தவறாமல் எல்லாரிடமும் சொல்வதைத் தவிர, மேலான காரியம் வேறொன்றும் அவனுக்குப் புலப்படவில்லை.

ஆதலால், முதல்முதலாக அவன் மல்லன் வீட்டிற்கு ஓடினான். அங்கே, மாயாண்டியின் சவத்தைச் சுற்றிப் பெண் பிள்ளைகள் ஒப்பாரி வைத்து அழுதுகொண்டிருந்தார்கள். இழவுக்காக வந்த ஜனங்களும், ஒரு பெருங் கும்பலாய்க் கூடியிருந்தார்கள். அவர்கள் மத்தியில், தாதன் தான் கண்ட காட்சியை வர்ணித்தான். அவன் வார்த்தைகள் ஒவ்வொருவர் மனத்திலும் ஈட்டிபோல் பாய்ந்தன. அந்தப் பாவி வேலனை அந்த விநாடியிலேயே கொன்று விட வேண்டுமென்றார்கள் சிலர். ஆனால், மற்றும் சிலர் அப்படிச் செய்வது மிகவும் ஆபத்தான காரியமென்றும், அவனைத் தண்டிக்கப் போக, தாங்களே தண்டனைக்கு உட்படுவார்களென்றும் எச்சரிக்கை செய்தார்கள். கொலைக்குத் தயாராக இருக்கும் முரடனைப் பிடிப்பது சுலபமான காரியமல்ல வென்றான் ஒருவன். அவன் கையில் கத்தி முதலிய அபாயமான ஆயுதங்கள் இருப்பது நிச்சயம் என்றும், அவன் அகப்பட்டுக் கொள்வதற்கு முன் பலரைக் கொல்வான் என்பதில் சந்தேகமில்லை என்றும் சொன்னான் மற்றொருவன். இவைகளை யெல்லாம் கேட்ட பிறகு, உயிருக்கும் துணிந்து வேலனைப் பிடிக்கவேண்டுமென்ற ஆத்திரம் யாருக்கும் பிறக்கவில்லை.

நிஜமாகவே, பழிக்குப் பழி வாங்கவேண்டுமென்ற ஆத்திரம் மல்லனுக்கு இருந்தது. ஆயினும், ரத்தவெறி பிடித்த வேலன் முன் போவதற்கு அவன் பயப்பட்டான். போதும் போதாததற்கு, ஊரில் ஒருவதந்தி கிளம்பியிருப்பதாக ஒருவன் சொன்னான். அதாவது, வேலன் மாயாண்டியின் குடும்பத்தை அடியோடு ஒழித்து விட்டு, பிறகு தன்னைத் தானே போலீஸாரிடம் ஒப்பித்துக் கொள்வதாகச் சத்தியம் செய்தானாம். இதைக் கேட்டதும், மல்லன் தற்சமயம் வேலனைச் சந்திப்பதைக் காட்டிலும் மூடத்தனம் வேறொன்றும் இல்லை என்று தீர்மானித்தான். முன்னமே பள்ளியிலிருக்கும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அவன் தகவல் அனுப்பியிருந்தான். இப்பொழுது, இன்னும் இரண்டு ஆட்களை அங்கே அனுப்பி, நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் சொல்லச் சொல்லி, போலீஸாரையும் கையோடு கையாய் அழைத்து வரச் சொன்னான். இதற்கு மேலே வேறு எதுவும் மல்லனுக்குச் செய்ய இஷ்டமில்லை. தாதனுக்குப் புளித்துப் போய்விட்டது. வேலனைப் பார்த்து, அப்படி நடுங்குவதற்குக்

காரணமேயில்லை என்று அவன் உறுதியாகச்சொன்னான். ஆனால், அதற்கு மல்லன் அசைய வில்லை.

“அவன் கையிலே அருவா இருக்குதா? இல்லையா?” என்று தாதனைக் கேட்டான்.

“அருவா இருந்தா என்ன? கொன்னுப் புடுவானா? இப்போ, எங்கிட்டே இல்லையா அருவா?” என்றான் தாதன்.

“அவன் சங்கதி உனக்கென்னா தெரியும்,” என்று சொல்லி விட்டு மல்லன், சாவுக்குச் செய்யவேண்டிய காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினான். அதன்மேல் தாதன், முகத்தைச் சிடு சிடுத்து முணுமுணுத்து, அவ்விடத்தை விட்டு அகன்றான். ஆனால், இவ்வளவு சுவாரசியமான விஷயத்தை எளிதில் விட்டு விட அவனுக்கு மனம் வரவில்லை. ஊருக்குள் சென்று, தாதன் வேலனைக் கண்ட செய்தியை அவன் பரப்பினான். வேலனைப் ‘பிடிப்பதற்கும்’ சிலரை அழைத்தான்.

ஆனால், அவனுக்கு வம்புப் பயித்தியம் தவிர வேறொன்றும் தெரியாதாகையால், வேலனிடத்தும் அவன் பெற்றோர்களிடத்தும் கிராமத்தார் வைத்திருந்த அன்பையும் அனுதாபத்தையும் அவன் அறியான். அவன் மற்றொரு முறை வேலனைப் பிடிக்க வேண்டு மென்ற எண்ணத்தை வெளியிட்ட பொழுது, வேலனின் தோழன் ஒருவன், அவன் குடுமியைப் பிடித்து இழுத்து, வாயை மூடும்படி அதட்டினான். வெகு கோபத்தோடு தாதன் அவனை எதிர்த்துச் சென்ற பொழுது, மற்றொருவன் அவன் காலைத் தடுக்கிவிட் டான். கைகளைக் கீழே ஊன்றி இராவிட்டால், தாதன் குப்புற விழுந்திருப்பான். பக்கத்திலிருந்த சிறுவர்களும் வண்டு சிண்டுகளும் கை கொட்டிச் சிரித்தார்கள். அம்மானக்கேட்டால், தாதனுக்குக் கோபம் பொங்கிப் போயிற்று. அவனைத் தள்ளினவன் இன்னானென்று அவனுக்குத் தெரியாததால், எல்லாரையும் தாறு மாறுமாக அவன் வையத்தொடங்கினான். அதன்மேல், அங்கிருந் தவர்கள் அனைவரும் அவனைச் சூழ்ந்துகொண்டு, அடிக்கத்

தயாரானார்கள். வாயைத் திறந்தால், அடிவிழுமென்ற பயம் தாதனுக்கு ஏற்பட்டது.

“மடையா, ஊரான் சங்கதியெல்லாம் நீ ஏண்டா இழுத்துப் போட்டுக்கறே?” என்றான் ஒருவன்.

“அட பொளுப்புக் கெட்ட களுதே. ஒருத்தன் திண்டாடினா, உனக்கு என்னடா அவ்வளவு சந்தோசம்?” என்றான் மற்றொருவன்.

“குடிமியைப் பிடிச்சு இன்னொருக்க இளு,” என்றான் ஒரு சிறுவன். அவன் பேச்சை வீணாக்காமல் கும்பலில் யாரோ அப்படியே செய்தார்கள்.

“காலை வாரி விடு,” என்று ஒரு வாண்டுப் பயல் கூவினான். அவன் இஷ்டத்தையும் நிறைவேற்ற ஒரு வாலிபன் முயன்றான். ஆனால், அங்கிருந்த பெரியோர்கள் அவனைக் கண்டித்துத் தடுத்தார்கள்.

இவ்வாறு தாதன் சீரழிந்து கொண்டிருக்கும்பொழுது, அலமேலு தன் வீட்டில் இன்னது செய்வதென்று தெரியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு விம்மி விம்மி அழுதபடியே இருந்தாள். தாதன் செய்த பிரசாரத்தால், அப்போது நடந்த சம்பவங்களெல்லாம் அவள் காதுக்கு எட்டியிருந்தன. ஆனால், அவள் புருஷனுக்கு மட்டும், தங்களுக்கு நேர்ந்திருக்கும் பேராபத்தைக் குறித்து ஒன்றுமே தெரியாது. எப்படித் தெரியும்? அவனோ ஓர் அறையில் அடைபட்டுக் கிடந்தான். அவனிடம் எப்படிப் போய்ச் சொல்வது? என்னவென்று சொல்லுவது? தைரியம் வரவில்லையே! அவளுடைய கை கால்கள் சில்லிட்டன. இருதயம் அசைவற்று நின்றது. திடீரென்று, கொல்லையிலிருக்கும் கிணற்றில் விழுந்து உயிரைத் துறக்கலாமென்ற எண்ணம் வந்தது. மறுக்ஷணத்திலேயே, பேயோ பிசாசோ, அவள் கூந்தலைப் பிடித்துக் கறகற வென்று சுழற்றுவதுபோலத் தோன்றிற்று. ஆயினும் கடவுளைத் துதித்துத் துதித்து வழக்கமானபடியால், அவள் தன்னை அறியாமலே ஆண்டவனைப் பிரார்த்தித்தாள். தன் அருமை வேலுவை என்ன செய்வார்களோ? தூக்குப் போட்டுவிடுவார்களோ? ஐயோ, தெய்வமே! அதை அவள் எப்படித் சகிப்பாள். அவளால் உயிரை வைத்துக்

கொள்ள முடியாது. அவள் புருஷனும் சாவான். பிறகு அவள் குடும்பமே நிர்மூலமாகிவிடும்! இது யாரிட்ட சாபமோ! சமாசாரத்தைத் தன் கணவனுக்குச் சொல்லலாமென்று, அவனுடைய அறை வரையிலும் அவள் போவாள். பிறகு பயத்தால் தயங்கி, மறுபடியும் வாசற்பக்கம் திரும்புவாள். இவ்வாறு, புத்தி ஸ்திரம் இல்லாமல், கண்ணும் கண்ணீருமாய்ச் சங்கடப்பட்டுக் கொண்டு, அவள் அங்கும் இங்கும் அலைந்தாள். அவளைத் தேறுதல் செய்யவந்த சில சிநேகிதிகளால், அவளுடைய துக்கம் அதிகரித்ததே யொழியக் குறையவில்லை. அவள் இப்படி அனலில் விழுந்த புழுப்போல் தவிக்கையில், மதுரையும் வீரப்பனும் உள்ளே நுழைந்தார்கள். அவர்களைக் கண்டதும் அலமேலுவின் துக்கம் கட்டுக்கடங்காமல் போய்விட்டது. ‘ஹோ’ என்று கதறிக் கதறி அழுதாள். மதுரை, அவளைச் சமாதானப்படுத்த முயன்றான். வீரப்பனோ, துக்கத்தில் மூழ்கி, வாய் திறக்கமாட்டாமல் தலை குனிந்து நின்றான்.

“வாணாம் அம்மாடி! அவன் ஒத்தன் இருக்கான். பயப்படாதே, அவனுக்குக் கண்ணுத் தெரியாது! இதெல்லாம் ஒரு சோதனை. என் பேச்சை நம்பு. வேலுவுக்கு ஒரு தீங்கும் வராது. சங்கதி அவனுக்குத் தெரியுமா?” என்று மதுரை, வெங்கடாசலத்தின் அறையைக் காட்டிக் கேட்டான்.

“தெரியாதண்ணா, நான் எப்படிச் சொல்லுவேன்! அவுக நாலஞ்சு தரம் கூப்பிட்டுக்கூட, எனக்குப் பதில்சொல்ல வாய் வரல்லியே! ஐயோ! கேட்டா இடிஞ்சு போவாரே!” என்று அவள் குமுறிக் குமுறி அழுதாள்.

“வாணாம், வாணாம் அம்மாடி! இதுவும் நம்ம நலுமைக் கித்தானின்னு எண்ணிக்கோ,” என்று சொல்லிக்கொண்டே மதுரை, ஓசை செய்யாமல் வெங்கடாசலத்தின் அறைக்குச் சென்றான். வீரப்பன் மெதுவாக அவனைப் பின்தொடர்ந்தான். அவனுக்குப் பின் அலமேலு நடுங்கிக் கொண்டே போனாள்.

மதுரை, கதவண்டைச் சற்றுத் தாமதித்தான். கதவு பாதி திறந்திருந்தது. அதை அவன் மெதுவாக முழுதும் திறந்தான். வெங்கடாசலம் அப்புறமாகத் திரும்பிப் படுத்திருந்ததால், மதுரை வந்ததை அவன் பார்க்கவில்லை. அவன் ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருப்பதாகக் காணப்பட்டான்.

“நீ எந்த வளி உட்டாலும் சரி, உன் பிரியமுடா அப்பா!” என்று முணுமுணுத்தது மட்டும், அங்கு வந்த மூவர் காதிலும் பட்டது. அந்தத் தொனியிலிருந்து, அவன் ஏதோ பெருங் கஷ்டத்தை எதிர் பார்ப்பதுபோலத் தோன்றிற்று. உண்மையில், இரவு இரண்டு மணியிலிருந்து அவனுக்குத் துக்கமேயில்லை. விஷயம் இன்னதென்று தெரியாவிட்டாலும், ஊரில் ஏதோ ஒரு பெருங் குழப்பம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று மட்டும், அவன் கண்டுகொண்டான். அக்குழப்பத்தால் தனக்குத் தீமை ஏற்படப் போகிறதென்ற ஓர் எண்ணமும், அவனுக்குப் பிறந்தது. இதற்குச் சகாயமாக, கூப்பிடுமுன் ஓடிவரும் தன் மனைவி, அவன் பலமுறை அழைத்தும் தலைகாட்டவில்லை. அவள் வீட்டில் இருந்தாளோ இல்லையோ என்ற சந்தேகங்கூட, அவனுக்கு உண்டாயிற்று. ஒருகால் அவள் வெளியே போயிருந்தால், வேலனாவது பதில் கூறக்கூடாதா? அவனுமா வீட்டில் இல்லை? இருவருமாக ஒரே காலத்தில் எங்கே போயிருப்பாள்? இவ்விஷயங்களைப் பற்றி நினைக்க நினைக்க, வெங்கடாசலத்திற்கு மனக்கலக்கம் அதிகரித்தது.

வெங்கடாசலம், மதுரையின் பக்கம் திரும்புவதாகத் தோன்றவில்லை. ஆகையினால், மதுரை அவனை மெதுவாக அழைத்தான். வெங்கடாசலம் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பிறகு, அவன் ஒவ்வொருவராக ஏற இறங்கப் பார்த்தான். தன் மனைவியின் முகச்சின்னங்களைப் பார்த்ததும், அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

“என்னாது?” என்று பதறிக் கூவினான்.

“மாயாண்டி போயிட்டானப்பா! யாரோ கொன்னுட்டாங்க!” என்றான் மதுரை மெதுவாக.

“என்னா! கொன்னுட்டாங்களா? ஏன்? யாரு கொன்னாங்க? எப்போ?” என்று வெங்கடாசலம் அடுக்கடுக்காய்க் கேள்விகள் கேட்டான்.

“பாதி ராத்திரி இருக்குமாம், பொளக்கடைப் பக்கம் போனானாம். அப்போ, எவனோ வந்து குத்திட்டானாம். இப்போ... இப்போ, சில சாதிகெட்ட

களுதைங்க, வேலன் மேலே பளியைப் போடப் பாக்குதுங்க...''

''என்னாது!'' என்று வெங்கடாசலம் கர்ஜித்தான்.

''வேலு, மாயாண்டியைக் கொல்றதா! எந்தக் கூருகெட்ட பய சொன்னான்? அங்கயே அவன் பல்லை ஒடைக்கக் கூடாது? அட, அவன் கனவுலேகூட ஒருவனுக்குத் தீங்கு நெனைக்கமாட்டானே! அப்பேர்க்கொத்தவன் மேலேயா இந்தப் பளியைப் போடுறாங்க! அடே! எங்க கை எளச்சுப் போனால், எங்கமேலே எது வேணு மின்னாலும் சொல்லலாமா? அவுங்க வாய்க்கு வந்ததைச் சொன்னால், நீங்களும் கேட்டுக்கிட்டு இருந்தீங்களா? எங்களுக்கு அவ்வளவு பரிஞ்சுக்கிட்டுப் பேசக்கூட உங்களுக்கு வாயில்லாமே போயிடுச்சா?'' என்று வெங்கடாசலம், அழாத துக்கத்தோடு சொன்னான்.

அதே சமயத்தில், தெருப்பக்கம் ஒரு பெரிய கூக்குரல் கேட் டது. பலபேர் சேர்ந்து தெருக்கதவைத் தட்டும் சப்தமும் காதில் விழுந்தது. மதுரையும் வீரப்பனும், வெங்கடாசலத்தின் அறையை விட்டு வெளியே ஓடிவந்தார்கள். அலமேலுவும் அவர்கள் பின்னே ஓடிவந்தாள். வந்து பார்த்தால், ஒரு கிழிந்த கோவணத்தைத் தவிர வேறொரு வஸ்திரமுமின்றி, வேலன் முற்றத்தில் நின்று கொண்டிருந்தான். இவர்களைப் பார்த்ததும் வேலன், வீரப்பனுடைய மேல் வேஷ்டியை வாங்கி இடுப்பில் சுற்றிக்கொண்டான்.

''நம்மூரு சனங்க, எவ்வளவு மானங்கெட்ட களுதைங்க, மாமா! இடுப்பிலே துணி ஒண்ணும் இல்லையே, யாரும் காணாதே ஊட்டுக்கு ஓடியாந்துடலாமின்னு நான் பதுங்கிப் பதுங்கி வந்துக்கிட்டு இருக்கேன். என்னைத் தொரத்தறாங்களே. என்னை நரிவேட்டையல்ல ஆடினானுக! செத்தேன் பொளச் சேன்னு ஓடியாந்து கதவைத் தாப்பாப் போடறதுக்குள்ளே, எனக்குத் தாவு தீந்து போச்சு, மாமா,'' என்றான் வேலன்.

மதுரையும் வீரப்பனும் மௌனமாய் நின்றார்கள். அலமேலு, அவனை விட்டு வெகுகாலம் பிரிந்தவள்போல, அவனைக் கட்டிக் கொண்டு அழுதாள். இதற்குள், தெருக்கதவைக் கோடாலி போட்டு உடைப்பதுபோல் ஜனங்கள்

இடித்துக்கொண்டிருந்தார்கள். இரண்டொரு நிமிஷங்களுக்கெல்லாம், கதவு ‘தபார்’ என்று கீழே தள்ளப் பட்டது. கும்பலெல்லாம், ஒரே குரலொடு பெருங் கூச்சலிட்டது.

“இனிஸ்பேட்டர் ஐயாவுக்கு வளி உடுங்க; போலீஸ் ஐயா வுக்கு வளி உடுங்க,” என்று எவனோ ஒருவன் உரக்கக் கத்தினான்.

இவ்விரைச்சலெல்லாம் வெங்கடாசலத்திற்குக் கேட்காமல் போகவில்லை. அவன் மதுரையையும் வீரப்பனையும் கூப்பிட்டான். பிறகு, அலமேலுவையும் பலத்த குரலோடு அழைத்தான். ஆனால், அவனைக் கவனிப்பார் யாரும் இல்லை. அவ்வளவு சந்தடிக்குக் காரணம் என்னவென்று தெரிந்துகொள்ள, அவன் துடித்தான். கட்டிலை விட்டு எப்படியாவது கீழே இறங்க அவன் முயன்றான். ஆனால், சீவனற்றுத் துணிபோல் துவளும் கால்களை வைத்துக்கொண்டு, அவன் என்ன செய்வான்! கடைசியாக, ஆத்திரம் பொறுக்கமாட்டாமல், அவன் வேணுமென்று புரண்டு, கட்டிலில் இருந்து ‘திடும்’ என்று கீழே விழுந்தான். பிறகு, அடிபட்ட வலியையும் சட்டை செய்யாமல், அவன் வெகு துன்பத்தோடு கைகளால் ஊர்ந்து ஊர்ந்து முற்றத்திற்கு வந்தான். அதே சமயத்தில், ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் இரண்டு சேவகர்களோடு உள்ளே நுழைந்து, கும்பலை அதட்டித் தள்ளி நிற்கும்படி கட்டளையிட்டார்.

“ஐயோ, அப்பா! இது என்னாது! மூக்குலே ரத்தமாக் கொட்டுதே! நீ ஏன் இங்கே வந்தே?” என்று சொல்லிக்கொண்டே வேலன், வெங்கடாசலத்தைத் தூக்கி அவன் முகத்தைத் துடைத்தான்.

“எனக்கு ஒண்ணுமில்லை, வேலு, ஒண்ணுமில்லே. போலீஸ் ஐயாவெல்லாம் என்னாத்துக்கு வந்திருக்காங்க?”

“இவன் உன் மகனா?” என்று போலீஸ் அதிகாரி கேட்டார். வெங்கடாசலம், “ஆமாங்க,” என்று தலையை ஆட்டினான்.

“சரி, கஷ்டமோ நிஷ்டுரமோ, என் வேலையை நான் பார்க்க வேண்டுமல்லவா? இப்பொழுது, நான் உன் மகனைக் கைது செய்து அழைத்துக் கொண்டு போகவேண்டும்.”

“என்னாது? — யாரைக் கைது செய்யப் போறீங்க?” என்று வேலன், எதிர்த்துப் பேசினான்.

“உன்னைத்தான்”.

“எதுக்காக?”

“மாயாண்டியைக் கொன்றதற்காக.”

ஒரு நிமிஷம் ஒரே நிசப்தமாயிருந்தது. எல்லாரும் பேச்சு மூச்சுவிடாமல், வேலனையே உற்றுப் பார்த்தார்கள். வெங்கடாசலம், குளிர் ஜூரம் வந்தவன்போல் நடுங்கிக்கொண்டிருந்தான். வேலன், வாய் திறவாமல் சற்று நிதானித்தான். பிறகு, “நான் அவனைக் கொல்லணுமின்னு நெனைச்சேன், நெனைச்சா, கொன்னுட்டதாவுங்களா?” என்று அவன் கேட்டான்.

“எவ்வளவு நாளாய் இப்படிக் கொல்ல வேண்டுமென்று தயார் செய்தாய்?”

“தயாரு கியாரு, நான் ஒண்ணும் பண்ணலீங்க. நேத்துச் சாயங்காலந்தான் அவனைக் கொல்லணுமின்னு யோசிச்சேன்.”

“உனக்கு ஏன் அந்த யோசனை வந்தது?”

“இதெல்லாம் நீங்க ஏன் கேக்கறீங்க?”

“என்ன சொல்லுகிறாய்? உஷார்! கேட்ட கேள்வி ஒவ்வொன் றுக்கும் நீ பதில் சொல்லித் தீர வேண்டும்; தெரிந்ததா?” என்று அவர் மிரட்டினார். வெகு சாந்தமாய்க் காணப்பட்ட அப் போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர், ஒரு நிமிஷத்தில்

வெகு குரூரமுள்ளவர்போல் தோன்றிவிட்டார். வேலனுக்குத் தொண்டையில் ஏதோ சிக்கிக் கொண்டதுபோல் இருந்தது. முதல் நாள் சாயங்காலம் நடந்த விஷயங்கள் அவன் நினைவுக்கு வந்தன. உடனே, கோடாலி போட்டுத் தன் மார்பைப் பிளப்பதுபோல் ஓர் உணர்ச்சி அவனுக்கு உண்டாயிற்று.

“ஐயோ! என் கொடுமையை ஏன் கிளருநீங்க, சாமீ!” என்று வேலன் கெஞ்சினான். ஆனால், போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர் விடுகிறவராயில்லை. மேலே சொல்லும்படி அவர் தலையை ஆட்டினார். பிறகு, வேலன் சொல்லத் தொடங்கினான்: “அந்தப் பாவியாலே எங்க ஊடு குட்டிச்சுவராப் போச்சுங்க. எங்களை ஊரை விட்டே தொரத்திடணுமின்னும் பார்த்தான். எனக்காவ நான் எப்பவும் கவலைப்படல்லே; எங்கப்பாருக்காவத்தான். அவன் ஒரு தீமையும் பண்ணக்கூடதேன்னிட்டு நான் பயந்துகிட்டு இருந்தேன். இதை மனசுலே வச்சுக்கிட்டு, நான் எங்காப்பாருக்கு ஒரு யோசனை சொன்னேன். அது அவருக்குப் பிடிக்காதூன்னிட்டு எனக்கு நல்லாத் தெரியும்! அப்படித் தெரிஞ்சும் நான் என்னாத் துக்குச் சொன்னனின்னா...” வேலன் நிறுத்தினான். அவனுக்குப் பெருமூச்சு வந்துவிட்டது; பேசுவதற்குக் கஷ்டப்பட்டான். பிறகு, “எல்லாஞ் சொல்லணுமா, சாமி?” என்று பரிதாபப்படும்படி கேட்டான்.

“என்ன செய்கிறதப்பா? சட்டப்படி நான் நடக்க வேண்டுமே?” என்று ஸப் இன்ஸ்பெக்டர், சாந்தமாகச் சொன்னார்.

“ஊம், சரிங்க. நான் எங்கப்பாரை முக்காவாசி நெலத்தை வித்துவிடச் சொன்னேன். அப்படி விக்காட்டி, சாப்பாட்டுக்குக்கூட ஒண்ணும் மிஞ்சாதூன்னு எனக்கு நல்லாத் தெரியுங்க. ஆண்டவனறிய, அவரு நன்மைக்கே நான் அந்த யோசனை சொன்னேனுங்க. ஆனா, அவரு அதை வித்தியாசமா எண்ணிக்கிட்டு, என்னை நன்னிகெட்டவனின்னாரு. அத்தோடு நிக்காதே, கோவத்துலே இன்னும் ஒரு பேச்சுச் சொன்னாருங்க. அதைக் கேட்டப்போ, என் வவுரு எரிஞ்சுபோச்சு! அந்தப் பாவி மாயாண்டி இல்லாட்டி, அவரு ஒருநாளும் அப்படிச் சொல்லியிருக்கமாட்டாரு. என்னாலே பொறுக்கமாட்டல்லே. இப்படியும் ஒரு மனிசன் பொறந்து உயிரோடு இருக்கணுமான்னு ஆயிடுச்சு எனக்கு. உயிருக்கு உயிரா இருந்திட்டு,‘நீ ஒரு வேத்து மனுசன்தானேடா’ன்னு அவரு

சொன்னப்போ, என் ஆவி கொலஞ்சு போச்சு! ஐயோ சாமி! இதை யெல்லாம் ஏன் இளுக்கிறீக?'' என்று கண்களில் நீர் ததும்பத் ததும்பச் சொன்னான்.

''பொறுத்துக்கொள் தம்பி, பொறுத்துக்கொள். இது என்ன, அவன் சொல்வது எனக்கு ஒன்றும் தெரியவில்லையே? யாரு வேற்று மனிதன்? என்னவோ நன்றிகெட்டவன் என்கிறான்,'' என்று மதுரையைப் பார்த்து ஸப் இன்ஸ்பெக்டர் கேட்டார்.

அப்பொழுது மதுரை, வெங்கடாசலத்திற்கும் வேலனுக்குமுள்ள பாத்தியத்தைச் சுருக்கமாகச் சொன்னான்.

''ஓஹோ, அப்படியா சங்கதி? அப்புறம்?'' என்று மறுபடியும் வேலனை அவர் தூண்டினார்.

''அப்பாலே...அப்பாலே,'' என்று வேலன், ஏதோ நினைவாய்த் திருப்பித் திருப்பிச் சொல்லிவிட்டு, ''எனக்குக் கெட்டவெறி பிடிச்சுப் போச்சு. இவ்வளவு துன்பமும் அந்தப் பயலாலேதானே வந் திச்சு? அவனை எப்படியாவது தீத்துடனுமின்னிட்டுக் கங்கணம் கட்டிக்கிட்டேன். அவ்வளவுதானே ஒளிய, நெசமாலும் நான் கொல்லல்லீங்க,'' என்றான் வேலன்.

ஸப் இன்ஸ்பெக்டர் மௌனமாய்த் தலையை ஆட்டினார். பிறகு, ''நீ சொல்வது நிஜமானால், உன் துணியெல்லாம் ரத்தமா வானேன்? நீ அவ்வளவு கஷ்டப்பட்டு அதைக் கிழித்து எறிவானேன்?'' என்று அவர் கேட்டார்.

வேலன், திருதிருவென்று விழித்தான்; பதில் சொல்லத் தயங்கினான். பிறகு, ''மெய்யாலும் எனக்குத் தெரியாதுங்க,'' என்று தடுமாறிக்கொண்டு சொன்னான்.

''சரிதான், எல்லாம் சட்டப்படி நடக்கும், போ — இதோ, இப்ராஹீம், சவத்தை ஸ்டேஷன் ஆஸ்பத்திரிக்கு ஒரு வண்டியில் போட்டுக்கொண்டு போ. அதை டாக்டர் பரீக்ஷை செய்ய வேண்டும். சரி, நீ வா தம்பி, என்னோடு,'' என்று சப் இன்ஸ்பெக்டர் வேலனை அழைத்தார்.

“நான் ஏன் வரணும், சாமி,” என்று வேலன், மறுத்துச் சொன்னான்.

“வீண் கேள்விகள் கேட்காதே. வா என்றால் வா,” என்று அவர் கோபித்துக்கொண்டார்.

“ஐயோ! சாமி! உங்களுக்குப் புண்ணியமுண்டு; அவனை உட்டுடுங்க. என்னை அளைச்சிக்கிட்டுப் போங்க. உளுமையிலே நான்தான் கொலைபாதகன். என்னாலேதான் அவன் கொன்னான். குத்தமெல்லாம் என் பேருலே, சாமி. அவன் அறியாப் பையன். ஐயோ! இல்லாட்டி என்னையுங்கூட அவனோடு அளைச்சிக்கிட் டுப் போங்க. சாமி! சாமி! உங்களைக் கையெடுத்துக் கும்பிடுறேன்,” என்று கைகளைக் கூப்பிக்கொண்டு, வெங்கடாசலம் கெஞ்சினான்.

ஸப் இன்ஸ்பெக்டர் திரும்பிப் பார்த்தார். “அவசியம் வந்தால், உன்னையும் இழுத்துக்கொண்டு போவோம்,” என்று சொல்லி விட்டு, அவர் வெளியே போய்விட்டார்.

அலமேலு, தலையில் அடித்துக்கொண்டு புரண்டு புரண்டு அழுதாள். பிறகு அவள், வேலனைப் பின்தொடர்ந்து ஓட யத்தனித்தாள். ஆனால் மதுரை, அவளை மெதுவாகத் தடுத்தான். “அம்மாடி! என் பேச்சைக் கேளு. நீயோ பொம்பிளை. உன்னை அவுங்க பின்னாலே வர உடமாட்டாங்க; துரத்திடுவாங்க. நான் போறேன் வேலுவோடே. அந்தக் கொளந்தப் பயலை நான் இப்போ விட்டுக் குடுத்திடுவேனா? அவனை மீட்டுக்கிட்டு வராதே, நான் ஊடு திரும்பறதில்லே; சத்தியமாச் சொல்றேன் நம்பு; உன் வேலை, வெங்கடாசலத்தைப் பாத்துக்கவேண்டியது. நீ இல்லாட்டி அவன் செத்துப்போயிடுவான். அதோ! பாரு, பாரு! அவனுக்கு வலிப்பு வந்திடுச்சு. ஓடு! ஓடு!” என்று வெங்கடாசலத்தைக் காட்டி, மதுரை சொன்னான். அலமேலு, ஓடித் தன் புரு ஷனைப் பிடித்துக் கொண்டாள். மதுரை, போலீஸாரைப் பின்பற்றி ஓடினான்.

வெங்கடாசலத்தின் வலிப்பு, படிப்படியாகத் தணிந்தது. ஆனால், அவன் ஆயாசத்தால் சோர்ந்து பிணம்போல் கிடந்தான். இன்னும் அவனுக்கு நினைவு வரவில்லை; மூடின கண்கள் மூடியபடியே இருந்தன. பெருமூச்சைத் தவிர அவனிடம் வெறொரு ஜீவ களையும் காணப்படவில்லை.

வீரப்பனும் சில சிநேகிதர்களுமாய்ச் சேர்ந்து, அவனை மெதுவாகச் சுமந்து படுக்கையில் வைத்துக் கவலையோடு அவனைக் காத்துக் கொண்டிருந்தனர்.

## 17. கண்கெட்ட பின்

வெங்கடாசலத்தின் மயக்கம் தெளியக் கால்மணி நேரமாயிற்று. அவன் மெதுவாகக் கண்களைத் திறந்து, அன்புடன் தன்னைச் சுற்றி நிற்போர் முகங்களைப் பார்த்தான். அவனுக்கு ஞாபகம், மின்னல்போல் திடீரென்று வந்துவிட்டது; உடனே பரிதாபகரமாய்ப் புலம்ப ஆரம்பித்தான்.

“வேலு எங்கேயப்பா! ஐயோ! என் குளந்தையை எங்கே இளுத்துக்கிட்டுப் போயிட்டாங்க! அவனை என்ன செய்யப் போறாங்க? ஏ, வீரப்பா, அவன் எங்கே சொல்லேன்; அவனைத் தப்ப வைக்க வளியில்லையா? அதுக்கு என்ன செலவானாலும் சரி, கொடுத்துடறேன். மதுரை சாமார்த்தியக்காரனாச்சே. அவனாலேகூடவா முடியாமே போயிடும், அவன் எங்கேப்பா — மதுரை? பாத்தியா பாத்தியா, வீரப்பா! இந்தச் சமயத்திலே மதுரை என்னை உட்டுட்டுப் போகலாமா?”

“வெங்கடாசலம், ஒருநாளும் மதுரை உன்னைக் கைவிட மாட்டான். அவன், வேலுவோடேயல்ல ஓடியிருக்கான், அவனை உட்டுப் பிரியாதே, எப்படிநாச்சும் சட்டுப் புட்டுனு அவனை ஊருக்குத் திருப்பி அளச்சுக்கிட்டு வர, வளியல்ல தேடிக்கிட்டு இருக்கான்? அதுவரையிலும் உன்னைப் பாத்துக்க நான் இங்கே இருக்கேன். நீ ஒண்ணும் கவலைப்படாதே. வேலு கட்டாயம் தப்பிச்சுப்பான். சட்டமின்னா சும்மாத்தானா? எவன் பேச்சைக் கேட்டாவது ஒத்தனைத் தண்டிச்சிடறதுதானா! கொலை பண்ணினப்போ, எவன் பாத்தான்? என்ன சாச்சி இதுக்குது? கூலிக்கு மாரடிக்கிய பயக பேச்சக் கேட்டு, ஜர்ஜி தண்டிச்சிடுவாரா? மாரிக் கவுண்டன் சங்கதி நமக்குத் தெரியாதா? நீ என் பேச்சை நம்பு; சாச்சி சம்பந்தமில்லாமே கேசு ஒண்ணும் பலிக்காது. செத்தவன் திரும்பி வந்து சாச்சி சொன்னாத்தான் உண்டு. அது நடக்கிற சங்கதியா?”

“நீ சொல்வது ரொம்பச் சரி, வீரப்பா! எதுக்கும் பயந்திடக் கூடாது. கெட்டுப் போவதெல்லாம் பயத்தாலேதான். நீ எப்பவும் யோசனைக்காரன்தான். நீயும் மதுரையும் இல்லாட்டி, என் கதி என்னாகுமோ!” என்று சொல்லிக்

குழந்தைபோல் அவன் வீரப்ப னுடைய கைகளைப் பிடித்துக் கொண்டான். மறுபடியும் அவன் சுற்றிப் பார்த்தான். தன் மனைவியும் வீரப்பனையும் தவிர, அங்கே ஜம்புலிங்கமும் பிச்சையுந்தான் இருந்தார்கள். அவர்கள் வேலனுடைய பிராண சிநேகிதர்கள். பிறகு, பயப்படவேண்டிய காரணமில்லையென்று தெரிந்துகொண்டு, அவன் தாழ்ந்த குரலில் ரகசியமாகக் கேட்டான்: ‘‘அவன் அந்த வேலை செஞ்சிருப்பானா?’’

‘‘கடவுளுக்குத்தான் தெரியும்,’’ என்று வீரப்பன், கைகளை விரித்துச் சொன்னான்.

‘‘அவன் எவ்வளவு நல்ல பையன்! எப்பவும் நாலு பேரு நலுமையே தேடறவனாச்சே; அவன் அந்த வேலை செய்ய எப்படித் துணிஞ்சானோ!’’ என்று வெங்கடாசலம், தனக்குள்ளே பேசிக்கொள்வதுபோலச் சொன்னான். ‘‘ஆனா, ரொம்ப ரோசக் காரன். என் வாயிலே சனி இருந்திச்சு. என் கோபத்தாலே, அவனுக்கு வெறிபிடிச்சுப் போச்சு. ஆமாம், நான்தான் அவனுக்குத் தூவம் போட்டுட்டேன். என்னாலேதான் அவன் மாயாண்டியைக் கொன்னான். அந்தக் கொலைக் குத்தம் என்னுது. நான்தான் கொலையாளி! கொலையாளி மட்டுமா? துரோகக்காரப் பயகூட. ஐயோ! கடவுளே! நான் என்ன பண்ணிட்டேன்! இதிலிருந்து நான் எப்படித் தப்பிச்சுக்கறது? வீரப்பா! என்ன அப்பாவு நம்பினதுக்கு, நான் இதுமாதிரியா செய்யறது? பாலு குடிக்கற கொளந்தையைக் கொண்டாந்து, ராசாவாட்டம் வளத்து, அப்புறம் தூக்குலே போடக் குடுக்கிறதா! — வீரப்பா, வேலுவை எப்படிநாச்சும் காப்பாத்த வேணும். சந்தேகத்துக்கே எடம் குடுக்கக் கூடாது. நான், என் நெலன், பலன், ஊடு, வாசல் எல்லாத்தையும் குடுத்திடறேன். என் உயிரையும், பளிக்குப் பளியா எடுத்துக்கட்டும். வேலுவை மட்டும் உட்டுடவேணும். அப்பாவு செத்து சொர்க்கத்துலே இருக்கான். அவன், ‘அட, துரோகக்காரப் பாவி!’ இன்னிட்டு என்னை இடிச்சுக்காட்றாப்போலே இருக்குதே! — ஆனா, எம்மேலே குத்தம் கண்டுபிடிக்க அவனுக்கு என்ன அதிகாரம் இருக்குது? என்னைவிட அவனுக்கு வேலுமேலே பிரியமா? என் வயிறு எரியறாப்போல, அவன் வயிறு எறியுதா? — நான் படுகிற கஷ்டம் யாருக்குத் தெரியும்? — அப்பா, வேலு! வேலு! நான்

இப்படித் தவிப்பேனின்னு உனக்குத் தெரியாமே போச்சா!'' என்று அவன், தன் கைகளைப் பிசைந்துகொண்டு கதறினான்.

''பயப்படாதே, வெங்கடாசலம். வேலுவைக் கட்டாயம் விடுதலை செஞ்சிடுவாங்க. வீணாய்க் கவலைப்படாதே. அத்தினி பேரு விரோதமா சாச்சி சொல்லிக்கூட, மாரிக்கவுண்டன் தப்பிச் சுக்கிட்டானே. சாச்சிக்கே ஆளில்லாமே இருக்கிறப்போ, வேலு தப்பிச்சுக்க மாட்டானா?''

''நெசந்தானப்பா, நெசந்தான். ஆனா, நாமும் துட்டுச் செலவளிக்க மட்டும் யோசிக்கக்கூடாது. இருக்கிறதுக்குள்ளே ரொம்பக் கெட்டிக்கார வக்கீலைப் பார்த்து பிடிக்கணும். மாரிக்கவுண்டன் எவ்வளவு பணத்தை வாரி எறச்சான்? நீ மறந்திட்டாயா?''

''அவன் சங்கதியே வேறே. அவன் கொல்றப்போ, கண்ணாலே பாத்தவங்க எத்தினியோ பேரு இருந்தாங்க. அவங்களுக்கெல்லாம் வாய் மூட்டம் போட்டான். நம்ம சங்கதியிலே என்ன நடந்திச்சோ, யாருக்குத் தெரியும்?''

''இருந்தாலுங்கூட, கேசு நம்ம பக்கமின்னு நிச்சயம் ஆக்கிடனுமப்பா. வக்கீலைத்தான் நாம் பிடிக்கணும் — வீரப்பா, எனக்கு ஒரு ஒவகாரம் செய்யறயா?'' என்று வெங்கடாசலம் கெஞ்சினான்.

''என்ன பேச்சு? வெங்கடாசலம்! நான் மாட்டேனிம்பேனா?''

''வேலு, கொசப்பட்டி கங்காணிகிட்டே கடன் வாங்கலாமின்னு போனது உனக்குத் தெரியுமில்லே?'' வீரப்பன் தெரியுமென்று தலையை அசைத்தான். ''என்மேலே அந்த ஆளு கொஞ்சம் மருவாதி வச்சிருக்கானின்னு நான் கண்டுக்கிட்டேன். நெலங்களை வெலைக்கு விக்கிறதுன்னா, நல்ல தொகையாய் கொடுக்கிறேன்னு சொன்னானாம். நீ இப்போ, அவன் கிட்ட போ. நான் என் சொத்தையெல்லாம் — நத்தைக்காடு உள்பட — வித்துடத் தயாரின்னு சொல்லு. எனக்கு வந்திருக்கிற துன்பத்தை யெல்லாம் சொல்லு. வேலு அவனை ரொம்ப மெச்சிப் பேசினான். அவன் எரக்கமுள்ளவனின்னுதான்

எனக்கும் படுது. அவன் நமக்குக் கட்டாயம் ஒவகாரம் செய்வான். அவன் குடுக்கிறதெல்லாம் வேலு கேசுக்குத்தான்னு சொல்லு. காத்துட்டுகூட எனக்கு வாணாம் — இல்லாட்டி, இன்னொரு வேலை செய்யலாமா, வீரப்பா? அவன் என் சொத்துப் பூராவும் எடுத்துக்க வேண்டியது; அவன் எப்படியாவது வேலுவைத் தப்பிச்சு உட்டுடணும். இந்தக் காலத்துலே, பணம் இருந்தா எதுதான் நடக்காது? நாம் கண்ணாலே பாக்கல்லே? சாமர்த்தியக்கார வக்கீலுங்க, நியாயத்துக்கும் பேசறாங்க, அநியாயத்துக்கும் பேசறாங்க. மாரிக்கவுண்டன் கேசுலே, நாயம் இருக்கிற எடம் தெரியாமே போச்சே. சட்டமல்ல ஜெயிச்சிது! அதனாலே, நான் சொல்றேன்; நீ அந்தப் பாரத்தைக் கங்காணி தலையிலே போட்டுடு. அவன் பாத்துப்பான். அவன் வேலுகிட்ட ரொம்பப் பிரியமா இருந்தானாம். ஒண்ணு, ரெண்டு கூடச் செலவானாலும் யோசிக்கமாட்டான். நீ, இப்பவே போயி அவனைக் கண்டு பேசேன்,'' என்று வெங்கடாசலம் கெஞ்சுவதுபோல் சொன்னான்.

''இப்பவா? நாளைக்குப் பாத்துக்கலாம், வெங்கடாசலம். உனக்கு இன்னும் களைப்புத் தீரல்லையே. நான் உன்னை ஒண்டியாய் விட்டுட்டு எப்படிப் போவுறது?''

''எனக்கு ஒடம்பு ஒண்ணுமில்லையப்பா. நீ கொசப்பட்டிக்குப் பொறப்பட்டியின்னா, எனக்கு இன்னும் கொஞ்சம் தெம்பா யிருக்கும். சாப்பாடு பண்ணிக்கிட்டுப் பொறப்படுறயா?''

''நீ வருகிற வரையிலும் நான் இங்கேயே இருக்கேன், அப்பா. சோறு ஆக்கறதுக்கு ஒரு ஆளு வாணாமா? பாவம்! அத்தையாலே இப்போ என்ன முடியும்?'' என்றாள் வள்ளி. ஒருவர் கண்ணிலும் படாமல் அவள் எப்படியோ உள்ளே நுழைந்துவிட்டாள்.

''நீயாம்மா! எப்ப வந்தே? இப்படி வா. என்கிட்ட உக்காரு. இன்னும் கிட்ட வாம்மா. என் அம்மாடி!'' என்று சொல்லிக் கொண்டே, அவளுடைய இருகைகளையும் கெட்டியாக வெங்கடாசலம் பிடித்துக்கொண்டான்.

சில சமயங்களில், பேசுவதைவிடப் பேசாமையால், மனோபாவங்கள் வெகு தெளிவாகவும் அழுத்தமாகவும் எடுத்துரைக் கப்படுகின்றன. வள்ளி மௌனமாய் உட்கார்ந்திருந்தாள். ஆனால், வெங்கடாசலம் அவள் முகத்திலிருந்து பல விஷயங்களை ஊகித்தான். வெங்கடாசலம், எப்பொழுதுமே திடமான மனமுடையவனல்ல. இப்பொழுது, கேட்க வேண்டியதேயில்லை. பழைய ஞாபகங்கள் அவன் புண்பட்ட மனத்தைக் குத்திக் கிளறின. அவன் மனம் படும் கஷ்டத்தை, அவன் துடிக்கும் உதடுகள் காட்டிக் கொடுத்தன. தன் துக்கத்தை அடக்க, ஆன வரையிலும் முயன்றான். கண்களை இறுக மூடிக் கொண்டான். ஆயினும், தாரை தாரையாய் வடியும் கண்ணீரை அவனால் நிறுத்த முடியவில்லை. வீரப்பனும் மூக்கைச் சிந்திக்கொண்டு வெளியே சென்றான்.

# 18. நிரூபிக்கும் பொறுப்பு

குசப்பட்டியில் வீரப்பனுக்குப் பெரிய ஏமாற்றம் ஏற்பட்டது. ஏனெனில், அன்று காலையில்தான் அந்தக் கங்காணி, தன்னுடைய தேயிலைத் தோட்டங்களைப் பார்வையிட்டு வருவதன் பொருட்டுக் கண்டிக்குப் புறப்பட்டுப் போய்விட்டதாகத் தெரியவந்தது. மேலும் விசாரித்ததில், கங்காணி திரும்பிவர ஒரு மாதமாகு மென்று அவனைச் சேர்ந்தவர்கள் சொன்னார்கள். வீரப்பனுக்கு இது ஓர் அபசகுனம்போலத் தோன்றிற்று. கங்காணியிடமிருந்து உதவி எதிர்பார்க்கலாமென்று அவன் நிச்சயமாக நம்பியிருந்தான். இப்பொழுது, வேறு யாருடைய உதவியை நாடுகிறதென்று அவ னுக்குத் தெரியவில்லை. வெங்கடாசலத்தைவிட வேலன் மேலே அவனுக்கு இரக்கம் அதிகமாக இருந்தது.

வெங்கடாசலத்தினிடம் அவனுக்கு அன்பு இல்லாமல் போகவில்லை. ஆனால், இந்தத் துர்ப்பாக்கியப் பையனுடைய வாழ்க்கை, எல்லாவிதத்திலும் பரிதாபப்படத் தக்கதாயிருந்தது. ஈசனருளால் வேலன் தப்பித்துக் கொண்டு வந்துவிட்டால், அவனுக்கும் தன் பெண்ணுக்கும் குறுக்கே தான் நிற்கக்கூடாதென்று அவன் நிச்சயித்துக் கொண்டான்.

ஆமாம், தன் மனைவி எவ்வளவு வாயடி கையடி அடித்தாலும், அதைச் சட்டை செய்யக்கூடாது! மூளை கெட்டவள்! அவள் தன் மகளுக்குச் சொத்துச் சேருவதைக் கவனித்தாளே யொழிய, அக்குழந்தை சுகமாக வாழ வேண்டுமென்பதை அவள் நினைக்கவே இல்லை. வேலனைத் தவிர வேறு யாரையும் மணம்புரிய வள்ளிக்கு இஷ்டமில்லையென்று அவன் நன்றாய் அறிவான். தன் அருமைப் புதல்வியின் சுகத்தைத் தான் பாழாக்குவதா? தன் மனைவி நினைத்தாற்போல், காசு பணம் அவ்வளவு நிரந்தரமானதா? வெங்கடாசலம் இக்கதிக்கு வருவானென்று யாராவது நினைத்தார்களா? சந்தேகமே வேண்டியதில்லை. வள்ளியை வேலனுக்குத்தான் கட்டிக் கொடுக்கவேண்டும். வேலன் மீது மட்டும் அவனுக்குப் பிரியம் இல்லையா? தங்கக் கம்பியாயிற்றே!

அவனைப்போல மகனைப் படைக்கக் கொடுத்து வைத்திருக்க வேணுமே! சரி, அவனை இப்பொழுது புகழ்ந்து என்ன லாபம்? அவனைக் காப்பாற்ற வேண்டிய வழியையல்லவா தேடவேண்டும்? அதற்குப் பிரதானமாக வேண்டியது பணமொன்றுதான் என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். நல்ல வக்கீல்களை அமர்த்தா விட்டால் வழக்கு ஜயிக்காது. பெருந்தொகை கொடுக்காவிட்டால் நல்ல வக்கீல்கள் அகப்படமாட்டார்கள். எங்கிருந்து பணத்தைச் சேகரிப்பதென்று அவனுக்குத் தெரியவில்லை. மீனாக்ஷியைக் கேட்பது, திருடன் தலையாரி வீட்டில் நுழைந்தாற்போல் இருக்கும்.

அவனுக்கு மூளை கலங்கிப் போயிற்று. வெறுங்கையோடு ஊருக்குத் திரும்ப அவனுக்கு இஷ்டமில்லை. வெயில் கடுமையாய் அடித்துக் கொண்டிருந்ததனால், அவனுக்கு மிகவும் களைப்பாயிருந்தது. அவ்வூரைச் சுற்றித் தோட்டந்துரவுகள் அநேகம் இருந்தன. அவைகளில் ஒன்றில் அமிழ்ந்து ஸ்நானம் செய்ய வேண்டுமென்ற யோசனை அவனுக்கு உண்டாயிற்று. உடனே, அவன் ஒரு பெருங் கிணற்றை நோக்கிச் சென்றான். அக்கிணற்றின் மேட்டில் இருந்த இரண்டு பலா மரங்களால், அங்கே நல்ல நிழல் இருந்தது. காற்றும் ‘ஜிலுஜிலு’வென்று அடித்தது. ஆனந்தமாய் அவன் அந்நிழலில் சற்றுநேரம் உட்கார்ந்தான். பிறகு அவன் அக்கிணற்றில், இறங்கிக் குளிர்ந்த ஜலத்தில் ‘தபால்’ என்று விழுந்தான். அவன் மனத்திற்கும் தேகத்திற்கும் உண்டான சாந்தியை, இவ்வளவென்று சொல்ல முடியாது. குளிர்ந்த நீர் அவன் உடம்பில் பட்ட மாத்திரத்தில், அவனுடைய கவலைகளெல்லாம் காற்றாய்ப் பறந்தோடின. அவன் தேகத்திற்கு உண்டான சுகத்தால், தவளைபோல் முழுகி முழுகி எழுந்தான்; ஆமைபோல் மிதந்தான். அப்புறம், சிறு குழந்தைபோல் ஜலத்தை இரு கைகளாலும் தட்டினான். பிறகு, சிறிது அசைவற்றுக் கிடந்தான்.

அப்பொழுது, அவன் மனம் மறுபடியும் யோசனையில் ஆழ்ந்தது. அவனுக்குப் பற்பல சூழ்ச்சிகள் தோன்றின; மறு க்ஷணத்திலேயே அவை உபயோகமற்றவையென்று தள்ளப்பட்டன. பிறகு திடீரென்று, தெய்வானுக்கிரஹம் போல் அவனுக்கு ஓர் எண்ணம் வந்தது; ஏன்

மாரிக்கவுண்டனோடு கலந்து பேசக் கூடாது? பணத்திற்காக அல்ல. ஐயோ பாவம்! அவனே சாப்பாட்டிற்குத் தன் பேரப் பிள்ளையின் கையைப் பார்ப்பவனாக இருந்தான். ஆனால், கொலைக் கேசு விசாரணைகளைப் பற்றி அவனுக்குத் தெரியாதது யாருக்குத் தெரியும்? அவனே குற்றவாளியாக இருந்ததும் தவிர, எவ்வளவோ சச்சரவுகளில் அவன் உள்மறைவாக வேலை செய்தான் என்பது, ஊரெல்லாம் அறிந்த விஷயம்.

ஏராளமாய்த் திரவியத்தைச் செலவழித்து அவன் தப்பி விட்டாலும், அவன் வினையே அவனைச் சுட ஆரம்பித்தது. சாகிற காலத்தில், அவன் தனியாய் ஊருக்கு ஒரு மைலுக்கு அப்பால், மனித சஞ்சாரம் இல்லாத இடத்தில் ஓர் ஆலமரத்தின் கீழ்க் குடிசையைக் கட்டிக்கொண்டு, அதில் காலத்தைக் கழித்து வந்தான். அவ்விடத்தை விட்டு அவன் எங்கும் போவதே இல்லை. அவனைத் தேடி யாராவது போவதும் இல்லை. ஒரு நாளைக்கு ஒருதரம், அவன் பேத்தி மத்தியான்ன சமயத்தில், ஒருவாய்ச் சோறு கொண்டு வந்து கொடுப்பாள்; அதோடு சரி. நெற்றியில் சதா விபூதியைப் தடவிக் கொள்வதும், கடவுளைத் துதித்து முணுமுணுப்பதும் தவிர, அவனுக்கு வேறெரு வேலையும் இல்லை. கடவுளைத் துதிக்காத சமயத்தில், தன்னைச் சுற்றிலும் உதிர்ந்து கிடந்த காய்ந்த ஆலிலைகள் காற்றில் அலைவதை நோக்கியபடியே குடித்துக் கொண்டிருப்பான். அவனுக்கு அபூர்வமான சக்திகள்கூட ஏற்பட்டுவிட்டதாக, ஒரு வதந்தி பரவி யிருந்தது.

புத்திமதி கேட்பதற்கு அவன்தான் சரியான ஆள் என்று வீரப்பன் நிச்சயித்துக்கொண்டான். உடனே மடமடவென்று உடம்பைத் துடைத்துக்கொண்டு, வெகு உற்சாகத்துடன் அவன் மாரிக்கவுண்டனுடைய குடிசைக்குக் கிளம்பினான்.

அக்கிழவன், வீரப்பன் சொன்னது அனைத்தையும் சாந்தமாகக் கேட்டான். மாயாண்டியின் கொலையைப் பற்றி, முன்னதாகவே அவனுக்கு அவனுடைய பேத்தி மூலமாய்த் தகவல் வந்திருந்தது. ஆனால், அவ்வளவு விவரங்கள் தெரியவில்லை. தன் நரைத்த தாடியைத் தடவிக்கொண்டு, அவன் நிதானமாகச் சொல்லலானான்: “வேலுவை நிச்சியமாக உட்டுடுவாங்க. அது

எனக்குக் கண்ணாடியிலே பாக்கறதுபோலே தெரியுது. ஆனா, வெங்கடாசலத்துக்கு ரொம்பத் திண்டாட்டம் இருக்குது; தப்பாது.''

ஆனால், இந்த ஆருடத்திற்காக வீரப்பன் அவனிடம் வரவில்லை.

''நீ எதோ கம்பத்தையனாட்டம் சொல்லுறே, மாமா! உன் வாய்ப் பேச்சு பலிக்கட்டுமே. ஆனா, எனக்கு ஒரு சந்தேகம் வருது. இப்போ, வெங்கடாசலத்துக் கிட்டே கால் துட்டுக் கிடையாது. அது உனக்கு நல்லாத் தெரியும். வக்கீலை வைக்கிறது நடவாத காரியம்! அப்படி இருக்கறப்போ, கோர்ட்டுலே வாக்கு மூலம் கேக்கும்போது, அவன் எப்படி ஜவாப்பு சொல்லணு மின்னு நாமே வேலுவுக்குச் சொல்லித்தர வாணாமா? இவன் ஒண்ணிருக்க ஒண்ணு சொல்லி, தலையிலே மண்ணைப் போட்டுக்கிட்டா என்னா பண்றது? அதுக்கும் நீ கொஞ்சம் யோசனை சொல்லணும். ஜெயிலிலே, அவனைப் பாக்க விடுவாங்களா?''

மாரிக்கவுண்டன் முகத்தில் ஒரு புன்சிரிப்புப் படர்ந்தது. ''அதைப் பற்றி நீ ஒண்ணும் கவலைப்படாதே. ஒரு கொலைக் கேசுலே குத்தவாளி பாப்பராயிருந்தான்னா, சர்க்காருலேயே அவனுக்காக ஒரு நல்ல வக்கீலை நெயமிக்கறாங்க. அவனை ஒரு நாளும் அனாதியா உட்டுட மாட்டாங்க. நெசமாலும் கொலை செஞ்சவன் தப்பிச்சுக்கிட்டாலும் தப்பிச்சுக்கலாம்; ஒரு பாவமும் அறியாதவன் மட்டும் எப்பவும் ஆப்பிட்டுக்கக்கூடாது. அதுதான் அவுங்க நோக்கம். அதனாலே நீ கவலைப்படாதே, அப்பா. எல்லாம் வக்கீலே வேலுவைத் தயார் பண்ணிடுவாரு. அவுகளுக்குத் தெரியாததா? அங்கே என்னா இருக்கு? அடியிலிருந்து நுனி வரையிலும், 'இல்லே, இல்லே'ன்னிட்டு அடிச்சுக்க வேண்டியது தான். ஆனால், அந்தப் பித்தலாட்டமெல்லாம் அவன்கிட்ட முடியாது டோய்! — எவன்? நிதம் இப்படி எரிஞ்சு அப்படிப் போறானே, அவன்கிட்ட உன் பாச்சா பலிக்காதுடா, தம்பி!'' என்று மாரிக் கவுண்டன், ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். அவன் குரலே மாறிவிட்டது.

''முடியாதுன்னா முடியாதுதான். அந்த ஜர்ஜி இல்லே, அவன் பாட்டனாலேகூட உன்னைக் காப்பாத்த முடியா துடா! உன்னைக் காப்பாத்தக்

கூடியவன் அவன் ஒருவன்தாண்டா! உளுடா அவன் காலிலே; உளுடா!'' என்று மாரிக்கவுண்டன் பெருங்கூச்சலிட ஆரம்பித்துவிட்டான். பழங்கதைகள் அவன் நினைவுக்கு வந்துவிட்டன. வீரப்பன் மிகவும் வருத்தப்பட்டான். இனி அங்கே தாமதிப்பது உசிதமில்லையென்று, அவன் கிழவனுக்குச் சில நல்ல வார்த்தைகளைச் சொல்லி விடைபெற்றுக் கொண்டு, கிராமத்தை நோக்கி விரைவாகச் சென்றான்.

ஆனால், வெகுதூரம் வரையிலும் மாரிக்கவுண்டன் சொன்ன சொற்களும் அவைகளின் பாவமும், அவன் மனத்தைக் குடைந்து கொண்டே வந்தன.

இருந்தபோதிலும், எல்லாம் வெகு அநுகூலமாய் முடியும் போல் இருக்குதே! வேலுக்கு உதவியாகப் பேச ஒரு வக்கீல் கிடைத்துவிட்டால், அவன் விடுதலையைப் பற்றி ஏன் சந்தேகப் படவேண்டும்? பணத்திற்காகவும் அவன் இனிமேல் அலைய வேண்டாம். நிலங்களை விற்பதென்றால் அது சுலபமான காரியமா? அதற்கு எத்தனையோ சடங்குகள் செய்யவேண்டும். நல்ல வேளையாய் அந்தப் பிடுங்கலெல்லாம் அவனுக்கு இல்லாமல் போயிற்று. அதுவும் தவிர, நிலங்களை விற்ற கெட்ட பெயர் அவனுக்கு வருவானேன்? என்றைக்காவது ஒருநாள் வெங்கடாசலம், அவன் அநியாயமாய் விற்றுவிட்டதாக அவதூறு சொல்லலாம். இந்த வம்புகளிலிருந்து அவன் தப்பியதும் ஒரு நல்லகாலமே.

இவ்வாறு பற்பல விஷயங்களைக் குறித்து யோசித்துக் கொண்டே, அவன் வழிநடந்ததுகூடத் தெரியாமல் ஊருக்கு அருகில் வந்துவிட்டான். அப்பொழுது, "வீரப்பா, அந்தக் களுதைத் தாதனையுங்கூடச் சரிப்படுத்திட்டேன்," என்று ஆறுமுகம் வெகு சந்தோக்ஷத்தோடு சொன்னான். ஆறுமுகம் எந்த விஷயத்தைக் குறிப்பிட்டான் என்பதே அவனுக்குப் புரியவில்லை.

"நீ சொல்லுறது எனக்கு ஒண்ணும் விளங்கலையே," என்று சொல்லி, அவன் விழித்தான்.

‘‘உனக்கு ஏன் விளங்கும்? — இப்போ, தாதனை உட்டா போலீஸ்காரங்களுக்கு வேறே சாச்சி ஏது? அவனும் அவங்களுக்கு விரோதமாகச் சொல்லிட்டா, அவங்க கேசு தொலைஞ்சாப் போலத்தானே?’’

‘‘ஆமாண்டா, ஆமாண்டா! சரியான வேலை செஞ்சே நீ. நான் என்னத்தையோ நெனைச்சுக்கிட்டு வந்தேன். அது சட்டுனு என் புத்திக்குப் படல்லே. ஏன், இனிமேல் வேலு கேசு ஜெயிச்சாப் போலத்தான்! உனக்குத் தெரியுமல்ல? — வேலுக்குச் சர்க்காருலேயே நல்ல வக்கீலை வப்பாங்களாம்; வச்சுத் தீரணுமாம். குத்தவாளி ஏளைப்பட்டவனாயிருந்தா, அப்படிச் செய்யவேண்டியது அவுங்க கடமையாம். இப்போ, நான் மாரிக்கவுண்டன் கிட்டேயிருந்து அல்ல வாறேன்? கொலைச் கேசைப் பத்தி, அவனுக்குத் தெரியாதது எதுநாச்சும் இருக்குதா? அவனுக்கு விரோதமா சாச்சி சொல்ல ஆளும் இல்லாதே, அவன் பக்கம் பேசறதுக்கு ஒரு வக்கீலும் இருந்துட்டா, அப்புறம் அவனுக்கு என்ன பயம்?’’ என்று வீரப்பன் வெகு சந்தோஷத்துடன் சொன்னான்.

‘‘போவட்டும், அப்பா. அந்தப் பையனுக்கு எவ்வளவு ஒவகாரம் பண்ணாலும் தகும். ஒண்ணு, ரெண்டு களுதெங்களைத் தவிர, ஊரெல்லாம் அவன் நல்லதனமாத் திரும்பி வரணுமேன்னிட்டுச் சாமிக்கு வேண்டிக்கிட்டு இருக்காங்க. அந்தத் தாதன் பயலை வளிக்குக் கொண்டு வறதுக்குள்ளே, போதும் போதுமின்னு ஆயிடுச்சுப்பா. சொன்னபடி கேக்காட்டி மண்டையைப் பொளந்துடுவோம் இன்னுட்டானுங்க பயங்க. ஜம்புலிங்கம், ‘உனக்கும் மாயாண்டி கதிதான்’னு சொல்லிட்டான். அப்பத்தான் கொஞ்சம் பயந்திட்டான். நெசமாலும், அவனைச் சரியானபடி தீட்டறதுக்கேயிருந்தாங்க. அதை அவனும் கண்டுக்கிட்டான்.’’

‘‘எப்படியாவது நம்ம காரியம் அனுகூலமானால் சரி. குருடன் கண்ணைத்தானே கேக்கறான்?’’ என்று சொல்லிவிட்டு வீரப்பன், வெங்கடாசலத்தின் வீட்டிற்குச் சென்றான்.

வீரப்பன் சொன்ன வார்த்தைகளில், வெங்கடாசலத்துக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. சஞ்சலப்படும் அவன் மனத்திற்குக் கங்காணி ஊரில் இல்லாததே ஒரு பெரிய அபசகுனமாகத் தோன்றிற்று. ஆனால், தன் உற்சாகத்தினாலும் இருதயபூர்வமான அன்பினாலும், வீரப்பன் உண்மையான நிலைமையை மெல்ல மேல்ல வெங்கடாசலத்திற்கு விளக்கிக் காட்டினான். அப்போது, வெங்கடாசலத்திற்குக் கொஞ்சம் தைரியம் ஏற்பட்டது. ஆனால், வீரப்பனிடமிருந்து அவன் ஒரு வாக்குத் தத்தம் வாங்கிக் கொண்டான். அதாவது, வீரப்பனும் மதுரையோடு கூடச் சென்று, ஜில்லாக் கோர்ட்டில் கேசு முடிவாகும் வரையில், சகாயமாக இருக்க வேண்டுமென்பதுதான்.

ஒரு விஷயத்தைப் பற்றி ஒரு விதமான தீர்மானத்திற்கு வந்து விட்டால், அதை உடனே செய்து முடித்துவிட வேண்டு மென்பது வெங்கடாசலத்தின் கருத்து. ஆதலால், வீரப்பன் அன்றைத் தினமே பிரயாணம் புறப்பட வேண்டுமென்று, அவன் கட்டாயப்படுத்தினான். ஆனால், அவ்வளவு அவசரப்படத் தேவையில்லையென்றும், வேலுவை ஜில்லா கோர்ட்டுக்கு அனுப்புவதற்கு முன், பள்ளி சப் மாஜிஸ்திரேட் ஒரு சிறு விசாரணை செய்ய வேண்டுமென்றும், அவ்விசாரணை இரண்டொரு தினங்கள் பிடிக்குமென்றும், இக்காலத்தைத் தான் மாரிக்கவுண்டனோடு கழித்து, இன்னும் அநேக விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றும், பலவாறாக அவனுக்குப் போதனை செய்து, வீரப்பன் அவனை நம்பச்செய்தான். அதுவுந் தவிர, நகரத்தில் மாரிக்கவுண்டனுக்கு ஒரு நண்பன் இருந்தான். வக்கீல்களுக்குக் கேசு பிடித்துக் கொடுப்பதே அவன் தொழில். அவனுக்கு அநேக தடவைகளில் மாரிக் கவுண்டன் வெகுமதிகள் அனுப்பினது வீரப்பனுக்குத் தெரியும். மாரிக்கவுண்டன் கையொப்பம் வைத்த ஒரு கடிதத்தை எடுத்துக் கொண்டு போனால், அவன் வேண்டிய உதவி செய்வானென்பதில் சந்தேகமில்லை. முக்கியமான விசாரணை என்னவோ, ஜில்லாக் கோர்ட்டில்தான் நடக்கும். அதுவரையில் வேலுவுக்குத் தைரியம் சொல்ல மதுரை பக்கத்திலேயே இருந்தான். இன்னும் ஏன் கவலைப்பட வேண்டும்?

இவ்விதமாக வெங்கடாசலத்திற்குச் சமாதானப்படுத்தி வீரப்பன், தான் இரண்டு மூன்று தினங்கள் கழித்து ஊருக்குப் புறப்படுவதாகச் சொல்லிவிட்டான். அவன் திரும்பிவரும் வரையிலும், வள்ளி வெங்கடாசலத்திற்கும் அவன் மனைவிக்கும் உதவியாக, அவர்களுடைய வீட்டிலேயே இருக்க வேண்டு மென்றும் அவன் தீர்மானித்துவிட்டான்.

ஆனால், அவன் மனைவி லக்ஷ்மிக்கு இது சம்மதமில்லை. அப்படிச் செய்வதனால், அவர்களுக்கும் மீனாக்ஷிக்கும் பெரும் மனஸ்தாபம் வருமென்று அவள் சொன்னாள். அப்பொழுது வீரப்பன், அவளை ஒருதடவை விழித்துப் பார்த்தான். தன்னை எப்பொழுதும் மறுத்துப் பேசாத புருஷன் இவ்வாறு நடந்து கொண்டதைக் கண்டு, லக்ஷ்மிக்கு ஆச்சரியம் ஒரு புறமும் அச்சம் ஒருபுறமும் உண்டாயின. இனித் தன் இஷ்டம்போல் எதுவும் நடவாதென்பதையும் அவள் நன்றாய் அறிந்துகொண்டாள். அவள் பெண் சங்கதியோ, அவள் எப்பொழுதுமே அடங்காப்பிடாரி. இப்பொழுது ஒளிமறைவில்லாமல் அவள், தான் மல்லனை ஒரு நாளும் கட்டிக் கொள்ள மாட்டேனென்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்.

“அடி பயித்திக்காரி! இந்த அவகேடு நேந்துடாட்டி உனக்கு அப்பவே தாலி கட்டியிருப்பானே,” என்றாள் லக்ஷ்மி.

“நானில்லே அம்மா பயித்தக்காரி,” என்று வள்ளி புன்சிரிப்புடன் சொன்னாள்: “இப்போ சொல்றேன் உன்கிட்டே. தாலி கட்டற சமயத்திலே, நான் பயித்திக்காரியாட்டம் பாசாங்கு செஞ்சு, உங்களையெல்லாம் கடிச்சுக் கிள்ளி எறிஞ்சுடறதூன்னு ஏற்பாடு பண்ணிக்கிட்டேன். யாருநாச்சும் எங்கிட்ட வந்திருப்பீங்களா அப்போ? — இதோ பாரு, இப்பவும் சொல்றேன் உனக்கு; சாமி புண்ணியத் துலே வேலு திரும்பி வந்துட்டாப் போச்சு; இல்லாட்டி, மல்லனுக்குக் கட்டிக் கொடுக்க என் பொணத்தைக்கூடக் கண்ணாலே பாக்கமாட்டே!”

“ஐயோ! வள்ளி! என்ன பேச்சு இது! கொளந்தையா லச்சண மாயில்லையே. நான் எதுக்காவ அவனைக் கட்டிக்கச் சொல்றே னுன்னு

உனக்குத் தெரியல்லையே? என் கொளந்தை மேலே எனக்குப் பிரியமில்லையா?'' என்று லக்ஷ்மி வெகு துக்கத்தோடு சொன்னாள். ‘‘யாரு இல்லேங்கறாங்க; ஆனா, நீ மல்லன் சொத்துக்கல்ல செத்துப்போறே?ýü என்று அவள் சொல்லிவிட்டு, தன் தகப்பன் பிராயணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யப் போய்விட்டாள்.

மாயாண்டி இறந்த நாலாம் நாள், வீரப்பன் மாரிக்கவுண்டனிமிருந்து அவன் சிநேகிதனுக்கு ஒரு கடிதம் வாங்கிக்கொண்டு, ஊருக்குப் புறப்பட்டான். போகுமுன், வெங்கடாசலத்திற்கு வாரம் இருமுறை கடிதம் எழுதுவதாகவும், அவன் வீணாய்க் கவலைப் படவேண்டாமென்றும், அவனுக்குத் தைரியம் சொல்லி அவனிடம் விடைபெற்றுக் கொண்டான்.

பதினாறு மைல்கள் நடந்து, மத்தியான்னம் சுமார் பன்னிரண்டு மணி நேரத்திற்கு அவன் பொன்மலைக்கு வந்து சேர்ந்தான். அக்குன்றின் அடிவாரத்திலிருந்த மரங்களின் நிழலில், அநேக இரட்டை மாட்டுவண்டிகள் அவிழ்த்து விடப்பட்டிருந்தன. எல்லாம் பாரவண்டிகளாய் இருந்தன. அப்பொழுதுதான் அவனுக்குப் புத்தூர்ச் சந்தை ஞாபகத்திற்கு வந்தது. அவ்வண்டிகள், சந்தையில் பாரத்தை ஏற்றிக்கொண்டு நகரத்திற்குப் போய்க்கொண்டிருந்தன. அவைகள் பல சேர்ந்து, ஒன்றுக்கொன்று துணையாக இரவெல்லாம் வழி நடந்து, விடிந்ததும் சௌகரியமான இடங்களில் பகல் வெயிலுக்குத் தங்குவது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. பாரவண்டியா இருந்த போதிலும், வண்டிக்கு இரண்டொரு சவாரிகளையும் எடுத்துக் கொள்வது வண்டிக்காரர்களுக்கு வழக்கம். இப்படிச் சவாரி செய்யும் பிரயாணிகள், கால் கைகளை முடக்கிக்கொண்டு தானிய மூட்டைகளின் மீதுதான் விழுந்து கிடக்க வேண்டும். கரடு முரடான ரஸ்தாக்களில் இவ்வண்டிகள் போகும் பொழுது, அதிர்ச்சிக்குக் கேட்கவேண்டுமா? நகரவாசிகள் அவ்வண்டிகளில் ஏறுவதற்கே பயப்படுவார்கள். ஏறினாலும், அவர்களுக்கு உடம்பு வலிதீர ஒரு மாதமாகும். ஆனால் சுகம் அறியாக் கிராமவாசிகளோ, இக்கஷ்டங்களைக் கஷ்டங்களாகவே கருதமாட்டார்கள்;

இப்படிப்பட்ட பிரயாணங்களில் அவர்கள் ஆனந்தமாகத் தூங்கவும் தூங்குவார்கள்.

வீரப்பன் அதிக பாரமில்லாத வண்டி ஒன்றைத் தேடிப் பிடித்து, அவ்வண்டிக்காரனிடம் வாடகையைப் பேசி முடித்து, அவனுக்கு அச்சாரத்தையும் கொடுத்தான். பிறகு, தான் கொண்டு வந்த சாப்பாட்டைப் புசித்துவிட்டுக் களைப்பாற ஒரு மரத்து நிழலில் படுத்துக்கொண்டான்.

இரவு சுமார் எட்டுமணிக்கெல்லாம் வண்டிகள் கட்டப்பட் டன; பிறகு, மணிக்கு இரண்டு மைல்கள் வேகத்திற்கு மேற் படாமல், எறும்பு ஊர்வதுபோல் ஊரத் தொடங்கின. அரிசி மூட்டைகளின் மீது சிறிது வைக்கோலைப் பரப்பி, அதன்மேல் ஒரு கோணியைப் போட்டு, வீரப்பன் படுத்துக்கொண்டான். வெகு நேரம் தூக்கம் வரவில்லை. நினைத்த காரியம் கைகூடுவதற்கு என்ன என்ன உபாயங்கள் செய்ய வேண்டுமென்று அவன் யோசித்துக் கொண்டிருந்தான். ஆனால், உடம்பு மிகவும் சோர்ந்திருந்தபடியால், அவன் ஒரு யோசனையில் இருக்கும் பொழுதே, தன்னை அறியாமல் தூங்கிவிட்டான்.

அவன் விழித்துக்கொள்ளும்போது, சூரியோதயம் ஆகும் சமயம். கிழக்கு வானமெல்லாம், நெருப்பைப்போல் ஒரே சிவப்பாய்க் காணப்பட்டது. திமிர்பிடித்துப்போன கால்களைத் தடவிக் கொண்டு, அவன் மெதுவாக வண்டியை விட்டுக் கீழே இறங்கினான். நகரத்திற்கு இன்னும் ஒரு மைல் தூரம்தான் இருக்கும். இனிக் காலாற நடப்பதே உத்தமமென்று அவனுக்குத் தோன்றிற்று. கிராமவாசனை இன்னும் மாறவில்லை. ரஸ்தாவுக்கு இருபுறங்களிலும் கழனிகள் இருந்தன. சமீபத்தில் ஒரு சிறு வாய்க்காலும் ஓடிக்கொண்டிருந்து. பட்டணம் சேருமுன்னமே காலைச் சடங்குகளை முடித்துக் கொள்ளவேண்டுமென்று அவன் உத்தேசித்தான். நகரவாசம் என்றால் வீரப்பனுக்கு எப்பொழுதும் வெறுப்பு. அங்கே செய்திருக்கும் ஏற்பாடுகளெல்லாம், இயற்கைக்கு விரோதமானவை யென்பதே அவன் நம்பிக்கை.

அவன் பட்டணத்துக்கு வந்தவுடன், நேராகப் பெருமாள் கோவிலுக்கருகில் இருக்கும் ராஜா சத்திரத்திற்குச் சென்றான். அவன் ஊரினர் நகரத்திற்கு வரும்பொழுதெல்லாம், இதுதான் அவர்களுக்குத் தங்குமிடம். சொல்லிவைத்தாற்போல் சத்திரத்தின் கிணற்றோரமாய் மதுரை, பல் விளக்கிக்கொண்டு இருந்தான். வீரப்பனைக் கண்ட மாத்திரத்தில், அவன் திடுக்கிட்டுப் போய் விட்டான். ஆனால், வீரப்பன் அவன் பயத்தை உடனே போக்கி, நடந்த விஷயங்களை யெல்லாம் சொன்னான். கோர்ட்டு நடவடிக்கைகளை அறிந்த நம்பிக்கையான ஒரு சிநேகிதர் கிடைத்ததற்கு, மதுரை மிகச் சந்தோஷப்பட்டான். ஏனெனில், பள்ளி வரையிலும் தான், அவனால் வேலுவோடு கலந்து பேச முடிந்தது. ஆனால், ஜில்லா ஜெயில் அதிகாரிகள், வேலுவை ஒரு முறைகூடப் பார்க்க விடமாட்டோமென்று சொல்லிவிட்டார்கள். அவர்கள் இரக்கமற்ற பாவிகள் என்று, மதுரை முறையிட்டான்.

பிறகு, இருவருமாய் மாரிக்கவுண்டனுடைய சிநேகிதன் வீட்டைத் தேட ஆரம்பித்தார்கள். வெகுநேரம் அலைந்து திரிந்து, கடைசியாக அவர்கள் அவன் வீட்டைக் கண்டுபிடித்தார்கள்.

சுப்பையா பிள்ளை, மிகவும் நல்லவனாகக் காணப்பட்டான். அவன், மாரிக்கவுண்டனுடைய யோகக்ஷேமங்களைப்பற்றி விசாரித்தான். தான் மாரிக்கவுண்டன் மூலமாய் எவ்வளவோ சம்பாதித்ததாகவும், அவன் சொல்லிக்கொண்டான். தன்னால் இயன்ற மட்டும், அவன் உதவி செய்யத் தயாராயிருந்தான்.

அவன் அபிப்பிராயத்தில், வேலுவின் கேசை எடுத்துக் கொள்ளக் குறைந்தது ஒருமாதம் செல்லும் போலிருந்தது. பழங்கதைகளைப் பேசப் பேச, அவனுக்கு உற்சாகம் அதிகரித்து — எதற்கும் முதலில் தன் மனைவியின் உத்தரவு வேண்டு மென்பதைக்கூட மறந்து — கேசு முடியும் வரையில் அவர்கள் தன் வீட்டிலேயே தங்கலாமென்று அவன் சொன்னான். அதே க்ஷணத்தில், அவன் மனைவி அவனை விழுங்கிவிடுவதுபோல் விழித்துப் பார்த்தாள். அப்பொழுதுதான் சுப்பையா பிள்ளைக்குத் தான் செய்த தப்புத்

தெரிந்தது. அவன் முகம் அசடு தட்டிற்று. அவன் கண்கள் சரணாகதியைத் தெரிவித்து, மன்னிப்பைக் கோரிக் கொண்டன. மதுரை எமகாதகன். இந்த நாடகத்தின் உள்மர்மத்தை அறிந்துகொண்டு, சுப்பையா பிள்ளைக்குத் தலைகொடுத்தான்.

“இவ்வளவு பிரியமா எங்களுக்கு யாரு சொல்லுவாங்க! ஆனா நீங்க, கோவிச்சுக்காதீங்க. ராசா சத்திரத்துலே இருந்தாத்தான், எங்களுக்கு வரப்போகச் சௌகரியமாயிருக்கும். அது ஊருக்கு நடு மையத்திலே இருக்குது. அப்புறம் மேலே, எங்கூருலேயிருந்து யாரு வந்தாலும், அங்கேதான் எறங்குவாங்க. அப்பப்போ ஊரு சங்கதியைக் கண்டுக்கிறதுக்கும் எங்களுக்குச் சுளுவாயிருக்கும் — நீங்க எங்கமேலே வருத்தப்படக்கூடாது,” என்று மதுரை மிகப் பணிவாகச் சொன்னான். ஆனால், சில நிமிஷங்களுக்குப் பிறகு நடந்த ஒரு சம்பவத்தால், சுப்பையா பிள்ளையின் ஸம்ஸாரம் தாயம்மாளுடைய மனம் மாறிவிட்டது.

அவர்கள் பேசிக்கொண்டிருந்தபொழுது, சுப்பையா பிள்ளை வீட்டில் வேலைசெய்யும் ஒரு சிறுவன், ஒரு பசுவைக் கொல்லைப்புறத்திலிருந்து வாசலுக்கு இழுத்துக்கொண்டு வந்தான். அதன் உடம்பில் எலும்பும் தோலுந்தான் இருந்தன. அப்பசுவைப் பார்த்ததும் மதுரை எழுந்திருந்து, “ஐயோ பாவம்! இந்தப் பசுவுக்கு என்ன நோவு?” என்று சொல்லிக்கொண்டே, அதைப் பரிசோதித்துப் பார்த்தான். “அடடே! இதுக்குப் பெரிய வியாதி பிடிச்சிட்டுதுங்க. சட்டுப்புட்டுனு வைத்தியம் பண்ணாட்டி செத்துடுங்க! இதன் பாலைக் குடிக்கிறீர்களா, என்ன?” என்றான்.

“ஆமாம்; குடிச்சதுனாலே என்ன தப்பு?” என்றாள் தாயம்மாள். இதுவரையில் அவள் வாயைத் திறக்கவில்லை.

“எங்கூருங்களுலே, நாங்க குடிக்கமாட்டம், அம்மா; அது உடம்புக்கு நல்லதல்ல; புளுப்பிடிச்சு, ரெத்தமெல்லாம் கெட்டுப் போயிருக்குதே.”

‘‘புழுவா! புழு எங்கிருந்து வந்தது?’’ என்றாள் தாயம்மாள், வெகு ஆச்சரியத்தோடு.

‘‘புளுதானம்மா, அதன் குளம்பு ஒவ்வொண்ணுலேயும் அஞ்சு, பத்துக்கு கொறையாமே இருக்கும். ஆனா, இன்னும் நோவு முத்தலே, லகுவாக்கிடலாம்,’’ என்றான் மதுரை, மாட்டைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்கொண்டு.

‘‘பின்னே எங்க பால்காரக் கிழவன், புழுவைப்பத்தி ஒண்ணும் சொல்லல்லையே. அவன் வயதானவன்; நாலும் தெரிஞ்சவன்,’’ என்று அவனை மறுப்பது போலத் தாயம்மாள் சொன்னாள்.

‘‘நான் சொல்றேனின்னு நீங்க கோவிச்சுக்காதேங்க அம்மா. பட்டணத்துலே இருக்கிறவங்களுக்கு மாட்டைப் பத்தி என்ன தெரியும் — பட்டிக்காட்டான்களுக்கு எல்லாம் தெரிஞ்சிடுச்சின்னுட்டு நான் சொல்லிக்கிடுலே. இருந்தாலும், இவுகளைக் காட்டிலும் எங்களுக்குக் கொஞ்சம் கூடவே தெரியும் — பா, பா, சும்மாரு, சும்மாரு,’’ என்று சொல்லிக்கொண்டு, அப்பசுவின் காலை அவன் பரிசோதிக்க முயன்றான். ஆனால், அது அவனை நெருங்கவிடவில்லை. பிறகு வீரப்பன், சுப்பையா பிள்ளையின் சகாயத்தோடு, அதன் ஒரு குளம்பிலிருந்து தீக்குச்சியால் ஒரு புழுவை எடுத்தான். தாயம்மாள் பிரமித்துப் போய்விட்டாள்.

‘‘ஒண்ணு இல்லே, அம்மா; இன்னும் கொறஞ்சது நாலு, அஞ்சு அதிலே இருக்கும்,’’ என்றான் மதுரை.

‘‘இதுக்கு ஏதாவது மருந்து உனக்கு... உங்களுக்குத் தெரியுமா?’’ என்று தாயம்மாள், அசட்டுப் புன்சிரிப்போடு கேட்டாள்.

‘‘ஏன் தெரியாமே? அதை லகுவாக்காட்டி, ஏன்னு கேளுங்க. ஐயா செய்யற ஒவகாரத்துக்கு, நாங்க இதுகூடச் செய்யக்கூடாதா?’’

“லகுவாக ஒருமாதம் பிடிக்குமா?” என்று சந்தேகத்துடன் அவள் கேட்டாள்.

“என்னத்துக்குங்க? பத்து நாளுலே சரியாக்கிட மாட்டேன்! அப்புறம் ஒரு பத்து நாளைக்கு நல்ல ஊட்டம் கொடுத்தா, கோயிலு காளையாட்டம் ஆயிடாது?”

“அப்படியானால், எங்க அம்மா வீட்டுக்கு ஒரு மாதம் பொறுத்துப் போறேனே,” என்றாள் தாயம்மாள், தன் புருஷனைப் பார்த்து. “நான் போவுறதுக்குள்ளே அதுக்குச் சுகமாயிட்டால், எனக்குக் கவலையில்லாமல் இருக்கும். ஊம், நீங்க ரெண்டு பேரும் எங்கள் வீட்டுலேயே இருந்திடுங்களேன். அதுலே உங்களுக்கென்ன கஷ்டம்?”

“கஷ்டம் ஒண்ணும் இல்லீங்க. ஆனா, உங்களுக்கு என்னாத்துக்குங்க தொந்தரவு? நாங்க ஒங்களுக்கு ஒண்ணும் செய்யாட்டியும், கஷ்டத்தை வேறே கொடுக்கறதா? அது நாயமல்ல அம்மா. ஒங்க மாட்டைப் பத்தி நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க. அதைக் கவனிக்கிறதைவிட எங்களுக்கு என்னா வேலை இருக்குது? இங்கே என்ன, எரு அடிக்கணுமா? தண்ணி எறைக்கணுமா? நாத்து நடணுமா? எதோ கொஞ்சம் சோத்தைப் பொங்கித் தின்னுட்டு, ஒரு கால்நாளி ஒங்க மாட்டுக்கு மருந்து போட்டுட்டு, பொளுதினிக்கும் நாங்க கையைக் கட்டிக்கிட்டு ஒக்காந்திருக்கவேண்டியது தானே? ஐயா சொல்றாரு; கேசு எடுக்க இன்னும் ஒரு மாதம் ஆகுமின்னு, அதுவரையிலும் நாங்க எப்படி பொளுதைப் போக்குறது? செக்கு இளுக்குற மாடு எப்பவும் இளுத்துக்கிட்டுத்தான் இருக்கணும் அம்மா, நான் ஒரு நாளெல்லாம் பாடுபடறவன்; இப்படிச் சும்மாத் தின்னிட்டுத் தின்னிட்டு உக்காந்திருந்தா, உடம்புக்கல்ல வந்திடும்!” என்று நடித்தான் மதுரை. வீரப்பனுக்குச் சிரிப்புப் பொறுக்கமுடியவில்லை. வெகு கஷ்டத்துடன் உதட்டைக் கடித்துக்கொண்டு, சிரிக்காமல் சமாளித்துக் கொண்டான்.

“இப்போ, அந்தப் பேச்செல்லாம் எதுக்கு? நீங்கள் எங்கள் வீட்டுலே தங்கினால், எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. தலை யிலேயா கட்டிக்கிட்டுப்

போறோம்? அரைப்படி வேகுற இடத்துலே இன்னொரு அரைப்படி வேகப்போகுது. அவ்வளவுதானே? எங்க வீட்டுக்காரருக்கோ, வரவர மறதி சாஸ்தியாய்ப் போச்சு. அவர் இந்த வேலையெல்லாம் விட்டு நாலு அஞ்சு வருஷமாச்சு. ஏதோ, உங்க புண்ணியத்துலே சாப்பாட்டுக்கு இருக்குது. இன்னும் ஓடி ஓடிச் சம்பாதிச்சு எங்களுக்கு என்ன ஆவணும்? குழந்தையா குட்டியா? பழகினவங்களாச்சேன்னிட்டு, உங்க காரியத்துலே அவர் தலையிட்டுக்கறாரு. நீங்க பக்கத்துலே இருந்து அடிக்கடி தூண்டு கோல் போட்டாத்தான், உங்க காரியம் முடியும். நானும் ஞாபகப் படுத்திக் கொண்டுதான் இருப்பேன். இருந்தாலும், நீங்கள் இருக் கிறாப்போல ஆகுமா? அதுக்காவத்தான், நான் உங்களை இங்கேயே தங்கச் சொல்றேன்,'' என்றாள் தாயம்மாள், வெகு அக்கறையுடன்.

''ஓகோ! அப்படியா! கண்டுக்கிட்டேன், கண்டுக்கிட்டேன். தாயே, நீங்க எது சொன்னாலும் நாங்க கேக்கறோம். ஆண்டவன் புண்ணியத்துலே, வந்த காரியம் எங்களுக்குக் கைகூடினாப் போதும், தாயே. வீரப்பா, இவ்வளவு பிரியமா நமக்கு யாரு சொல்லப்போறாங்க!'' என்று மதுரை சொல்லி, யாருக்கும் தெரியாமல் வீரப்பனுக்குக் கண்ணடித்தான்.

## 19. விசாரணைக்குத் தயாரித்தல்

ஒரு வாரம் கழிந்தது; இரண்டும் சென்றன. அப்பொழுதும் விசாரணைத் தேதி நிச்சயப்படவில்லை. சுப்பையா பிள்ளையின் அபிப்பிராயத்தில், வேலனுடைய கேசு சீக்கிரத்திலே முடிந்து விடும்போல் இருந்தது. ஏனெனில், விசாரிப்பதற்குச் சாக்ஷிகள் மிகக் குறைவு. இருந்தபோதிலும், வேலனுக்கு உத்தேசமாய் நியமிக்கப்படக்கூடிய வக்கீல்களில் தனக்குத் தெரிந்தவர்களைப் பார்த்து, அவர்களிடம் அவன் வேலனின் கதையெல்லாம் சொல்லிவந்தான். ஒருநாள் அவன் மதுரையையும் வீரப்பனையும், வேலனைக் கண்டு பேசுவதற்காக ஜெயிலுக்கும் அழைத்துக் கொண்டு போனான். வேலன் அடையாளமே தெரியாதபடி மாறிவிட்டான். அவன், ஒருமாதப் பட்டினி கிடந்தவன்போல் காணப்பட்டான். அவன் முதல் கேள்வி, அவன் 'அப்பா'வைக் குறித்துத்தான். அவனுக்கு உடம்பில் யாதொரு கோளாறும் இல்லையென்றும், அவன் படும் வியாகூலமெல்லாம் வெங்கடாசலத்தைப் பற்றியே என்றும், வீரப்பனுக்கும் மதுரைக்கும் நன்றாய் விளங்கின.

"ஏ, மாமா! எதுநாச்சியும் கன்னாப்பின்னான்னு ஆயிட்டா, எங்கப்பாரைக் கை உடாதே!" என்று அவன், வீரப்பனுடைய மோவாய்க்கட்டையைப் பிடித்துக்கொண்டு 'ஹோ'வென்று கதறி அழுதான்.

"அட பயித்தியக்காரா! உனக்கு உளுமை தெரியாது. இன்னும் பத்துப் பதனஞ்சு நாளுலே, நாமெல்லாம் சேந்து ஊருக்குப் போவவேண்டியதுதானே? வேணுங்கற எற்பாடுங்களெல்லாம் பண்ணியாச்சுதே. ஈரங்கி எப்போ வருதுான்னிட்டு அல்ல காத்துக்கிட்டு இருக்கோம். வக்கீலய்யா ஒனக்குச் சொல்லிவச்சாப்போல நீ சொல்லணும். அத்தோடு காரியம் முடிஞ்சுது. உன் விடுதலையைப் பத்தி யாருக்கும் சந்தேகமில்லை. அந்த உளுமையை வெங்கடாசலங்கூட கண்டுகிட்டு, எவ்வளவோ தெம்பா இருக்கான். நீ என்னடான்னா, வீணாக் கவலைப்பட்டுக்கிட்டு இருக்கே. இந்த அம்மாசி போச்சு; அடுத்த அம்மாசிக்குள்ளே நாமெல்லாம் ஊருக்குப் போயிடமாட்டோம்? சந்தேகமில்லை; என் பேச்சை நம்பு, வேலு."

மதுரையின் சொற்கள் வீண்போகவில்லை. வேலனுக்குத் தைரியம் ஏற்பட்டதற்கு அறிகுறியாக, அவன் முகத்தில் ஒரு வித ஒளி பிறந்தது. அப்பொழுது, வீரப்பன் சற்றும் முன்பின் யோசியாமல், "நீ செஞ்சுது நெசந்தனா?" என்று கேட்டான். மதுரைக்கு வந்த கோபத்திற்கு அளவில்லை. அவன் பல்லைக் கடித்து, வீரப்பனை மென்று தின்று விடுபவன் போலப் பார்த்தான். வேலன் ஏதோ சொல்ல வாயை எடுத்தான். அதற்குள் ஜெயில் சேவகன், சூபரிண்டெண்டு வருவதாகச் சொல்லி, வேலனை உள்ளே இழுத்துக்கொண்டு போனான்.

அன்றிரவு மதுரை, வீரப்பன், சுப்பையாபிள்ளை மூவருமாகச் சேர்ந்து, வெங்கடாசலத்திற்கு உற்சாகத்தை உண்டுபண்ணும் படியான ஒரு கடிதத்தை எழுத யோசித்தார்கள். வீரப்பன் படிப்பு, அவன் கையெழுத்துப் போடக் கற்றுக்கொண்டதோடு நின்று விட்டது. மதுரை, தட்டுத்தடுமாறி ஒருவாறு படிப்பான். ஆனால், எழுதுவது அவனுக்கு அசாத்தியமென்றே சொல்லலாம். அப்படிக் கஷ்டப்பட்டு அவன் எழுதினாலும், அவன் எழுத்தைப் பிறர் வாசிக்க முடியாது. கடைசியாக அந்தப் பாரம், சுப்பையா பிள்ளை மேல் போடப்பட்டது. கடிதத்தில், சமாசாரத்தோடு சமாசாரமாய், மதுரை தாயம்மாளையும் புகழ்ந்து எழுதச் சொன்னான்.

"நல்லாயிருக்குது! என்பேரை ஏன் இழுக்கிறீங்க?" என்றாள் தாயம்மாள், புன்முறுவலுடன். பசுவுக்கு வியாதி நீங்க நீங்க, அம்மாளுக்கும் அவர்களிடம் பக்ஷம் அதிகப்பட்டுக்கொண்டு வந்தது.

"தாயே, ஒங்களைப் பத்தி வெங்கடாசலத்துக்கு நான் எளுதித் தான் தீருவேன்; இது எங்க சங்கதி; நீங்க தலையிட்டுக்காதீங்க. இந்தப் பட்டணத்துலே கூடப் பொறந்தவங்களாட்டம், இவ்வளவு ஒவகாரம் எங்களுக்கு யாரு பண்ணுவாங்க? நான் இது ஒங்க எதுருக்க சொல்ற பேச்சு இல்லே," என்றான் மதுரை. அதன்மேல், சுப்பையா பிள்ளை அவன் வார்த்தைகளைச் சிறிது மாற்றி எழுதினார். மதுரைக்கு உண்மையிலேயே தாயம்மாளிடம் அதிகக் கௌரவம் ஏற்பட்டுவிட்டது. ஏனெனில், அந்த அம்மாள் மிகவும் தாராளபுத்தியுடையவள். அவளிடத்திலிருந்த கெட்ட குணம் ஒன்றே; அதாவது,

தன்னைக் கேளாது தன் புருஷன் யாதொரு காரியமும் செய்யக்கூடாதென்பதுதான்.

ஐந்து, ஆறு தினங்களுக்கெல்லாம், விசாரணைத் தேதி வெளியிடப்பட்டது. வேலனுக்காக நியமிக்கப்பட்ட வக்கீல், சிறு வயதுள்ளவராயிருந்த போதிலும், அதற்குள்ளே நல்ல கியாதியை அடைந்திருந்தார். ஆனால், சுப்பையா பிள்ளை அவரை அறிய மாட்டார். ஆகையினால், அவருடைய சிநேகிதர் ஒருவர் மூலமாகச் சுப்பையாபிள்ளை அவருடைய அறிமுகத்தைச் செய்து கொண்டார். பிறகு, வேலனுடைய விருத்தாந்தங்கள் அனைத்தையும் அவர் எடுத்துச் சொன்னார். கடைசியாக, தயைசெய்து தம் சொந்த விஷயம்போல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அப்பொழுது அந்த வக்கீல் சிரித்தார்.

“இவ்வளவு அனுபவப்பட்டவர்கூட இப்படிப் பேசுகிறீரே! என் சமாசாரம் உமக்குத் தெரியாது. ஒரு வேலை ஒப்புக்கொண்டு விட்டால், நான் வேறு இல்லே, என் கக்ஷிக்காரன் வேறு இல்லே. நாங்கள் ரெண்டுபேரும் ஒண்ணுதான்; இது வக்கீல் பிழைப்பின் தர்மம். எனக்கு யோசனைகளெல்லாம், கேஸை ஒப்புக்கொள்வதற்கு முன்தான்; அதற்கு அப்புறம் இல்லே. ஆகையினாலே, நீர் ஒன்று கவலைப்படாதேயும். நான் ரிகார்டுகளைப் பார்த்த வரையில், உம்ம ஆளுக்கு ஒரு பயமும் இல்லை.”

“நமக்கு விரோதமாய் ஒரு சாக்ஷிதான் இருக்கான். அதாவது, வாய்க்காலுலே ரத்தத்துணியை அலம்பியதைப் பார்த்தவன். அவனையும் வழிக்குக் கொண்டுவரப் பார்த்துக்கொண்டு இருக்கோம்.”

“அவனைப்பத்தி நீங்கள் ஒண்ணும் கவலைப்படாதேயுங்கள். அவன் சாக்ஷி பலிக்காமல் நான் பார்த்துக்கறேன். உங்க ஆள் தப்பிச்சுப்பான், போங்கள். ஆனால், நான் அவனைப் பார்த்துக் கொஞ்சம் பேசவேணும். என்னை நம்பி நிஜத்தைச் சொல்வானோ இல் லையோ?”

“அதுலே சந்தேகமென்ன, ஸார்! அவன் ரொம்ப நல்ல பையன். அதுவும் தவிர, அவன் சொந்தக்காரர்கள் இரண்டு பேர் என் வீட்டில்தான் இறங்கியிருக்காங்கள். அவங்களையும் வேணு மின்னா, அவனுக்கு நல்ல பேச்சுச் சொல்ல அழைத்துக்கொண்டு வறேன்.”

“ஓ, ரொம்ப ஸௌகரியமாப் போச்சு. அப்போ, நாளைக்குச் சாயந்திரம் சரியாய் நாலுமணிக்கு, அவங்களையும் அழைச்சுக் கிண்டு, இங்கே வந்துடுங்கள் — அவ்வளவுதானே? வேறே ஒண்ணு மில்லையே? சரி, அப்போ போய்வாரேளா?” என்று சொல்லிக் கொண்டே, அவர் ஒரு கட்டை எடுத்துப் படிக்க ஆரம்பித்தார். சுப்பையா பிள்ளை ஓசை செய்யாமல் வெளியே சென்றார்.

‘ஈரங்கி’த் தேதியை வெங்கடாசலத்திற்குத் தெரியப்படுத்துவதா இல்லையா என்பதைப்பற்றி, அவர்களுக்குள் ஒரு தர்க்கம் வந்து விட்டது. வீரப்பனுக்கு, தெரிவிக்க இஷ்டமில்லை. அவன், “வெங்கடாசலம் பயந்து செத்துப்போவான்,” என்றான். ஆனால், சுப்பையா பிள்ளை சமாசாரத்தை மறைத்து வைப்பது தப்பென்றும், வெங்கடாசலத்திற்கு மனசு நோவாதபடி சாதுரியமாக ஒரு கடிதம் கட்டாயம் எழுதவேண்டுமென்றும் தீர்மானமாகச் சொன்னார். பிறகு, அக்கடிதத்தை எழுதும் பொறுப்பையும் அவரே ஏற்றுக் கொண்டார்.

மறுநாள் சாயங்காலம் வக்கீல், மதுரையையும் வீரப்பனையும் அழைத்துக்கொண்டு, ஜெயிலுக்குள் சென்றார். போகும் வழியிலே, அவர் வேலனோடு பேசும்பொழுது அவர்கள் குறுக்கிடக் கூடாதென்று அவர் சொல்லிவிட்டார். ஏனெனில், ஆளுக்கொன்று சொன்னால், வேலனுக்குப் புத்திக்கலக்கம் ஏற்படுமென்பதுதான் அவர் கருத்து. வக்கீல் இவ்வாறு எச்சரிக்கை செய்ததற்கு, மதுரை மிகவும் சந்தோஷப்பட்டான். இல்லாவிடில், மடத்தனமாக வீரப்பன், “நெசமாச் செஞ்சயா? பொய்யாச் செஞ்சயா?” என்று கேள்விகளைக் கேட்க ஆரம்பிப்பான்.

வக்கீல், வேலனுக்குச் சில கேள்விகளைப் போட்டு, அவைகளுக்கு எவ்வாறு பதில் சொல்லவேண்டுமென்பதைத் திருப்பித் திருப்பிப் போதித்தார். கடைசியில், அவன் விஷயங்களை அறிந்து கொண்டுவிட்டானென்று அவருக்குப் புலப்பட்ட பிறகு, அவர் கேட்டார்: “எங்கே, நீ மறக்காமலிருக்கவேண்டிய முக்கியமான,‘பாயிண்டு’களைச் சொல்லு, பார்ப்போம்.”

“நான் வாய்க்காலுக்கு வந்தது ஒண்ணு, அப்பாலே என் இடுப்புலே கட்டியிருந்த துணிபோனது ஒண்ணு,” என்றான் வேலன்.

“சரி, அதுக்கு உன் ஜவாபு என்ன?”

“வளக்கம்போல, காலங்காத்தாலே நான் வாய்க்கால் கரையிலே பல்லுத் தேய்ச்சுக்கிட்டு இருந்தேன். அப்போ மல்லன், தாதனையும் இன்னும் சில பேரையும் ஏவிவிட்டு, என்னை அடிக்கச் சொன்னான். அவுங்க என்னைச் சேத்துலே பெரட்டி, என் வேட்டித் துணியெல்லாம் கிளிச்சு எறிஞ்சு, என் வேட்டியெல்லாம் ரத்தமாயிருந்திச்சு; நான்தான் மாயாண்டியைக் கொன்னுட்டேனின்னு ஒரு கதையையும் கட்டிட்டாங்க. இது அவ்வளவும் மல்லன் செஞ்ச வேலை. சாமி, நான் வள்ளியை இளுத்துக்கிட்டுப் போயிடுவேன்னிட்டு அவனுக்கு எப்பவும் பயம். அதுக்காவ, கொலைக் கேசுலே மாட்டிவச்சு, என்னைத் தொலைச்சிடணு மின்னிட்டு, இப்படிச் செய்திட்டானுங்க. சாமிக்குப் பொதுவா, நான் ஒரு பாவமும் அறியேஞ்சாமி” என்றான் வேலன்.

“ரொம்ப சரி. அடுத்த வாரம் நீ ஊருக்கும் போகலாம், போ,” என்றார் வக்கீல், புன்முறுவலுடன்.

“ஆனா, மெய்யாலும் சாமி, நான் அந்த வேலை செஞ்சாப் போல எனக்குப் பொலப்படவில்லையே. நான் அருவாளை எடுத்துக்கிட்டு ஊட்டை விட்டுப் பொறப்பட்டது என்னமோ நெசந்தான். வளியிலே ஆறுமுக மாமன், நான் வாணாம் வாணாமின்னு சொல்லிக்கிட்டே இருக்கச்சியே, என்னைக் கள்ளுக்கடைக்கு இளுத்துக்கிட்டுப் போயி கள்ளை ஊத்திடுச்சு. குடிச்சதுக்கு அப்புறம் என்ன நடந்திச்சு இன்னே எனக்கு ஞாவகம் இல்லே, சாமி;

போதையிலும் எதுநாச்சும் செஞ்சா, அப்பாலே தெரியாதோ மாமா?'' என்று அவன் மதுரையைப் பார்த்து வெகு வருத்தத்தோடு கேட்டான்.

வக்கீல், மதுரையைப் பேசவேண்டாமென்று ஜாடை காட்டினார்.

''நீ ஒண்ணும் செய்யவில்லையின்னுதான் நான் சொல்றேனே. மடத்தனமாய்ப் பேசாதே. உனக்குச் சம்பந்தமில்லாத பேச்சு, உனக்கு எதுக்கு? இப்படி உளற ஆரம்பித்தால், நீயும் சாவாய்; உன் அப்பனையும் கொல்லுவாய். உன் அப்பன் பிழைத்திருக்க வேண்டுமென்று உனக்கு இருந்தால், நான் சொல்றபடி கேள். கிளிப்பிள்ளைபோல், நான் சொன்னதை நீ திருப்பிச் சொல்ல வேண்டியதுதான் — தெரிந்ததா? மறுபடியும் சொல்லித் தரட்டுமா?'' என்று வக்கீல் கேட்டார்.

''வாணாம் சாமி. எனக்கு நல்ல ஞாவகம் இருக்குது. உங்க பேச்சுக்கு மீறி நடக்கமாட்டேனுங்க,'' என்று கைகட்டி, மிகவும் வணக்கமாக வேலன் சொன்னான். வக்கீல், மதுரையையும் வீரப்பனையும் அழைத்துக்கொண்டு வெளியே சென்றார்.

விசாரணைக்கு முதல் நாள், பிற்பகல் சுமார் மூன்று மணிக்கு, ஆறுமுகமும் வேலனுடைய தோழர்களில் சிலரும், வெயிலில் வியர்க்க வியர்க்கச் சுப்பையாபிள்ளை வீட்டிற்கு வந்தார்கள். அவர்களுடைய வரவு எல்லோருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தது.

''நாங்க, இங்கே இருக்கோமின்னு ஒங்களுக்கு எப்படித் தெரிஞ்சிச்சு!'' என்றான் வீரப்பன், வியப்புடன்.

''என்ன கேள்வி கேக்கறேடா! வெங்கடாசலத்துக்கு வர கடுதாசையெல்லாம் நான் பார்த்துக்கிட்டுதானே இருக்கேன்? எனக்கு உங்க விலாசம் தெரியாமெ போயிடுமா?''

“அது போவுது, வெங்கடாசலம் சொகமாயிருக்கானல்ல?” என்றான் மதுரை.

“ஒரு மாதிரிதான் இருக்கான். ஈரங்கித் தேதி நெருங்க நெருங்கக் கவலை அதிகமாவுது. ஆவாதா பின்னே? நாங்க எவ்வளவோ சொல்லிட்டுத்தான் வந்திருக்கோம். விடுதலையின்னு தீர்ப்பு சொல்லிட்டாக்க, அன்னிக்கு ராவே அவனுக்குச் சேதி எட்டிடாது! நம்ம பையனுக முப்பத்தாறு கல்லும் ஓடியல்ல சங்கதி தெரிவிப்பாங்க,” என்று தன்னுடன் வந்த வாலிபர்களைப் பார்த்து ஆறுமுகம் சொன்னான்.

“யாரப்பா இப்படி அலைஞ்சு திரியுவாங்க! ஒரு நல்ல காரியத்துக்குப் பாடுபட்டா, அது வீணாப் போவாது, ஆறுமுகம்,” என்றான் மதுரை.

“அது கடக்குது; இந்தக் காலத்துலே நல்லதையும் பொல்லாததையும் எவன் கண்டான், இருந்தாலும், எனக்கு ஒரு சந்தேகம்; நான் கள்ளை ஊத்தினதாலேதான், அவன் துணிஞ்சிட்டானோ என்னமோ! அப்படியிருந்திச்சின்னா, நான்தானே அவனை வம்புலே இளுத்துப் போட்டாப்போல ஆவுது! அவனைத் தண்டிச்சிம்புட்டா...? அய்யோ சாமி...!”

“ஊம்... அதெல்லாம் ஒண்ணும் ஆவாதப்பா,” என்று மதுரை சமாதானமாகச் சொன்னான்.

“ஆறுமுகம் மாமனுக்கு எங்குமில்லாத யோசனை வந்திடுது. தான்தான் மாயாண்டியைக் கொன்னுட்டாப்போல அதுக்கு எண்ணம்! இந்த எளவுக்கு என்னா பண்றது? — அது போவுது, நாங்க வந்த சங்கதி வேறே, மாமா,” என்று ஓர் இளைஞன் மதுரையைப் பார்த்துச் சொன்னான்.

“வேலுக்கு விரோதமா சாச்சி சொல்றதில்லையின்னு, தாதன் எங்களுக்குச் சத்தியம் பண்ணிக் கொடுத்திருக்கான். அவன் கோர்ட்டிலே பேச்சுத் தவர்றானான்னிட்டுப் பார்க்க வந்திருக்கோம் நாங்க. அவன் பித்தலாட்டம் கித்தலாட்டம் செஞ்சானோ, தொலஞ்சான். (மதுரை சிரித்தான்;

அவ்வாலிபனுக்கும் சிரிப்புத் தட்டிற்று.) நெசமாலும் மாமா, ஒரு கை பாக்கிறதுான்னே வச்சிட்டோம். நீ என்னமோ ரெண்டு மூணு சாச்சிதானின்னு சொன்னே, நம்ம கிராமத்திலே இருந்தே எட்டுப் பேரு வந்திருக்காங்களே.''

''அவங்கெல்லாம் ஏதோடு கணக்கு? தாதன் ஒருத்தனாலே தான், கொஞ்சம் வம்பு வரலாம்,'' என்றான் மதுரை.

''அவன் வாயைத் தெறக்கமாட்டான்; நீ பயப்படாதே, மாமா,'' என்றான் முன் பேசின வாலிபன்.

''மல்லன், கச்சிக்காரங்கேளாடுதான் ஏறங்கி இருக்கான். அது, அவங்கிட்ட துட்டுப் பிடுங்கத்தான்; வேறொண்ணுக்கு மில்லை.''

''சரி, உங்க சாப்பாடு சங்கதி என்னா? பக்கத்துலே ஓட்டலுலே ஏற்பாடு செய்யலாமா?'' என்று மதுரை விசாரித்தான்.

''நீ ஒரு பக்கம்! நம்ப ராஜா சத்திரம் எங்கே போச்சு? நான் உன்கிட்ட சொல்ல மறந்திட்டேன். எங்களோடுகூட இன்னும் ரொம்ப சனம் வந்திருக்குது. அப்பா, அங்கே கண்ணாலம்போல, சாப்பாட்டுக்குப் பெரிய ஏற்பாடுங்கல்ல ஆயிக்கிட்டு இருக்குது. விருந்து சாப்பாடு வேணுமின்னா, நீங்க ரெண்டுபேருங்கூட எங்களோடு வாங்க,'' என்று ஆறுமுகம் அழைத்தான்.

''அய்யோ! நாங்க எப்படி வாரதப்பா? ஐயாவை உட்டு ஒரு நிமிஷங்கூட அப்பாலே இப்பாலே போகமுடியாது. அவரு இல் லாட்டி, நம்மாலே என்ன முடியும்? இப்பக்கூட, நம்ப சங்கதிக்காவத்தான் போயிருக்காரு,'' என்றான் மதுரை.

''அட, நான் சும்மநாச்சிக்கும் சொன்னேன். தின்னுட்டுக் கொம்மாளம் அடிக்கறதுக்கா, நாம இங்கே வந்திருக்கோம்? நீ மவராசனா வேலையைப் பாரு. அப்பா, எங்க பேச்சையே நீ மறந்திடு. எனக்குக் கோர்ட்டுக்கு வளி

தெரியும். நான் எல்லாரையும் அளச்சுக்கிட்டு வந்திடறேன்,'' என்றான் ஆறுமுகம்.

‘‘நெய்யி, காய்கறியை மறந்திட்டயே, மாமா,'' என்றான் கோணிமூட்டை ஒன்றை வைத்துக்கொண்டிருந்த ஒரு பையன்.

‘‘அட, மறந்தே போனேண்டா, மனசு ஒண்ணும் சரியா இல்லையப்பா. மதுரே, நம்மூருலேயிருந்து பிள்ளைக்காவக் கொஞ்சம், நெய்யும் காய்கறியும் கொண்ணாந்திருக்கோம் அப்பா.''

‘‘ஓ! நீ யோசனைக்காரன்தான், ஆறுமுகம். அம்மா ரொம்ப சந்தோசப்படுவாங்க,'' என்று சொல்லிக்கொண்டு, அவன் ஆறுமுகம் முதலானவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு போனான். தாயம்மாளுக்குச் சந்தோஷம் பொறுக்க முடியவில்லை.

‘‘ஏன் இந்தக் கஷ்டம் உங்களுக்கு? அவ்வளவு தூரத்திலிருந்து இதையெல்லாம் சுமந்துகொண்டு வரணுமா? உங்க ஊரு ஜனங்க எல்லாம் ஒரே மாதிரியிருக்காங்களே. நீங்க செய்வதைப் பார்த்தால், நான் உங்க ஊரைக் கட்டாயம் வந்து பார்க்கணும்போலிருக்கே.''

‘‘நீங்க வரணுமே, அம்மா! நாங்க என்னமோ ஏளைப்பட்டவங்கதான். ஆனா, வஞ்சனையில்லாதே நாங்க திங்கறதை உங்களுக்கு வைப்போம்,'' என்றான் ஆறுமுகம்.

‘‘பணத்தாலேயே எல்லாம் ஆயிடுதா? இந்தமாதிரி கத்திரிப் பிஞ்சுங்க, பவுன் குடுத்தாக்கூட இந்த ஊருலே அம்புடாதே. ஒ, எவ்வளவு தினுசுங்க? நீங்க ரொம்ப கஷ்டப்பட்டுச் சேகரிச்சிருக்க வேணும்.''

‘‘இது ஒரு கஷ்டமா? தாயே, நீங்க பண்ணுற ஒவகாரத்துக்கு, நாங்க என்னதான் செய்யக்கூடாது? இப்போ ஐயா ஊட்டுலே இல்லையேன்னிட்டு எனக்கு ரொம்ப வருத்தமா இருக்குது. அவ்வளவு தங்கமான மனிசரை நேருலே

பாத்து நான் கும்பிடவாணாமா? — ஒண்ணு செய்றேன்; சாப்பாடு ஆன பொறவு மறுவிடியும் வாறேன்,'' என்றான் ஆறுமுகம்.

''வாணாம், ஆறுமுகம். எல்லாம் அலுத்து இருக்கீங்க. சாப்பிட்டு நல்லாப் படுத்துத் தூங்குங்க. நீ முந்தி சொன்னாப் போலவே, நாளைக்கு நாம் எல்லாம் கோட்டுலே கலந்துக்கலாம்,'' என்றான் மதுரை.

அதன்மேல், ஆறுமுகமும் அவனோடு வந்த வாலிபர்களும் விடைபெற்றுக்கொண்டு ராஜா சத்திரத்துக்குச் சென்றனர்.

## 20. நியாயப்போக்கு

மறுதினம் காலை ஒன்பது மணிக்கே, வீரமங்கலத்துக் கிராம வாசிகள் ஜில்லா கோர்ட்டைச் சுற்றியிருந்த மரங்களின் அடியில் கும்பல் கும்பலாகக் கூடினார்கள். அவர்கள் போடும் கூச்சலால் அவ்விடம் ஒரு சந்தைக்கு ஒப்பாயிருந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம், கோர்ட்டுச் சேவகர்கள் வந்தார்கள். அவர்களைக் கண்டதும், குடியானவர்களின் குரல் சற்றுத் தாழ்ந்தது.

நியாயஸ்தலத்தின் கதவுகள் திறக்கப்பட்டவுடனே சுப்பையா பிள்ளை, மதுரை முதலியவர்களை உள்ளே அழைத்துக்கொண்டு போய், நல்ல இடத்தைத் தேடி அவர்களை உட்கார்த்தி வைத்தார். மல்லனும் அவன் கட்சிக்காரர்களும், அகப்பட்ட இடத்தில் உட்கார்ந்து கொண்டார்கள். வர வர, நியாயஸ்தலத்தில் வக்கீல்களின் நடமாட்டம் அதிகரித்தது. மணி பத்தரை அடித்ததும், நியாயாதிபதி பிரவேசித்தார். உடனே அமளி அடங்கிற்று. எல்லோரும் எழுந்து, நியாயாதிபதி ஆசனத்தில் அமர்ந்த பிறகு உட்கார்ந்தார்கள்.

கோர்ட்டு உத்தியோகஸ்தர், நியாயாதிபதியின் முன் சில தஸ்தாவேஜ÷களை வைத்துக்கொண்டிருந்த பொழுது, இரண்டு போலீஸார்கள் வேலனை உள்ளே இழுத்துக்கொண்டு வந்தனர். வேலனைப் பார்த்தமட்டில், அக்கிராமவாசிகள் அனைவரும், பேசிக்கொண்டது போல ஒரே காலத்தில் பெருமூச்சு விட்டார்கள். நியாயாதிபதி, அவர்கள் பக்கம் கடுத்துப் பார்த்துவிட்டுத் தம் முன்னிருந்த காகிதங்களைப் பார்வையிட்டுக்கொண்டே போனார்.

ஆனால் வேலனுடைய தோழர்கள், அவனுடைய பரிதாப மான நிலைமையைப் பார்த்து மனமுருகி, தாங்கள் நியாய ஸ்தலத்தில் இருப்பதையும் மறந்து, ஒருவருக்கொருவர் பேசத் தொடங்கினார்கள். சுப்பையா பிள்ளை அவர்களுக்கு எச்சரிக்கை செய்ய முயலுமுன் கோர்ட்டுச் சேவகன், அவர்கள் மௌனமாய் உட்கார்ந்திராவிடில் வெளியே தள்ளப்படுவார்கள் என்று

மிரட்டினான். அதன்மேல், அப்பேதைக் குடியானவர்கள் பெட்டியிலடைத்த பாம்பு போல் அடங்கிவிட்டனர்.

வேலன் கூண்டில் நிறுத்தப்பட்டான். மனம் நொந்து, உடல் மெலிந்து, கண் மூடிக் காட்டில் விடப்பட்டவன்போல அவன் திகைத்து நின்றான். அவனைப் பார்க்க மிகவும் பரிதாபமாயிருந்தது. ஒரு குடியானவனுக்குத் தன்னை அறியாமலே அழுகை வந்துவிட்டது. சத்தம் செய்யாமல் அவன் கண்ணீர் சொரிந்தான். தன்னால் இயன்ற மட்டும் முயன்றும், அதை அடக்க முடியவில்லை.

மாயாண்டியின் பிணத்தை அறுத்துப் பரிசோதித்த டாக்டர், முதல் சாக்ஷியாக அழைக்கப்பட்டார். அவர், மாயாண்டி இறந்தது உண்மையென்றும், எவ்விதமான காயங்களால் இறந்தான் என்பதையும் சொல்லித் தம் வாக்குமூலத்தைச் சீக்கிரமாக முடித்தார். இரண்டாவது சாக்ஷி, மல்லன். அவனைச் சர்க்கார் வக்கீல் வெகுநேரம் விசாரித்தார். அவன், வார்த்தைக்கு வார்த்தை, தன்னையும் தன் தகப்பனையும் வேலன் குத்திக் கொன்று விடுவேனென்று பயமுறுத்தி வந்ததாகச் சொல்லிக்கொண்டே வந்தான். கடைசியாக, கொலை செய்வதற்குமுன் அன்றிரவு, வேலன் வள்ளி வீட்டிற்குச் சென்று, அவன் மல்லனைக் கட்டிக் கொண்டால் அவளையும் வெட்டி விடுவதாகச் சபதம் செய்ததாக மல்லன் சொன்னான். இதைக் கேட்டதும் வேலனுக்குப் பேராவேசம் வந்துவிட்டது.

“ஐயோ! அநியாயப் பொய்யங்க!” என்று நியாயாஸ்தலம் அதிரும்படி வேலன் உரக்கக் கூவினான்.

“இடையில் பேசாதே!” என்று ஜட்ஜு கடுமையாகக் கண்டித்து, வேலனை ஏற இறங்கப் பார்த்தார். அப்பொழுது, அவருடைய அபிப்பிராயமும் சற்று மாறுதல் அடைந்தாற்போல் தோன்றிற்று. பிறகு, “உன்முறை வரும்பொழுது, நீ சொல்ல விரும்புவதை யெல்லாம் சொல்லலாம்” என்று நிதானமாகச் சொன்னார்.

அடுத்த சாக்ஷி, போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர். அவர் கதையை ஜோடித்து, ஆதியிலிருத்து அந்தம் வரையில் வெகு நேர்த்தியாகச் சொன்னார். தாதன் செய்த உதவியை, அவர் மெச்சிப் பேசினார். அவன் இல்லாவிடில் இக்கொலையே வெளிப்பட்டு இராதென்று அவர் உறுதியாகச் சொன்னார். அவர் பின் சாக்ஷி சொன்ன போலீஸ் சேவகனும் அவருடைய வாக்குமூலத்தையே ஸ்திரப்படுத்தினான்.

பிறகு, தாதன் சாக்ஷிக் கூண்டிற்கு வந்து சேர்ந்தான். அவன் ஏதோ வேதனைப்படுவதுபோல் தோன்றினான். கைகளைப் பிசைந்துகொண்டு, அவன் இப்புறமும் அப்புறமும் விழித்து விழித்துப் பார்த்தான். கொலையைப் பற்றி என்ன தெரியுமென்று அவனைக் கேட்டபொழுது, அவன் விவரமாக ஒன்றும் சொல்லவில்லை. அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தை வருவதற்குப் பத்து கேள்விகள் போடவேண்டியிருந்தது. அவன் பார்வை, அடிக்கடி தன் கிராமத்தார் உட்கார்ந்திருக்கும் இடத்தையே நோக்கிச் சென்றது. இதை நன்றாய்க் கவனித்து வந்த நியாயாதிபதி அவனைக் கோபத்தோடு கண்டித்தார்.

‘‘இதோ பார், நீ உண்மையை மறைத்து வைக்கிறாய் பொய் சொல்வதற்குத் தண்டனை என்னவென்று உனக்குத் தெரியுமா?’’

‘‘தெரியாதுங்க !’’

‘‘கடுங்காவல்.’’

‘‘ஐயோ !’’ என்றான் தாதன், தூக்கிவாரிப்போட்டுக் கொண்டு. ‘‘நான் உளுமையைச் சொல்லிடுறேனுங்க?’’ என்று கெஞ்சினான். ஆனால் அதே சமயத்தில், அநேகர் அவனைக் கண்தெறிக்கப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல் அவனுக்குப் புலப்பட்டது. அவன் தலையை நிமிர்த்தினான். எதிரே எமன் போல் சடையன் காணப்பட்டான். அந்த முரட்டுப் பயல் எதற்கும் துணிந்தவன்; இவனை விழுங்கி விடுவதுபோல், கண் கொட்டாமல் அவன் முகத்தைப் பார்த்தான். தாதனுக்கு, தொடை நடுக்கம் எடுத்துவிட்டது. புத்தியில்லாமல் இந்த வம்பில் ஏன் அகப்பட்டுக்கொண்டோமென்று அவனுக்கு ஆய்விட்டது.

உண்மையைச் சொன்னால் மாயாண்டி கதிதான்; சந்தேகமில்லை. அந்தப் போக்கிரி சடையன், சொன்னதைச் செய்தே தீருவான். பொய்யைச் சொன்னாலோ கடுங்காவலாம்! கடுங்காவலென்றால், என்ன இமிசைப்படுத்து வார்களோ? மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல், அவன் இவ்வாறு தவித்தக்கொண்டிருக்கும் பொழுது, ஜட்ஜு திடீரென்று ஒரு கேள்வி கேட்டார். ‘‘வேலன் வேஷ்டியை ஜலத்தில் அலசிக்கொண்டிருந்தபொழுது, ரத்தக் கறைகளை நீ பார்த்தாயா?’’

‘‘ஆமாம்... ஊ... இல்லீங்க தொரையே! நாம வாளத்தாரு வெட்டுறப்போ, அந்தப் பாலு உளுந்தா, அதேமாதிரி கரை ஆவுதுங்க. நான் அதை என்னான்னு சொல்றதுங்க?’’ என்று அவன் இழுத்தான்.

ஜட்ஜுக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. ‘‘உன் அபிப்பிராயத்தை நான் கேட்கவில்லை, ஜாக்கிரதை! நீ உண்மையை ஒளித்து வைக்கிறாய். உனக்கு ஒரு தடவை எச்சரிக்கை செய்தாய் விட்டது. மறுபடியும் பொய் சொன்னால், கட்டாயம் ஜெயிலுக்கு அனுப்பிவிடுவேன், தெரிந்ததா? இப்பொழுது கேட்ட கேள்விக்குப் பதில் சொல். ‘ரத்தக் கறை போக மாட்டேன் என்குது’ என்று வேலன் உன்னிடம் சொன்னதாக, நீ போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் சொன்னதுண்டா இல்லையா?’’ என்றார்.

‘‘சொன்னேனுங்க, யசமான்; மறந்திட்டேனுங்க, யசமான்! ஒங்க காலுலே விளுந்து கும்பிடுறேனுங்க! இந்த ஒரு தரம் மன் னிச்சிடுங்க! இனுமே பொய்யே சொல்லமாட்டேனுங்க! சத்தியமா, அங்காளம்மன் அறியச்சொல்றேனுங்க!’’ என்று தாதன், கைகால்கள் பதறப் பதறக் கெஞ்சினான். இதற்குள், நியாயஸ்தலத்தின் வாசற் படி முன் ஏதோ சிறிது கலவரம் ஏற்பட்டது. முதலில், நியாயாதிபதி அதைக் கவனியாதவர் போலிருந்தார். ஆனால், இரண்டொரு நிமிஷங்களுக்கெல்லாம் இரைச்சல் அதிகமாயிற்று. நியாய ஸ்தலத்தில் இருந்தோர் அனைவரின் திருஷ்டியும், அவ்விடத்தே சென்றது. அங்கே கூடியிருந்த வீரமங்கல கிராமத்தார் எல்லோரும், ஆச்சரியம் பொறுக்கமாட்டாமல் பற்பல விதங்களாகக்

கோஷித்தனர். ஆனால் அக்கலவரத்தில், ‘சோளன்’ என்ற பெயர் மட்டும் மிகவும் அடிபட்டது.

ஓர் உயரமான இளைஞன், உள்ளே நுழைவதற்காகக் கோர்ட்டுச் சேவகனோடு வாதாடிக்கொண்டிருந்தான். அவனுடைய இளைத்த உடம்பையும் பரட்டத் தலையையும் அழுக்கடைந்த கந்தையையும் பார்த்தால், அவன் பஞ்சத்தில் அடிபட்டவன் போல் காணப்பட்டான். வர வர, அவனுக்கு ஆத்திரம் அதிகரித்தது. சேவகனை மீறிக்கொண்டு போக அவன் யத்தனித்தான்.

“அடபாவி! நான் உள்ளே போயாவணுமே! நான் ஜர்ஜி அய்யாவோடு பேசி ஆவணுமே! இல்லாட்டி, அநியாயமா ஒரு பாவமும் அறியாத பையன், அவனையல்ல கொன்னுடுவாங்க! எங்கப்பனைக் கொன்னது நான்தானின்னு தொரைகிட்டே சொல்லணும், ஐயா. நான் உளுமையைச் சொல்லப்போனா, உனக்கென்னா ஐயா வந்திச்சு? உடு ஐயா!” என்று கையை ஆட்டிக்கொண்டு அவன் கூக்குரலிட்டான்.

நியாயாதிபதி, அவனை உள்ளே விடும்படி கோர்ட்டுச் சேவகனுக்கு உத்தரவு கொடுத்தார்.

“தொரையே! நானே எங்கப்பனைக் கொன்னேனுங்க. கடவுளுக்குப் பொதுவாகச் சொல்றேனுங்க. வேலன் ஒரு பாவத்தையும் அறியான். அநியாயமாய் அவன் உயிரை எடுத்திடாதிங்க! அவனை உட்டுட்டு, என்னை என்ன ஒணுமின்னாலும் பண்ணிக்கிங்க! சுட்டாலும் சரி, தூக்குப்போட்டாலும் சரி; நான் பொளச்சுது போதுங்க. குடிவெறியிலே செஞ்சிட்டேனுங்க. அவரு என்ன தீமை செஞ்சாலும், பெத்த அப்பனைக் கொல்லலாங்களா? இப்போ, நான் கடந்து தவிக்கிறது, ஆண்டவனுக்குத்தான் தெரியுங்க, எசமான்! உசிருக்கு உசிரு வாங்கிடுங்க!” என்று சொல்லி விட்டுச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான்.

அச்சமயத்தில், நியாய ஸ்தலத்தின் மாட்சிமையும் கௌரவமும் காற்றாய்ப் பறந்தோடின. எங்கும் ஒரே பரபரப்பாயிருந்தது. ஒருவருக்கொருவர் ரகசியமாகப்

பேசத்தொடங்கினர. நியாயாதிபதி, சர்க்கார் வக்கீலோடு ஒரு நிமிஷம் கலந்து யோசித்தார். பிறகு, கண்மூடிக் கண் திறப்பதற்குள் நியாய ஸ்தலத்தில் அமைதி ஏற்பட்டுவிட்டது. வேலன் கூட்டிலிருந்து இறக்கப்பட்டான். பிறகு, குற்றவாளி என்று ஒப்புக்கொண்டவனைச் சேவகன் கோர்ட்டார் உத்தரவுப்படி கூட்டில் ஏற்றினான். அவன், தன் பெயர் சோளனென்றும் வயது இருபத்தாறென்றும், தான் மாண்டுபோன மாயாண்டியின் மூத்த மகனென்றும், வாக்குமூலம் கொடுத்தான். கொலை செய்ததற்குக் காரணத்தைக் கேட்டபொழுது, அவன் பெருமூச்சு விட்டு, "அது ஒரு பெரிய கதை!" என்று சொன்னான்.

"அந்தக் கதையைத்தானே கோர்ட்டார் கேட்க வேண்டுமென்கிறார்கள்?" என்றார் சர்க்கார் வக்கீல். அதன்மேல், சோளன் சற்றுச் சலிப்புடன் தலையை அசைத்து, "அதைச் சொன்னதாலே, எனக்கு என்ன கொறஞ்சு போவுதுங்க? நான் பொறந்து வளந்ததைக் கேக்கயாரு பிரியப்படுவாங்க? அதுக்காவச் சொன்னேனே ஒளிய, வேறே என்னாங்க? சரீங்க, சுருக்கமாய்ச் சொல்லிடுறேன்."

"அதற்காக, நடந்த விஷயங்களை விட்டுவிடாதே," என்று நியாயாதிபதி எச்சரிக்கை செய்தார்.

"ஐயோ, சாமி! நான் ஏன் உடறேன்? நான் எதுநாச்சுக்கும் பயந்தா அல்ல?"

"சரி, மேலே சொல்லு," என்றார் நியாயாதிபதி.

"எங்கப்பனை ஏன் கொன்னேன்னுதானே கேக்கறீங்க? அந்த மனிசன் என்னை அவ்வளவு பாடுபடுத்திட்டானுங்க. ஒண்ணா நான் ஒளியணும், இல்லாட்டி அது ஒளியணுமினு எனக்கு ஆயிடுச்சுங்க. அந்த ஆளைக் கண்டபோதெல்லாம், கொன்னு தின்னுடணும்போல, அவ்வளவு வெறுப்பாயிடுச்சுங்க. இருந்தாலும், இருந்தாலும், நான் செஞ்சது தப்புன்னிட்டு எனக்கு இப்போத் தெரியிது, எசமானே! நான் படும் துன்பம் கடவுளுக்குத்தான்

தெரியும்! ஆமாஞ் சாமி, இந்தக் கையாலே கொன்னேன் — என்னாத்தை வாரிக் கட்டிக்கிட்டேன்! ஒத்தனை ஒத்தன் கொன்னுட்டா, என்னாத்தை வாரிக்கிட்டிக்கிறான்? சாவாதே எவன் இருக்காஞ் சாமி? செத்தவன் சங்கதிமட்டும் சாவோடு முடிஞ்சிடுத்தின்னுட்டு நெனைக்கிறீங்களா? ஒரு நாளும் இல்லே, சாமி. சாவோடு முடிஞ்சிடல்லே, முடிஞ்சிடல்லே. அந்தச் சங்கதி எனக்குத் தெரியும். ஒரு நாள் தவறாதே, ராவுலே எங்கப்பன் எங்கிட்டே வருது! அது மூஞ்சியைப் பார்த்தா, ஏண்டா இந்த வேலை செஞ்சேன்னிட்டு எனக்காவ வருத்தப்படுறாப்போல இருக்குது! அது வாறதும் போறதும், கனவுபோலே இருக்குது, சாமி. நான் என் வவுத்தெரிச்சலை அதுக்கிட்டே எப்படிச் சொல்லுவேன்! அதோடே, நான் எப்படிநாச்சும் கலந்து பேசித்தான் தீரணும்! ஆமாம், தப்பாமே அதுகிட்டே நான் போவணும்! கத்தியாலே குத்துறதுக்கு இந்தக் கையை நான் தூக்கினப்போ, அது யாரின்னு கண்டுக்கிட்டு, 'நீயா!' இன்னு கேட்டுச்சு. இதோ! இப்போ எதிரிலே நின்று சொல்லாற்போல இருக்குதே...நீயா! நீயா!! நீயா!!!" என்று சோளன், பயங்கரமான பார்வையுடன் கூக்குரலிட்டான். பிறகு, தன் பரட்டைத் தலையை இரு கைகளாலும் பிடித்துக்கொண்டு, இடுப்பு ஒடிந்தவன்போல் அவன், பூட்டுச் சட்டத்தின்மேல் சாய்ந்தான். கீழே விழாதபடி, சேவகன் அவனைப் பிடித்துக்கொண்டான். ஒரு நிமிஷத்திற்கு பிறகு, குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று கையால் சாடை காட்டினான். உடனே, ஒரு டம்ளர் ஜலம் கொடுக்கப்பட்டது. அதை, ஒரே மூச்சில் அவன் குடித்தான். பிறகு, பெருமூச்சு விட்டுக்கொண்டு அவன், கோர்ட்டைச் சுற்றிப் பார்த் தான். இந்த நாலு ஐந்து நிமிஷங்களுக்கு, நியாய ஸ்தலம் ஒரு பொம்மைக் கொலுபோலக் காணப்பட்டது. சோளனுக்குச் சோர்வு சற்றுத் தணிந்தது என்று தெரிந்ததும் ஜட்ஜு மெதுவாகக் கேட் டார். "உன் தகப்பன்மேல் உனக்கு ஏன் அவ்வளவு வெறுப்பு?"

"அது என் மூக்கிலே தும்பைச் சாத்தைப் பிழிச்சிட்டுதுங்க. ஊட்டை உட்டு துரத்திச்சு. போனா இடமெல்லாம், அவன் அப்படியாக் கொத்தவன் இப்படியாக் கொத்தவன் இன்னிட்டு, என்மேலே பழி சொல்லுச்சு. சோத்துக்கு இல்லாமெ சாவடிச்சுது. கொல்லுறது ஒண்ணுதான் பாக்கி, மீதி எல்லாம் செஞ்சுடுச்சு. ஆனா, அது எப்பவும் இந்த மாதிரி இல்லைங்க. அந்தப் பாலாப்போன முண்டை

ஊட்டுக்கு வந்தப்போ இருந்து, எனக்கு சனியன் பிடிச்சுதுங்க,'' என்று சோளன் வெறுப்புடன் முறையிட்டான்.

‘‘அவள் யார்?'' என்று நியாயாதிபதி கேட்டார்.

‘‘எங்கத்தைக்காரிதான்; எங்கப்பனுக்கு மூத்தவ, அறுத்துப் போனவ. குளந்தை குட்டி கிடையாது. ஆனா, சோத்துக்கு குரவு இல்லிங்க. எங்களவங்க ஏழைப்பட்டவங்க; அதனாலே, அவளை ஒரு பணக்காரக் கிழவனுக்குக் கட்டிக் கொடுத்தாங்க. அவ புருசனைப் பாத்தா, அவ பாட்டானாட்டம் இருப்பானாம். ரண்டு மூணு வருசத்திக்கெல்லாம், அந்தக் கிழவன் செத்தானாம். சொத்தையெல்லாம் வாரிக்கிட்டு, ரொம்ப விசனப்பட்டவளாட்டம் பாசாங்கு பண்ணிக்கிட்டு, எங்க ஊடு வந்து சேர்ந்தா. வந்ததும் வராததுமா, எல்லாரையும் அதிகாரம் பண்ணத் தொடங்கிட்டா. எங்கம்மா ஒரு பயித்தியம். எது சொன்னாலும் பட்டுக்கிட்டு இருந்திச்சு. வர வர, அவ ரொம்ப இமிசை செய்ய ஆரம்பிச்சிட்டா. அவளாலேதான் நாங்க பொளக்கணுமின்னு அவ நல்லாக் கண்டுக்கிட்டா — அப்பாலே, கேப்பானேன்? எனக்கு அப்போ பன்னண்டு வயசிருக்கும் — இம்பிட்டுப் பையன்க. ஒரு நாள், எங்கம்மாளை அவ திட்டிருக்கா பாருங்க, வேறு யாரு நாச்சும் இருந்தா, நாக்கைப் பிடுங்கிக்கிட்டுச் செத்திருப்பாங்க. எனக்குப் பொல்லாத கோவம் வந்திச்சு. அவமேலே, ஒரு கல்லை எடுத்துப் போட்டேன். நெசமாலுஞ் சாமி. செஞ்சத்தை இல்லேன்னு சொல்லுவானேன்? அவ நடத்தை, எங்கப்பனுக்குந்தான் பிடிக்காமே இருந்திச்சு. ஆனா அவ மூச்சுக்கு மூச்சு, மச்சான் ஊட்டுக்குப் போயி, அவன் பிள்ளையை வளத்துக்கரேன்னு சொல்லத் தொடங்கிட்டா. அப்போ, எங்கப்பன் பயந்திடுச்சு. மொள்ள மொள்ள, அவ சொன்னபடியெல்லாம் கேக்கத் தொவங்கிட்டுது. கடைசியிலே, அவ வச்சது சட்டமாயிடுச்சு எங்கூட்டுலே. ஆனா, எம்மேலே இருந்த ஆத்தரம் மட்டும் அவளுக்குப் போவல்லே. நெதம், எங்கப்பன்கிட்டே எதுநாச்சும் கோளி சொல்லி, எனக்கு அடிவாங்கி வைப்பா. நான் ரொம்ப நல்லவனின்னு நான் சொல்லிக்கிலே, சாமி. இருந்தாலும் அவ, ஒண்ணைப் பத்தாக்கி, பொய்யும் புளுகும் சொல்லி, எங்கப்பனுக்கும் எனக்கும் ஆகாதே பண்ணிட்டா.

அவளாலேதான் சாமி நான் இந்தக் கதிக்கு வந்தேன்! அவ ஒரு பொம்பிள்ளை — அதுலேயும் வாளாத கட்டுக்களத்தி. எங்கப்பன் ஆம்பிள்ளை இல்லையா? நெசம் பொய்யைக் கண்டுக்க வேணாமா? எது சொன்னாலும் நம்பிடறதுதானா?'' இப்பொழுது அவனுக்கு ஆயாசம் ஏற்பட்டது. பெருமூச்சு விட்டுச் சற்றுச் சிரம பரிகாரம் செய்து கொண்டான். ஜட்ஜு, கேள்வி கேட்க வாயெடுத்தார். அதற்குள், அவனே தன் விருத்தாந்தத்தைத் தொடர்ந்து சொல்லலானான்: ''திடீரின்னு எனக்கு ஆத்திரம் வந்ததுக்கு என்ன காரணுமுன்னா, அதோ அந்தப் பையன் கண்ணாலந்தான்,'' என்று மல்லனைச் சுட்டிக் காட்டிச் சொன்னான். ''அவன் எனக்கு எளையவனுங்க. போன மாதமே அவனுக்குக் கண்ணாலம் ஆயிருக்கவேண்டியது. என்னாலே நின்னு போச்சுங்க. அவன் மேலே எனக்குப் பொறாமை ஒண்ணும் இல்லையுங்க; நெசமாலும் இல்லையுங்க. ஆனா, எங்க சாதியிலே ஒரு வளக்கம் உண்டுங்க. மூத்தவனுக்குக் கண்ணாலம் ஆகாட்டி, எளையவனுக்குச் செய்யமாட்டாங்க. அப்படிச் செஞ்சாலும், மூத்தவன் கிட்டே இருந்து, அவன் சம்மதம் வாங்கிப்பாங்க. சம்மதங் குடுக்காட்டித்தான், ஏதோ பூசை கீசை செஞ்சு, அப்புறம் எளையவனுக்குக் கண்ணாலத்தைப் பண்ணுவாங்க. சம்மதம் கொடுக்கவாணாங்கற எண்ணமே எனக்கு இல்லையுங்க. ஆனா, நாயமாப் பாக்கப்போனா, அந்தப் பொண்ணைக் கட்டிக்க வேண்டியவன் வேலுதான்,'' என்று அவன், வேலனைக் காண்பித்துச் சொன்னான்.

''ஊருலே, நாலு பெரியவங்க எங்கப்பன்கிட்டே இந்த நாயத்தைச் சொன்னப்போ, அது சொல்லிச்சாம்: 'எனக்கு இருக்கிறது ஒரு மகன்தான். எம் மூத்தவன் எப்பவோ செத்துட்டான்' இன்னுதான்! இந்தச் சங்கதி எங்காதுல உளுந்தப்போ, நான் அரிய மங்கலம் கள்ளுக் கடையிலே இருக்குறேன். எனக்கு உடம்பு எரிஞ்சு போச்சு. இதை உட மானக்கேடு என்ன வேணும்? நாக்கைப் பிடுங்கிக்கிட்டுச் சாவக்கூடாதாங்கிற வரையிலும் ஆயிடுச்சி எனக்கு. போதாக்கொறைக்கு, அன்னிக்குத்தான் ஒரு வாரக்கூலி கையிலே வந்திருந்திச்சு — நான் ஒப்புக்கொள்கிறேன், எசமான். கொஞ்சம் பலமாத்தான் குடிச்சேன். அந்தச் சின்ன சங்கதிக்குக் கூட என்னை, அது ஒரு ஆளா நெனைக்கில்லே பாத்தியான்னு மட்டும், எனக்கு மனசுலே உறுத்திக்கிட்டே

இருந்திச்சு. நான் கொட்டாப்புளியாட்டம் இருக்கறப்போ, செத்துட்டேனின்னு சொல்றதா! எனக்கு ஒரே வெறி பிடிச்சுப்போச்சு. செத்தவன் நான் இல்லை, அதுதான்! அதைக் கொஞ்ச நேரத்துல அதுக்குக் காட்டிடணுமின்னு தோணிப் போச்சு. போதை ஏற ஏற, நான் எல்லாத்தையும் மறந்திட்டேன். என் புத்திக்குத் தெம்பட்டது ஒண்ணுதான் — எப்படிநாச்சும் எங்கப்பனைத் தேடிப்பிடிச்சுக் கொன்னுடணும்! நான் ஊருக்கு வாரப்போ, நல்லா இருட்டிப் போச்சு. மூலை முடுக்குலெயெல்லாம் காத்திருந்து பாத்தேன்; அதைக் காண முடியிலே. எனக்கு இன்னும் கொஞ்சம் ஆத்தரமாப் போச்சு — அது அவ்வளவு சுளுவா தப்பிச்சுக்கிறதா! எசமான், என்னைப் பேய் பிடிச்சிடுச்சு! எங்கூட்டுப் பொளக்கடைக்கு ஓடியாந்தேன். அங்கே வறட்டிப் போர் இருந்திச்சு; அதுக்குப் பின்னாலே ஒளிஞ்சுக்கிட்டேன். கொஞ்ச நாளிக்கெல்லாம், அது அந்தப் பக்கம் வந்தது. அதைக் கண்ட ஒடனே, எனக்கு ரெத்த வெறி வந்திடுச்சி! அது மேலே பாஞ்சு உளுந்தேன், அப்பாலே...'' மௌனமாய்ப் பல்லைக் கடித்துக்கொண்டு, கண்களை இறுக மூடிக் கொண்டு, கையால் குத்திக் குத்திக் காட்டினான்.

''ஊம். அப்படியானால், நீ உன் தகப்பனைக் கொன்றதாக ஒப்புக்கொள்ளுகிறாய்,'' என்றார் நியாயாதிபதி.

''நான் இன்னும் என்னாத்தைச் சொல்லுவேன்?'' என்று பரிதாபகரமாய்ச் சோளன் கைகளை விரித்தான்.

''உனக்கு எவ்வளவு காலமாய் வேலனைத் தெரியும்?'' என்று நியாயாதிபதி கேட்டார்.

''அவன் பொறந்தப்போ இருந்து தெரியுங்க.''

''அவன் மேலே உனக்குப் பிரியம் உண்டா?''

''என்ன எசமான் அப்படிச் சொல்லுறீங்க! அவன் எனக்குக் கூடப் பொறந்தவனுக்கு மேலேயுங்க. தங்கமானவனாச்சுதே! தேடிப்பாத்தா,

லெச்சத்துலே ஒரு ஆளு அவனைப் போலக் கெடைக்கமாட்டானே!''

''ஆகையினாலே, அவனை விடுதலை செய்துவிட்டால் உனக்குச் சந்தோஷந்தானே?''

''என்ன எசமான், அதைக் கேக்கணுமா? – இல்லாட்டி, நான் ஏன் இங்கே வந்து ஒங்க காலுலே உளணும்? நான் பொளச்சது போதுங்க. கடவுளுக்குப் பொதுவாச் சொல்றேனுங்க; நம்பினா நம்புங்க, நம்பாட்டிப் போங்க. நான் தூக்குப் போட்டுக்கிட்டாவது சாவலாமினு இருந்தேன். ஆனா, ஒரு பாவமும் அறியாத வேலு சிக்கிக்கிட்டானின்னு தெரிஞ்சதும், எனக்கு வவுறு எரிஞ்சு போச்சுங்க, உடனே பள்ளிக்கு ஓடி, ஏட்டு ஐயாகிட்டே உளுமையைச் சொல்லிடலாமின்னு பாத்தேன். அப்போ, உங்களைப்போல் ஒரு புண்ணியவான், 'வாணாம், நேரா ஜர்ஜு ஐயாகிட்டவே போயிடு'ன்னிட்டு புத்தி சொன்னாரு. அது மேலே இங்கே ஓடியாந்தேன், சாமி.''

''ரொம்ப சரி, உனக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு இருக்கலாம். நீ உன் சிநேகிதனைக் காப்பாற்ற யத்தனிப்பதும் பெருந்தன்மையே. ஆனால், சட்டம் ஒன்று இருக்கிறதே. வேலன் உன் தகப்பனைக் கொன்றிருக்க, உன்னை எப்படி தண்டிப்பது?''

''ஐயோ, சாமி! என் பேச்செல்லாம் பொய்யிங்கறீங்களா? ஆண்டவன் அறியச் சொல்றேனுங்க! நீங்க எங்கே சத்தியம் பண்ணச் சொன்னாலும் பண்றேனுங்க! வேலுவுக்கு ஒரு எளவும் தெரியாதுங்க. ஐயோ, கடவுளே! ஒங்களுக்கு ஏன் இந்தச் சந்தேகம் வந் திச்சு!'' என்று அவன் தலையில் அடித்துக்கொண்டான்.

''ஆமாம், நீ உன் தகப்பனைக் கொன்றால், வேலன் உடைக்கு ரத்தக் கறை எப்படி வந்தது?'' என்று நியாயாதிபதி கேட்டார்.

''ஆஹா! அதுவுங்களா?'' என்று ஒரு பெருமூச்சுவிட்டுச் சோளன் தலையை ஆட்டினான்.

“அது இப்படித்தான் இருக்கணுங்க. நான் அந்தப் பாதவத்தைச் செஞ்சிட்டு ஓடிப்போன பொறவு, எனக்கு நாக்கு வறண்டு போச்சி. நல்ல குளுந்த பானைத்தண்ணியாக் குடிக்கணும் போலிருந்திச்சு. கோடையிலே, ஊட்டுலே ரெண்டு பானை இருக்கும் — ஆனால், நான் எந்த ஊட்டுலே பூருவேன், அப்போ, எனக்குக் கள்ளுக்கடை ஞாவகத்தக்கு வந்திச்சு. அங்கே, தப்பாமே பானையிலே தண்ணியிருக்கும். அரிவாளும் கையுமா, உளுந்து அடிச்சிக்கிட்டு அங்கே ஓடினேன். குடிசைக்குள்ளே, உளுந்து கிடந்த ஆளை நான் பாக்கல்லே. கால் தடுக்கி, அவன் மேலே குப்புற உளுந்தேன். அவன் கொஞ்சம் பொறண்டான். என் ரத்தத் துணியெல்லாம்...”

“அப்படியா!” என்று வெகு ஆச்சரியத்துடன் வேலன் கூவினான். ஒரு க்ஷணம், எல்லோரும் அவன் முகத்தைப் பார்க்கும்படி நேர்ந்தது.

“நான் கீளே உளுந்தப்போ, அரிவாள் என் கையிலிருந்து நளுவி விளுந்திடுச்சு,” என்று சோளன் தொடர்ந்து சொன்னான்.

“நல்ல காலம், அது எங்க ரெண்டுபேர் மேலே விளுல்லை. போதையா உளுந்து கிடந்தது வேலுவின்னு தெரிஞ்சப்போ, எனக்கு நம்பிக்கையே வரலியுங்க! கள்ளுக்கடைக்குக் காதவளியிலே போறவன் அவன், அங்கே எப்படி வந்தானோ கடவுளுக்குத்தான் தெரியணும். அவன் மேலே உளுந்து பெரண்டதாலேதான், அவன் வேட்டிக்குக் கறை வந்திருக்கணுங்க; அதுக்குச் சமுசயமே இல்லே,” என்று சோளன் உறுதியாகச் சொன்னான்.

நியாயாதிபதி, மற்றொருமுறை சர்க்கார் வக்கீலோடு கலந்து பேசினார். வேலன், மறுபடியும் கூட்டில் நிறுத்தப்பட்டான். தன் உடை ரத்தக்கறையானதன் மர்மம் வெளிப்பட்ட பிறகு, தான் நிரபராதியென்பதை நன்கு உணர்ந்தான் வேலன். கேட்ட கேள்வி களுக்குப் பதில் தட்டுத் தடங்களின்றிச் சொல்லித் தான் ஒரு குற்றமும் செய்யவில்லையென்பதை, உலகமறியும்படி அவன் ருஜுப்படுத்திக் காண்பித்தான். ஆயினும், அவன் குற்றமற்றவன் என்பதைப் பூர்த்தியாய் ஸ்திரப்படுத்துவதற்காக, அவனுடைய வக்கீல், ஆறுமுகத்தின் சாக்ஷியத்தை மட்டும் விசாரிக்கும்படி கோர்ட்டாரைக்

கேட்டுக் கொண்டார். அதே பிரகாரம், ஆறுமுகமும் கூட்டில் ஏற்றப்பட்டான். ஆனால், ஆறுமுகம் மிகவும் பயந்து, பேசுவதற்கே கஷ்டப்பட்டான். இருந்தபோதிலும், வேலனின் துர்ப்பாக்கிய நிலைமைக்குத் தானே காரணம் என்பதை மட்டும் அவன் விளக்கிச் சொன்னான்.

"கோவத்துலே ஒண்ணுக்கொண்ணு பண்ணாமே, ராவெல்லாம் சும்மா உளுந்து கிடந்தா சரியாப் போகுமின்னு, நான் அவனுக்குக் கள்ளை ஊத்தினேனுங்க. அது மாயாண்டிக்கும் நலுமையினு நெனைச்சேன்; இந்த அக்கப்போரெல்லாம் வெளையுமின்னு யாரு கண்டாங்க? தெரிஞ்சா இதுலே தலையிட்டுப்பேங்களா? இனிமே, அந்த வளிக்கே போவமாட்டேனுங்க," என்று அவன் வாக்குத் தத்தம் செய்தான். நியாயாதிபதி அவனை இறங்கிப் போகச் சொல்லிவிட்டு, சற்று யோசித்தார். அந்தக் கேஸை ஒரு விசித்திரமாயிருந்தது. பிறகு பதினைந்து நிமிஷங்களுக்குள், அவர் வேலனை விடுதலை செய்யும்படியும் சோளனைக் கைது செய்யும் படியும் உத்தரவிட்டார். அங்கிருந்தோரின் குதூகலத்திற்கு அளவே யில்லை. வேலனுடைய தோழர்கள் ஆரவாரம் செய்வதைத் தடுப் பதற்குள், சுப்பையா பிள்ளைக்குப் போதும் போதுமென்று ஆய் விட்டது.

வேலன், நியாய ஸ்தலத்தை விட்டு வெளியே வந்தானோ இல்லையோ, அவனுடைய சிநேகிதர்கள் அவனைக் குழந்தை போல் சுமந்து ஓடினார்கள். பிறகு, அவர்கள் தங்களுடைய மனப் பூர்வமான அன்பைப் பலவிதத்தில் காட்டிக்கொண்டனர். அவனைச் சூழ்ந்து கொண்டு, எல்லோரும் ஒரே காலத்தில் அவனோடு பேசத் தொடங்கினர். ஒருவன் தட்டிக்கொடுத்தான்; ஒருவன் கையைக் குலுக்கினான்; ஒருவன் முதுகைப் பிடித்தான்; ஒருவன் தலையைத் தடவினான். இவைகளெல்லாம் அவர்களுடைய அன்பிற்கு அறிகுறிகளாயிருந்த போதிலும், அவை இளைத்துக் களைத்திருந்த வேலனுக்கு மிகவும் வேதனையாயிருந்தன. இதை உணர்ந்த மதுரை, நல்லதனமாக அவர்களுடைய பிசகை எடுத்துக் காட்டி, வேலனுக்கு வேண்டிய சௌகரியத்தை ஏற்படுத்தினான். பிறகு, வேலனுக்குப் பிராண சிநேகிதர்களான ஜம்புலிங்கமும் பிச்சையும், அன்றிரவே, வெங்கடாசலத்திற்கு அந்

நற்செய்தியைத் தெரிவிப்பதாக வாக்களித்திருந்ததால், விடைபெற்றுக்கொண்டு கிராமத்திற்குப் புறப்பட்டனர். ஆறுமுகம், அவர்களுடைய வழிச் செலவுக்குச் சிறிது பணம் கொடுத்து, வீணாய்க் கஷ்டப்பட்டு வழியெல்லாம் நடக்கவேண்டாமென்றும், பொன்மலைவரையிலும் ஒரு குதிரை வண்டியை அமர்த்திக்கொள்ளும்படியும், புத்திசொல்லி அனுப்பினான்.

வேலனும் அவனைச் சேர்ந்தவர்களும் சந்தோஷத்தில் மூழ்கியிருந்த பொழுது, சுப்பையா பிள்ளை தம் மனைவியின் உத்தரவுப் படி, அவளுக்குத் தகவல் அனுப்பினார். ஏனெனில், கடவுள் கிருபையால் வேலனுக்கு விடுதலை ஆய்விட்டால், அவனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் ஒரு நல்ல விருந்து செய்ய வேண்டுமென்று தாயம்மாள் முன்னமே தீர்மானித்திருந்தாள்.

அவர்களுடைய ஆட்டம் பாட்டமெல்லாம் ஒருவாறு ஓய்ந்த பின், சுப்பையா பிள்ளை மெதுவாக வந்து, வேலனைத் தட்டிக்கொடுத்தார்.

"ஐயோ! என் புத்தியை என்ன சொல்லுவேன்!" என்றான் மதுரை, தன்னையே நொந்துகொண்டு. "நீங்க தயவு செஞ்சு மன்னிக்கணுங்க! எங்க சந்தோசத்துலே எல்லாம் மறந்திட்டோம் — வேலு, ஐயா யாரு, தெரியுமல்ல? (வேலன் தெரியுமென்று தலையை அசைத்தான்.) இந்த மவராசரு இல்லாட்டி, நாங்க ஒன்னை மீட்கறது ஏதப்பா! அவரு செஞ்ச ஒவகாரத்துக்கு, நாம் என்ன பண்ணினாலும் போதாது. ஐயாவைக் கும்பிடு, அப்பா, கும்பிடு."

வேலன், மிகவும் வணக்கத்துடன் கும்பிட்டான், சுப்பையா பிள்ளை அவனை ஆசீர்வதித்துச் சொன்னார்: "மதுரையின் பேச்சை நம்பாதே, வேலு. ஒருவரைத் தூக்கி வைக்கிறதுலே அந்த ஆளைப்போலக் கெட்டிக்காரன் யாருமில்லை. இதுலே, தான் படிக்காதவன்னு வேறே சொல்லிக்கிறான்; இன்னும் படித்திருந்தால் என்ன செய்வானோ!"

"அந்த ஜர்ஜ ஐயாவைத் தொரத்திட்டு, அங்கே உக்காந்துடமாட்டாரு?" என்றான் ஒரு வாலிபன்.

‘‘பண்ணக்கூடிய ஆளுதான்,’’ என்றார் சுப்பையா பிள்ளை, புன்முறுவலுடன்: ‘‘சரி, இப்பொழுது நீங்களெல்லாம் எங்க வீட் டுக்கு வரணும். ஏதோ, எங்க கையாலே ஆனமட்டும் ஒரு சின்ன விருந்து உங்களுக்குச் செய்யணுமின்னு, வீட்டுலே என் சம்சாரம் ஏற்பாடு பண்ணிக்கொண்டு இருக்குது. சாமி புண்ணியத்துலே எல்லாம் நல்ல விதமாய் முடிஞ்சதுக்கு, நீங்களெல்லாம் ஒரு பொழுதாவது எங்கள் வீட்டிலே சாப்பிடவேணும்,’’ என்றார்.

‘‘ஆமாங்க, அம்மாளுக்குச் சங்கதி அதுக்குள்ளே எப்படித் தெரிஞ்சுது?’’ என்றான் மதுரை.

‘‘சொல்லியனுப்ப ஆளுதானா இல்லே?’’

‘‘ஆகா! நான் என்னாத்தைச் சொல்வேன்!’’ என்று மதுரை, சுப்பையா பிள்ளையை உற்றுப்பார்த்தான்; அவன் கண்களில் விசுவாசம் கலந்திருந்தது. ‘‘அப்பா, வேலு! அடுத்த காரியம் நீ அம்மாவைப் பாத்து மருவாதி செய்யணும். அவுங்க மனசு தங்கம். பெத்த தாயி கூட அவ்வளவு அக்கறையாப் பாக்கமாட்டா — ஆமாங்க, இத்தினி பேருக்கு ஆக்கணுமே; அந்த அம்மாளாலே முடியுங்களா?’’ என்று மதுரை, சுப்பையா பிள்ளையை பார்த்துக் கேட்டான்.

‘‘அவள் சங்கதி உங்களுக்குத் தெரியாது. ஒரு காரியத்தைச் செய்து முடிக்கணுமின்னு தீர்மானம் செய்துட்டால், அதைச் செஞ்சே தீருவாள். அப்பொழுது, அவளால் ஆகாதது ஒண்ணுமேயிராது. நீங்கள் எல்லாம் என்பின்னோடு வராது போனால், நான் அழைக்கவில்லை யென்று என்மேல் சண்டைக்கு வருவாள். உங்களாலே ஆன உபகாரம், எங்க ரெண்டு பேருக்கும் சண்டை மூட்டி வைக்கணுமின்னால், செய்யுங்கள்,’’ என்றார் சுப்பையா பிள்ளை, வேடிக்கையாய். ஆனால், அவ்வேடிக்கையான பேச்சில் எவ்வளவு உண்மை இருந்ததென்று மதுரைக்கு மட்டும் நன்றாய்த் தெரியும்.

‘‘என்ன பேச்சுப் பேசுறீங்க! உங்களுக்கு மனசு நோவும்படி நாங்க செய்யத் துணிவமா? என்னாத்துக்கு அம்மாவை வீணாக்

கஷ்டப்படுத்தணுமின்னு சொன்னேனேயொளிய, பின்னே என்னாங்க? நான் இனிமே வாயத் தெறக்கமாட்டேனுங்க, நீங்க எது சொன்னாலும் கேக்கத் தயாரா இருக்கேணுங்க,'' என்றான் மதுரை.

``இது நல்லவனுக்கு அடையாளம்,'' என்றார் சுப்பையா பிள்ளை, புன்முறுவலுடன்: ``இப்போ நாம் செய்யவேண்டிய முதல் வேலை, வேலுவை வீட்டுக்கு அனுப்பவேண்டியதுதான். வர்றவன் போறவனுக்கெல்லாம், அவனைப் பாத்தா வேடிக்கையா இருக்குது. ஒரு ஜட்கா வண்டி பேசுகிறேன்; வேலனும் நீங்கள் மூன்று பேரும் ஏறிக்கொண்டு, நேரா எங்கள் வீட்டுக்குப் போங்கள். நான் இருந்து, இவர்களை அழைத்துக்கொண்டு வருகிறேன்.''

``இது நல்லா இருக்குதுங்க! நாங்க வண்டியலே போவுறது; நீங்க நின்னு வாரதா!'' என்றான் ஆறுமுகம்: ``என் பேச்சைச் செத்தக் கேளுங்க. நீங்க, வேலு, மதுரை, வீரப்பன் நாலுபேருமா வண்டியிலே போங்க. நான் இருந்து, இந்த மந்தையை இளுத்துக்கிட்டு வாரேன் — எனக்கு வளி தெரியாதா என்ன?'' என்றான்.

ஆறுமுகத்தின் இஷ்டப்படியே, சுப்பையா பிள்ளை ஒரு குதிரை வண்டியை அமர்த்தி, வேலன், மதுரை, வீரப்பன் சகிதமாய் வீட்டிற்குச் சென்றார்.

## 21. பிரிந்தவர் கூடுதல்

சுப்பையா பிள்ளையின் மனைவி தாயம்மாளின் உற்சாகத்திற்கு அளவே இல்லை. அந்த அம்மாள் இட்ட விருந்தைப்போல், மதுரையும் அவனைச் சேர்ந்தவர்களும் அவர்கள் ஜன்மத்திலே உண்டதில்லை. இவ்வளவு நல்ல குணமுள்ள தம்பதிக்குத் தங்களால் என்ன பிரதி உபகாரம் செய்ய முடியுமென்று அவர்கள் யோசித்தார்கள். சாப்பாடு முடிந்ததும், விசாலமான தெருத் திண்ணைகளில் பாய்கள் விரிக்கப்பட்டன. பிறகு, வாடகைக்கு வாங்கி வந்த ஒரு காந்த விளக்கின் பிரகாசமான ஒளியில், பாய்களின்மீது அவர்கள் உட்கார்ந்து தாம்பூலம் போட்டுக்கொண்டார்கள். அப்பொழுது, சுப்பையா பிள்ளையின் வீடு ஒரு கல்யாண வீட்டைப்போல் தோன்றிற்று. மதுரையின் வாய் ஒரு நிமிஷங் கூடச் சும்மாயிருக்கவில்லை. அவன் வேடிக்கையாகப் பேசி எல்லோரையும் சிரிக்கச் செய்தான். இவ்வாறு எல்லோரும் உல்லாசமாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருக்கும்பொழுது, வேலன் மட்டும் விசனமுற்று மௌனமாக இருந்தன். அவ்வப்பொழுது சம்பாஷணையில் புகுந்துகொள்ள முயன்றும், அவனால் முடிய வில்லை. வியாகூலம் அவனைப் பிடுங்கித் தின்றது. இதைக் கவனித்த சுப்பையா பிள்ளை, அவனை மெதுவாகக் கேட்டார்.

“என்னப்பா வேலு, எதைப்பத்தி யோசித்துக்கொண்டிருக்கிறாய்?”

“ஒண்ணுமில்லீங்க, சோளனைத் தூக்குப் போட்டுடுவாங்களா?”

“ஒருநாளும் போடமாட்டார்கள். நீ அதைப் பத்திக் கவலைப் படாதே. அவனுக்கு லேசான தண்டனைதான் விதிப்பார்கள். நியாயாதிபதிக்கு அவனிடத்தில் நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டு இருக்கிறது. ஏதாவது சாக்கு வைத்து, அவனை விடுதலை செய்தாலும் செய்துவிடுவார்,” என்றார் சுப்பையா பிள்ளை.

“கடவுள் புண்ணியத்திலே அப்படி ஆயிட்டுதுன்னா, ஏன் சொல்றீங்க! அவன் எவ்வளவு நல்லவன் தெரியுங்களா? குடியாலே அல்ல கெட்டுப் போனான்! இன்னக்கி, கோர்ட்டுக்கு வாராட்டி அவனை யாரு அடிக்கிறாங்க. என்னை உட்டிருப்பாங்களா?”

“ஆ, விடாமலென்ன? ஓ சரி, போனது போச்சு; பழங்கதையை எல்லாம் எடுக்காதே. இது நிஜமாக உனக்கு ஒரு கண்டந்தான். சாமி புண்ணியத்தில் தப்பினாய். இனிமே உனக்கு நல்ல சுகந்தான். பெரிய பயித்தியமாய் இருக்காயே! உனக்காக வள்ளி எப்படிக் காத்திருப்பாள்! அதைக் கொஞ்சம் யோசித்துப் பாரு,” என்று சுப்பையா பிள்ளை தமாஷாகச் சொன்னார்.

வேலனுடைய முகத்தில் சிரிப்பு அரும்பியது.

“ஊம், இன்னும் ஒருநாள் தானே? நாளையன்னிக்கி வள்ளி எதிர்கொண்டு அழைக்கமாட்டா?” என்று தாயம்மாள், பரிகாசம் செய்தாள்.

“நாளனிக்கா! அதுவரையிலும் என்னத்துக்குங்க? நாளைப் பொளுதோடே ஊடு போயிடமாட்டோம்.”

இதைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள். வேலனுக்குச் சிறிது வெட்கம் உண்டாய்விட்டது.

“வள்ளி பேச்சு இல்லீங்க, நான் சொன்னது. ஊருக்குப் போவ அவ்வளவு நேரம் பிடிக்காதுன்னேன்,” என்று வேலன், புன் சிரிப்பை மறைக்க மாட்டாமல் சொன்னான்.

“அதுலே என்ன தப்பு? நீ கட்டிக்கப்போற பொண்ணு மேலே உனக்குப் பிரியம் இருக்கத்தானே வேணும்?” என்று தாயம்மாள், குறும்புத்தனமாகச் சொன்னாள்.

“அது இருக்கட்டும்; நாளைச் சாயங்காலம் நீ எப்படி ஊர் சேரமுடியும்?”

“நாங்களெல்லாம் யோசித்தாய் விட்டது. நீ தலை அசைத்தால் போதாது; எந்தவிதமாய்ச் சேருவே? சொல்லு.”

“இங்கிருந்து நேரா எங்கூருக்கே குதிரைவண்டி வச்சிடுறோம்,” என்றான் வேலன்.

“அது நடக்கற காரியமா? பொன்மலை போவதற்குள்ளேயே குதிரைகளுக்குப் போதும் போதுமினு ஆயிடுமே. காட்டுப் பாதையா சும்மாவா? அதுக்கு அப்புறம் ஓர் அடி எடுத்து வைத்தால், குதிரை செத்துப்போவாது? நீ நூறு ரூபாய் கொடுத்தாலும், வண்டியைக் கட்டமாட்டார்கள்,” என்றார் சுப்பையா பிள்ளை.

“பொன்மலையிலிருந்து எங்கூரு பன்னண்டு கல்லு தானுங்களே...”

“யாரு சொன்னது? பதினாறு மைலுக்கு ஓர் அடி குறைவு இல்லே. எனக்குத் தெரியாதா, வேலு?”

“இருக்கட்டுமே. பதினாறு கல்லு நடக்கமாட்டம்?”

மதுரை புன்னகை புரிந்தான்.

“பொளுதெல்லாம், காலையும் கையையும் மொடக்கிக் கிட்டு வண்டியிலே ஒக்காந்து இருந்திட்டுப் பதினாறு கல்லு நீ நடந்துடுவையா? — உன் உடம்பு இந்த நிலையிலே இருக்கறப்போ, அம்மா சொல்றாப்போல...”

“ஓகோ! இதெல்லாம் அம்மா செஞ்ச வேலைதான்.”

“அப்படியே எண்ணிக்கொள். உன் சௌக்கியத்துக்குத் தானே சொல்றேன்?”

‘‘ஆமாங்க, எனக்குத் தெரியாதுங்களா,’’ என்றான் வேலன். அவன் பார்வையில் விசுவாசம் ததும்பிற்று.

‘‘சரி, என் ஏற்பாடு இதுதான்: நீங்கள் மத்தியான்னச் சாப்பாட்டை, பத்து, பதினொண்ணுக்கெல்லாம் முடிச்சுக்கிறது. அப்புறம், ரெண்டு மணி சுமாருக்குக் கொஞ்சம் பலகாரம் எடுத்துக் கொள்றது... பிறகு, குதிரை வண்டிங்களுலே பொன்மலைக்குப் புறப்படறது. மணி ஆறுக்கெல்லாம் அங்கே போயிடலாம். ராத்திரிச் சாப்பாட்டுக்குக் கொஞ்சம் கட்டுச்சோறு கட்டித் தருகிறேன்.’’

‘‘இன்னும் அது வேறேயா? ஏது, எங்களைச் சாப்பாட்டு ராமன்களா...’’

தாயம்மாள், கையால் அதட்டி மதுரையை மௌனமாக்கி, மேலே சொன்னாள்: ‘‘பொன்மலையிலே உங்கள் ஊர்ப்பக்கம் போகும் வண்டிகள் எப்பொழுதும் இருக்குமாம். அதுவும், நாளைக்குக் கேட்கவேண்டியது இல்லை. நாளைக்குச் செவ்வாய் கிழமை, பொன்மலை சந்தையில்லையா...’’

‘‘உங்களுக்குத் தெரியாதது என்ன இருக்குங்க?’’ என்று வேலன், வாயெல்லாம் பல்லாகச் சொன்னான்.

‘‘உங்கள் ஊரு வண்டிகளே வந்திருந்தாலும் வந்திருக்கலாம். நல்ல நிலாவுக்கும் அதுக்கும், சுகமாய்ப் பிரயாணம் செய்ய லாமே. கோழி கூப்பிடறதுக்குள்ளே வீடு போய்ச் சேர்ந்திடுவீங்களே. நான் சொல்றது சரியா இல்லையா? சொல்லு.’’

‘‘சரிதானுங்க,’’ என்று வேலன், மனப்பூர்வமாய் ஆமோதித்தான்.

மறுநாட் காலையில் மதுரை, வீரப்பன், ஆறுமுகம் மூவரும் சுப்பையா பிள்ளை வீட்டிற்கு வெகு தூரத்தில் சென்று, ஓர் ஆலோசனை செய்தார்கள். விடை பெற்றுக்கொண்டு ஊருக்குப் புறப்படுவதற்கு முன், தங்களுடைய நன்றியறிவுக்கு அறிகுறியாக, சுப்பையா பிள்ளைக்கும் அவருடைய மனைவிக்கும் ஏதாவது மரியாதை செய்யவேண்டுமென்று, அவர்களுக்குத்

தோன்றிற்று. எதிர்காலத்தில் அவ்வுத்தமத் தம்பதிக்கு எவ்வளவோ செய்ய வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்துக் கொண்டிருந்தபோதிலும், தற்காலம் ஒன்றுமே செய்யாமல் போவது, மரியாதைக்கு மிகவும் குறைவென்று, அவர்களுக்குப் பட்டது. இவ்வபிப்பிராயத்தில், ஆறுமுகத்திற்குச் சிறிதேனும் சந்தேகம் இல்லை. வேலனுடைய வழக்கு விஷயமாய்ச் செலவு செய்யக் கொஞ்சம் பணம், ஆறுமுகம் கொண்டு வந்திருந்தான். கடவுள் கிருபையால், ஒரு காசு செலவின்றி எல்லாம் அநுகூலமாய் முடிந்துவிட்டபடியால், அவன் கொணர்ந்த பணம் அப்படியே இருந்தது. இதைக் கொண்டும், இன்னும் கொஞ்சம் ஆளுக்குக் காலும் அரையுமாய்த் தொகுத்தும், தாயம்மாளுக்கு ஒரு நல்ல சேலையும் சுப்பையா பிள்ளைக்கு ஒரு ஜதை பட்டுக்கரை வேஷ்டியும், வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று அவன் யோசனை சொன்னான். மதுரை யும் வீரப்பனும், அதை மனப்பூர்வமாக ஆமோதித்தார்கள். பிறகு, கால்மணி நேரத்திற்கெல்லாம் அவை வாங்கப்பட்டன.

சுப்பையா பிள்ளைக்கும் தாயம்மாளுக்கும், அவ்வெகுமதிகளைக் கண்டதும் மிகவும் வருத்தம் உண்டாகிவிட்டது. தாயம்மாள், அச்சேலையைக் கையால் தொடக்கூட மாட்டேனென்று சொல்லிவிட்டாள். இது, மதுரை செய்த 'கிருத்திரிமம்' என்று, அவள் அவன்மேல் எரிந்துவிழுந்தாள். அதன்மேல், மதுரைக்குக் கோபம் வந்தது. "உங்களுக்கு நெசத்தை ஒணுமின்னா சொல்லி டுறேன். எல்லாத்துக்கும் எம்மேலே தப்புக் கண்டு பிடிக்கறது நாயமா?" என்றான்.

"அந்த நெஜத்தைத்தான் கொஞ்சம் தெரிஞ்சுக்கிறேனே," என்றாள் தாயம்மாள், சலிப்புடன்.

"இதெல்லாம் ஆறுமுகம் செஞ்ச வேலை. வாணாமுடா, அம்மா கோவிச்சுக்கிட்டாலும் கோவிச்சுப்பாங்கன்னிட்டு, நான் சொன்னேன். அவன் கேட்டால்ல? ஒரு மருவாதியம் பண்ணாத நன்னி கெட்ட தடிப்பிள்ளைங்களாட்டம் ஊரு திரும்பறதான்னிட்டு அல்ல, சண்டைக்கு வந்திட்டான்? நான் என்ன கதையா கட்டுகிறேன்? அவனைத்தான் கேளுங்களேன்."

“அவன் சொல்றது உளுமைதானுங்க,” என்றான் ஆறுமுகம் குறுக்கிட்டு: “நீங்க செஞ்ச ஒவகாரத்துக்குப் பர்த்தியா நாங்க பண்ணல்லீங்க. உங்களுக்கு வருத்தம் உண்டாக்கணுமின்னு நாங்க கனவுலேயாவது நெனைப்போமா?”

“பொபு, ஆறுமுகம்,” என்று மதுரை குறுக்கிட்டான்.

“வருத்தம் சந்தோசமெல்லாம் உங்களுக்குத்தானா? எங்களுக் கில்லையா? சேலை வேட்டி எங்க சந்தோசத்துக்காவக் கொடுத்தோமேங்காட்டி, உங்க சந்தோசத்துக்காவ இல்லே. நீங்க எங்களுக்கு எது ஒணுமினாலும் செய்யலாம். நாங்க அறியாப் பசங்க தானே! இருந்தாலும், நாங்களும் மனிசங்க இல்லியா? எங்க மனசுலே இருக்கிறதைக் காண்பிச்சுக்கணுமின்னு இருக்காதா? அதுக்காவ, எங்க கையாலே ஆனதைச் சந்தோசமா வாங்கிக் கொடுத்தால் கோவிச்சுக்கிறதா? இது நாயந்தானுங்களா,” என்றான் மதுரை.

“அம்மாடி! உன்னைப் போலப் பொல்லாத ஆளை நான் பார்த்த தேயில்லை. சரி, வேலுவுக்காக நான் இதை எடுத்துக்கொள்கிறேன்,” என்று சொல்லிக்கொண்டு, தாயம்மாள் சேலையை எடுத்துக்கொண்டாள். பிறகு, “சட்டுனு, நல்ல இடத்துலே கலியாணமா கட்டும்,” என்று அவள் வாழ்த்தினாள்.

“அதைப்பத்தி நீங்க கவலைப்படாதேங்க. சட்டுப்புட்டுனு கண்ணாலத்தை முடிக்க நான் இருக்கேன்,” என்றான் மதுரை. எல் லோரும் கைகொட்டிச் சிரித்தார்கள்.

விடை பெற்றுக் கொள்ளும் சமயம் வந்தபொழுது, ஒவ்வொருவருடைய மனத்திற்கும் கஷ்டம் ஏற்பட்டது. பார்ப்போர்களுக்கு, அவர்கள் வருஷக்கணக்காகப் பழகினவர்கள்போலக் காணப்பட்டார்கள். பிறகு, அடிக்கடி வந்து போய்க்கொண்டு இருப்பதாக வாக்களித்துவிட்டு, மதுரை முதலானோர் வண்டிகளில் ஏறினார்கள்.

அவர்கள் பொன்மலையை அடைந்தபொழுது, சூரியன் மலை வாயில் விழுந்துகொண்டிருந்தது. அவர்களுடைய கிராமத்திலிருந்தும் சிலர் சந்தைக்கு வந்திருந்தனர். வேலன் விடுதலை ஆனதைப்பற்றி, அவர்கள் பேரானந்தப்பட்டார்கள். பிறகு ஆவலுடன், வழக்கு நடந்த விவரங்களைச் சொல்லும்படி, அவர்கள் மதுரையை வற்புறுத்தினார்கள். ஆனால், தன் 'அப்பா'வைக் குறித்து வேலன் கேட்ட பல கேள்விகளுக்குப் பதில் சொல்ல மட்டும் அவர்களுக்குப் பொறுமையில்லை.

"இவ்வளவு துன்பப்பட்ட மனிசனுக்கு, ஒடம்பு எப்படி சொகமாயிருக்கும், வேலு?" என்றான் சோலை வாத்தியார்: "ஆனா, இனிமே எல்லாம் சரியாப் போயிடும். இந்தச் சங்கதி கேட்ட உடனே, ஏந்திருச்சி உக்காந்திருக்கமாட்டான்?"

"நீங்க வளியிலே பிச்சையைக் கண்டீங்களா? — இல்லையே? ஆமாம், நீங்க வண்டியிலே படுத்து இருப்பீங்க; அவனும் ஜம்புலிங்கமுமா ஓடியிருப்பாங்க. சாமி புண்ணியத்துலே நோவு முத்தாமே இருக்கணும்!"

"அதெல்லாம் ஒண்ணும் இல்லே, வேலு. ஆனா, வள்ளி இல்லாட்டி, வெங்கடாசலம் இதுவரையிலும் பொளச்சு இருக்கமாட்டான்! இந்தச் சங்கதி ஊரெல்லாத்துக்கும் தெரியும். வீரப்பா, உனக்கு நல்ல பேரு சொல்ல, உம் மவள் ஒருத்தி போதுமடா!" என்று சோலை வாத்தியார், வீரப்பனைத் தட்டிக் கொடுத்தான்.

நல்ல நிலவு இருந்ததால், அஸ்தமித்துச் சிறிது நேரத்திற்கெல்லாமே வண்டிகள் பூட்டப்பட்டன. காலிவண்டிகள் அநேகம் இருந்ததால், ஒவ்வொருவருக்கும் வெகு சௌகரியமாக இடம் கிடைத்தது. வேனிற்காலமாகையால், கூடில்லா வண்டிகளுக்கே கிராக்கி அதிகம் இருந்தது. பகலெல்லாம் மண்டையைப் பிளப்பதுபோல வெயில் அடித்து, இரவில் குளிர்ந்த காற்று வீசவே, உடம்பிற்கு உணர்வும் மனத்திற்குச் சாந்தியும் ஏற்பட்டன. எங்கும் அமைதி குடிகொண்டிருந்தது. மேகமற்ற வானத்தில், சந்திரன் பால்போல் நிலவு பொழிந்து கொண்டிருந்தது. கண்ணெட்டின வரையிலும் ஒரே

பச்சை. மாடுகள் அசைந்து அசைந்து அடிமேல் அடி வைத்து நடப்பது, அவர்களுக்குத் தூளியில் போட்டு ஆட்டுவது போலிருந்தது. மனம் பூரித்துச் சிலர் பாடத் தொடங்கினர். ஆனால், பாடும் பாவனையேடு அதிகக் கூச்சலிட்டவன் ஆறுமுகமே. ஏனெனில், அவன் மனத்தைப் பூரித்தது இயற்கை அழகுமட்டுமல்ல; சேர்க்கை வஸ்துவும் ஒன்று இருந்தது. அவன் எப்படியோ யாருக்கும் தெரியாமல், பொன்மலை கள்ளுகடையில் நுழைந்து வந்துவிட்டான்! இவ்விஷயம் தெரிந்தபின், அவன் சிநேகிதர்கள் அழுவதா சிரிப்பதா...?

நேரம் ஏற ஏறத் தூக்கம் அதிகரித்துப் பாட்டும் பேச்சும் படிப் படியாய்க் குறைந்தன. மற்றும் சிறிது நேரத்திற்கெல்லாம், ‘கடக்கு முடக்கு’ என்று வண்டிச் சக்கரங்கள் சுழலும் ஓசையைத் தவிர, மற்ற எல்லாம் ஒரே நிசப்தமாயிருந்தது.

விடியற்காலம் இருட்டோடே, போக்கு வண்டிகள் வீரமங்கலத்தை அணுகின. இவ்வண்டிகளில்தான் வேலன் வர வேண்டுமென்பது அலமேலுவுக்கு நன்றாகத் தெரியுமாகையால், பாதி இரவுக்குப் பிறகு, தூக்கம் பிடிக்காமல் அவள் வீட்டிற்குள்ளே இங்குமங்கும் அலைந்துகொண்டிருந்தாள். ஆகையினால், வண்டிச் சத்தம் கேட்டமாத்திரத்தில், அவள் பதறப் பதறத் தெருக்கதைவைத் திறந்து வெளியே ஓடிவந்தாள். குறட்டின் மீது நின்றுகொண்டு, அவள் வண்டிகள் வரும் திசையை நோக்கி, உற்றுப் பார்த்தாள். இரண்டு வண்டிகள் மட்டும் புலப்பட்டன. ஆனால், சங்கிலி ஓசையிலிருந்து, வேறு வண்டிகளும் சற்றுத் தூரத்திற்குப் பின்னால் வருவதாகத் தெரிந்தது. முதல் இரண்டு வண்டிகளும், கிட்டக் கிட்ட வந்து கொண்டேயிருந்தன. அலமேலுவுக்குச் சஞ்சலம் அதிகரித்தது. முதல் வண்டி வீட்டுக்கு எதிரே வந்துவிட்டது! தன் அருமைக் குழந்தையின் பெயர், அவள் நாவில் துடித்தது. ஆனால், அவ்வண்டியும் அதன் பின் வந்ததும், நில்லாமல் ஊர்ந்து கொண்டே சென்றன! அவை அயலூர் வண்டிகள் என்பதில் சந்தேகமில்லை. அவள் ஒரு பெருமூச்சுவிட்டுத் தன் ஏமாற்றத்தைச் சமாளித்துக் கொள்ள முயன்றாள்.

ஆனால், அவள் இருதயம் இன்னும் சற்று வேகமாக அடித்துக்கொண்டது. விபரீதமான எண்ணங்கள் அவள் மனத்தில் உதிக்கத் தொடங்கின.

மற்றும் சில வண்டிகள் ஊருக்குள் நுழைந்தன. அவள் கண் களைக் கசக்கிக்கொண்டாள்; நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டாள். ஒரு க்ஷணம்கூட அவளால் அமைதியாய் இருக்க முடியவில்லை. கைகளைப் பிசைந்துகொண்டும் விரல்களைச் சொடுக்கிக்கொண்டும் அவள், குறட்டை விட்டுக் கீழே தெருவில் இறங்குவதும் மறுபடியும் குறட்டின் மேல் ஏறுவதுமாக இருந்தாள். வண்டிகள் வீட்டிற்குச் சுமார் பத்து கஜ தூரத்தில் வந்து விட்டன. அப்பொழுது, தொடரின் இரண்டாவது வண்டியிலிருந்து ஒருவன் கீழே குதித்தான். அதே சமயத்தில், தன் அருமைப் புதல்வனின் குரலைக் கேட்டு, அவள் ஆனந்த பரவசமாய் ஸ்தம்பம்போல் நின்றாள்.

"அம்மா! அம்மா!!" என்று கூவிக்கொண்டு, வேலன் அவளிடம் ஓடிவந்தான். அலமேலு அவனைக் கட்டித் தழுவித் தேம்பி தேம்பி அழுதாள். பிறகு, ஒவ்வொருவராக மதுரை முதலானவர்கள் வந்து சேர்ந்தார்கள். வாயைத் திறந்து பேச, வேலனுக்கும் அவன் தாய்க்கும் இரண்டொரு நிமிஷங்கள் பிடித்தன.

"வாணாம்மா! அளுவாதேம்மா! நான் வந்தப்புறம் ஒனக்கு என்ன கொறவு, நம்ம துன்பமெல்லாம் நீங்கிப் போச்சு. வாணாங்கிறேனே," என்று தன் தாயை, வேலன் தட்டிக்கொடுத்துச் சாமாதானப்படுத்தினான். பிறகு, "அப்பா முளிச்சிக்கிட்டு இருக்குதா?" என்று கேட்டுக்கொண்டே, அவன் அவளை மெதுவாக உள்ளே அழைத்துச் சென்றான். கேட்டதுக்குப் பதில் சொல்லாமல், "என் கண்ணே, சோறு தண்ணியில்லாதே உன்னைச் சாவடிச்சிட்டாங்களே! படுபாவிங்க! எலும்பாக்கிட்டாங்களே!" என்று அவள் புலம்பினாள்.

"ஒடம்பு சரியாவ எத்தினி நாளாவும் அம்மா? வள்ளி தூங்குதா?"

"ஆ! வள்ளியா? என்னைப் பெத்த அம்மா! என் தங்கமாச்சுதே! அட ராசா! இனிமே அது நம்ம ஊட்டைவிட்டுப் போவாது," என்று பலவாறு

பேசிக்கொண்டு, அவனோடு வெங்கடாசலத்தின் அறைக்குச் சென்றாள். மதுரையும் வீரப்பனும் கூடவே சென் றார்கள்.

அவ்வறையில் ஒரு மூலையில், ஒரு சின்ன மண்ணெண்ணெய்த் திரிவிளக்கு மினுக்கு மினுக்கென்று எரிந்துகொண்டு இருந்தது. வெங்கடாசலம் விழித்துக் கொண்டிருந்தபோதிலும், வேறு நினைவோடு கூரையைப் பார்த்தபடி, நகங்களைக் கிள்ளிக் கொண்டு இருந்தான். அரையில் ஒரு கந்தையைத் தவிர, அவன் உடம்பில் வேறு ஆடை ஒன்றும் இல்லை.

அவன் கால்களும் கைகளும் சூம்பிக் கிடந்தன. பார்ப்பதற்கு, அவன் தன் பிராயத்திற்கு இருபது வருஷங்கள் அதிகமாகக் காணப்பட்டான்.

"அப்பா! அப்பா!!" என்று வேலன், குனிந்து அன்பு ததும்ப அவன் கைகளைப் பிடித்துக்கொண்டான்.

வெங்கடாசலம் திடுக்கிட்டான். மங்கலடைந்த கண்களை மூடி மூடித் திறந்தான். பிறகு, கண் கொட்டாமல் வேலனை உற்றுப் பார்த்தான். ஆச்சரியமும் ஆனந்தமும் அவன் முகத்தில் உதித்து, இதழ்கள் அசைந்து, மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்க, "வேலு.. ஆ.. வேலு வந்துட்டையா, அப்பா, என் ராசா!" என்று அவன், வேலனின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான். ஒரு நிமிஷத்துக்கப்புறம், வேலன் மெதுவாக வெங்கடாசலத்தின் கைகளை எடுத்துவிட்டுக் கட்டிலின் மீது அவன் பக்கத்திலே உட்கார்ந்தான். "இனிமே நமக்கு ஒரு தீங்கும் வராது, அப்பா. நம்ம கெட்ட காலமெல்லாம் போச்சு. நெசமாலும் அப்பா, நீ ஒணுமின்னாப் பாரு," என்றான்.

"அட கொளந்தே! நீ திரும்பி வந்ததே எனக்குப் போதாதா? எனக்கு வேறே என்ன ஒணுமுடா?" பிறகு, முதன் முதலாக மதுரையையும் வீரப்பனையும் பார்த்துவிட்டு, "வாங்கடா! வாங்கடா!! ஏன் அங்கே நிக்கறீங்க? மதுரை! வீரப்பா! — நீங்க இல்லாட்டி, என் கொளந்தையைக் கண்ணாலே கண்டிருப்பேனா? வாங்கடா! கையைக் கொடுங்கடா," என்று கெஞ்சினான்.

“நாங்க வேத்து மனிசங்களா, வெங்கடாசலம்? அதுவும் நாங்க என்னா செஞ்சோம்? எல்லாம் அவன் வேலை. ஆனா, நீ இவ்வளவு இடிஞ்சிடுவேன்னிட்டு நான் நெனைக்கில்லைடா அப்பா!” என்று வெகு உருக்கமாய்ச் சொன்னான் மதுரை.

“வெங்கடாசலம், வீணா மனசைப் புண்ணாக்கிக் கொள்ளாதே. இன்னியோடு உன் கவலை எல்லாம் தீந்து போச்சின்னிட்டு வச்சுக்கொள்ளு,” என்று வீரப்பனும் சமாதானப்படுத்தினான்: “ஒரு மவனோடு ஒரு மவளும் ஒனக்கு வந்தாச்சுதே. இனிமே, உன் பொறுப்பெல்லாம் அவுங்களுதுதானே? நாலு நாளுலே உன்னை ஆளாக்கிடமாட்டாங்க? இப்படி எலும்பும் தோலுமாவா...”

உடனே மதுரை, வீரப்பனைக் கடுத்துப் பர்த்தான்; வீரப்பன் தன் குற்றத்தை அறிந்து, பேச்சை அடக்கிக் கொண்டான். அதே சமயத்தில், வள்ளி உள்ளே நுழைந்தாள். அவள் கண்கள், இன்னும் தூக்கக் கலக்கமாகவே இருந்தன. கூந்தலும் கலைந்துபோயிருந்தது. திடீரென்று, அவள் கண்களில் ஒளி வீசிற்று.

“நீ எப்போ வந்தே?” என்று ஆனந்த பரவசத்தோடு, அவள் வேலனைக் கேட்டாள்; பிறகு, கண்கொட்டாமல் அவனைப் பார்த்துக்கொண்டே நின்றாள்.

“இப்போதான். என்ன இப்படி இலச்சிப்போனையே!”

“நானா? உன் கண்ணும் மூக்கும் இல்லாட்டி, உன்னைக் கண்டுக்கவே முடியாதே!” என்று அவள், அவன்மேல் வைத்த கண்களை அகற்றாமலே சொன்னாள். இருந்தாற்போலிருந்து, அவள் இதழ்கள் துடித்துக் கண்கள் கலங்கின. பிறகு, துக்கத்தைப் பொறுக்க முடியாமல் அவள் வெளியே சென்றாள். வேலனும் பின் தொடர்ந்தான். தனிமையாய் வந்ததும், வள்ளி விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டாள். வேலன், அவளைத் தட்டிக்கொடுத்து நல்ல வார்த்தைகளைச் சொல்லித் தன் மனப்பூர்வமான அன்பைப் பல விதங்களிலும் விளக்கிக் காட்டி ஆறுதல் செய்தான். ஒருவாறு அவளுடைய

அழுகை ஓய்ந்ததாயினும், தேம்புதல் மட்டும் நிற்கவில்லை. பேசமுயன்றால் மறுபடியும் அழுகை வந்துவிடும் போலிருந்ததால், அவள் வாயைத் திறவாமல் வேலனைப் பார்த்த வண்ணம் நின்றாள். அக்காதலர்களின் கண்கள், நாவிலும் பதின்மடங்கு தெளிவாகப் பேசிக்கொண்டன. சில நிமிஷங்களுக் கெல்லாம், வள்ளி கஷ்டத்துடன் சமாளித்துக்கொண்டு, ‘‘நல்லா இருக்காது; நான் போறேன்,’’ என்று சொல்லிவிட்டுச் சமையல் அறைப் பக்கம் சென்றாள். வேலனும் தன் ‘அப்பா’வினிடம் போனான். பிறகு மதுரை, வீட்டிற்குப் போய் மனைவி மக்களைப் பார்த்து வருவதாக விடை பெற்றுக்கொண்டான். வேலனும் வீரப்பனும், வெங்கடாசலத்தின் கட்டில்மீது தலைக்கொரு புறமாய் உட்கார்ந்து, தங்கள் அனுபவங்களைச் சொல்லிவந்தார்கள். வெங்கடாசலம் ஆச்சரியத்தோடு அவற்றைக் கேட்டுவந்தான்.

## 22. வாழ்க்கையின் விசித்திரம்

சூரியோதயம் ஆயிற்று. வள்ளியும் அலமேலுவும், சமையல் அறையில் மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தார்கள். வேலன் திரும்பிவந்த செய்தி, ஊரெங்கும் பரவிவிட்டது. கிராமத்தினர், கும்பல் கும்பலாக அவனைப் பார்க்க வந்து கொண்டே இருந்தார்கள். வந்தவர்களுக்கெல்லாம் பதில் கூறுவது, வேலனுக்குச் சற்று அலுப்பாய்த்தான் இருந்தது. ஆயினும், அவர்கள் அனைவரும் விசுவாசமுள்ளவர்களாகையால், அவர்கள் மனம் நோவாதபடி அவன் நடந்துகொண்டான்.

அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு, ஓய்வு ஒழிவு இராது போல் தோன்றிற்று. பேச்சுக்கு இடம் கொடுத்தால் உடும்பு போல் பிடித்துக் கொள்ளுபவர்கள், கிராமத்தில் இரண்டொருவர் உண்டு. அவர்களும், திண்ணையில் முளையடித்து விட்டார்கள். வேலனுக்கு வேதனை பொறுக்க முடியவில்லை. அடிக்கடி உடம்பை ஒடித்துக்கொண்டான்; கொட்டாவி விட்டான். என்ன செய்தும், அவன் சிரமத்தை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. இந்தச் சமயத்தில், நல்லவேளையாய் வள்ளி அவன் உதவிக்கு வந்தாள்.

"கொஞ்சம் உள்ளே வாரையா? — மாமா, அது நல்ல தீனி கண்டு எத்தினி நாளாச்சோ! கொஞ்சம் சூடாப் பலவாரம் திங்கட்டும்," என்று வள்ளி, ஓர் உடும்பைப் பார்த்துச் சொன்னாள்.

"திங்கட்டும் அம்மா, திங்கட்டும்," என்றான் அவன்.

"அட, பேச்சு எங்கே ஓடிப்போவுது? அவன் செத்துச் சுண்ணாம்பாயி வந்திருக்கான். சாப்பிட்டுக் கீப்பிட்டு எளப்பாறட்டும். அப்பா வேலு, சாயங்காலம் சாவடிக்கு வந்திடு; ஆர அமரப் பேசிக்கலாம்," என்றான் மற்றொருவன். அவன் உடும்பு இனமல்ல; எழுந்து சென்றான். அதன்மேல், நச்சுப் பேச்சுக்காரர்களும் அவ்விடத்தை விட்டு நகரவேண்டியிருந்தது.

வேலன் உள்ளே நுழையும்பொழுது, மற்றும் சிலர் அவனைத் தேடி வந்ததாக அவனுக்குத் தெரிந்தது. ஆனால் வள்ளி, அவனைத் திரும்ப விடாமல் உள்ளே இழுத்துச் சென்று, பலகாரத்தை வைத்தாள்.

''அப்பாவுக்கு இல்லியா — நம்ம அப்பாங்களுக்கு,'' என்றான் வேலன், வள்ளியைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு.

''இதோ எடுத்துக்கிட்டுப் போறேனே! அவுங்க ரெண்டு பேரும் ஒண்ணாச் சாப்பிடுவாங்க,'' என்று அலமேலு, சிரித்த முகத்தோடு பலகாரத்தை எடுத்துக்கொண்டு வெங்கடாசலத்தினிடம் சென்றாள்.

ஒரு துண்டை மென்றுகொண்டே வேலன், வள்ளியைப் பார்த்த வண்ணம் இருந்தான். வள்ளி சிரித்துத் தலையைக் குலுக்கி, ''நீ சாப்புடாட்டி நான் அப்பாலே போறேன்,'' என்றாள்.

''இவ்வளவா போடுவாங்க, நான் எப்படித் திங்கிறது? இரு, ஜம்புலிங்கம் குரலு கேக்குதே. என்ன ஓணுமோ தெரியில் லையே; பாத்திட்டு வரட்டா?'' என்று வேலன் எழுந்திருக்க முயன்றான். ஆனால் வள்ளி, அவனைப் பலாத்காரமாய் உட்காரவைத்து, இலையில் வைத்த பலகாரம் முழுதையும் தின்று போகும்படி வற்புறுத்தினாள். அவள் பேச்சைத் தடுக்க மாட்டாமல் வேலன், மென்றும் மெல்லாமலும் விழுங்கிவிட்டு வெளியே போனாள்.

ஜம்புலிங்கம், வெங்கடாசலத்தின் அறையில் இருந்தான். அவன், பொதுவாகக் கொலை வழக்குகளைப் பற்றி வீரப்பனை ஏதோ கேட்டுக்கொண்டிருந்தான்.

''வழக்குப் பேச்சை இன்னும் உடமாட்டீங்க போலிருக்குதே,'' என்றான் வேலன், அவர்கள் சம்பாஷணையில் கலந்துகொண்டு.

''அது இல்லே, வேலு. ஜம்புலிங்கத்துக்கு ஒரு பெரிய சந்தேகம் வந்திடுச்சி. இப்போ, ஒருத்தனை ஒருதரம் விடுதலை ஆக்கிட்டா, மறுபடியும்

பிடிச்சுப்பாங்களாங்குது.''

``அதை யாரு கண்டாங்க? இந்தப் பேச்சு எதுக்காவ வந்திச்சு,'' என்று வேலன் கேட்டான். வெங்கடாசலம் உற்றுக் கவனிப்பதைப் பார்த்து, ஜம்புலிங்கம் சற்றுத் தயங்கினான்.

``என்ன யோசிக்கிறே, சங்கதியைச் சொல்லேன்,'' என்றான் வேலன்.

``ஒண்ணும் இல்லே, வேலு. அன்னிக்கு வந்த போலீசு இனிஸ் பெட்டர் ஐயாவும் ரெண்டு சேவுகன்களும், நம்மூருக்கு வந்திருக் காங்க,'' என்று ஜம்புலிங்கம், இழுத்தாற்போல் சொன்னான்.

வேலன் சிரித்தான்.

``நீ ஒரு பயித்தியம். ஊருன்னா அவுங்களுக்கு வேலையிருக்காதா, எத்தினியோ சோலி. சேவகன் ஊருக்குள்ளே வந்தா, நீ அதை எனக்காவத்தானின்னு வச்சிட்டே. நல்ல ஆளுடா நீ'' என்று வேலன், மறுபடியும் சிரித்தான்.

``அது இல்லே, வேலு. அவங்க ஒன்னைப்பத்தி விசாரிச்சுக்கிட்டு இருந்தது என் காதுலே உளுந்திச்சு. அதுக்காவ இல்லே சொல்றேன்.''

``என்னாது! அவங்க ஏன் விசாரிக்கணும்?'' என்றான் வெங்கடாசலம் பதறிக்கொண்டு. அவன் கண்களில் தீப்பறந்தது. ஆத்திரத்தால் கை கால்கள் நடுங்கின.

``ஒண்ணுக்கு ஒண்ணைக் கேட்டிட்டு, நீ ஒளர்றே. ஜம்பு, உன் பேச்சு நம்புறாப்போல இல்லியே,'' என்றான் வேலன். ஆனால், அவன் குரலில் சற்றுக் பயம் தட்டிற்று.

“நெசமாலும், எனக்கு ஒண்ணும் விளங்கல்லே, வேலு. இப்போ, பிச்சை வந்தால் சங்கதியெல்லாம் தெரிஞ்சுபோவுது; அவன் அவங்களையே சுத்திக்கிட்டு...”

“இதோ! வந்திட்டானே, பிச்சை!” என்று வேலன், பிச்சை அலறிப் புடைத்துக்கொண்டு ஓடிவருவதைப் பார்த்துத் திடுக்கிட்டுச் சொன்னான்.

“வேலு! வேறு எங்கேனாச்சும் ஓடி ஒளிஞ்சிக்கோ! அந்தப் போலீசுக்காரப் பயக, மறுபடியும் உன்னைத் தேடிக்கிட்டு வரானுக! ஓடு! இங்கே வந்திடுவானுக...”

“மறுபடியுமா போலீசுக்காரங்க வந்துட்டாங்க! மறுபடியுமா! மறுபடியுமா!! மறுபடி..ஈ..ஈ..ஈ..ஈ...” என்று கூக்குரலிடும் போதே, வெங்கடாசலத்திற்கு வலிப்பு வந்துவிட்டது.

“ஐயோ, அப்பா! அப்பா!” என்று கதறிக்கொண்டு, வேலன் வெங்கடாசலத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். “பிச்சே! அது மொவத்துலே கொஞ்சம் தண்ணியைத் தெளியேன். ஏ மாமா ஜம்பு, காலைப் பிடிச்சுக்கோ! ஒரு சாவி கொண்டா; சட்டுனு கொண்டா!” என்று கெஞ்சினான். வெங்கடாசலத்திற்கு வலிப்பு முற்றிவிட்டது. கால்களும் கைகளும், வெகு விரைவாக ‘விலுக்கு, விலுக்கு’ என்று உதைத்துக் கொண்டன. கண்விழிகள் மேல் இமைகளுக்குள் இழுபட்டு, அநேகமாய் மறைந்து போயின. மோவாய்க் கட்டை, கோரமாக ஒருபுறம் ஒதுக்கப்பட்டது. திடீரென்று, அவன் உடம்பு ஒரு துள்ளுத் துள்ளிற்று; மறு க்ஷணத்திலே, அவன் வலிப்பு நின்று விட்டது. தொண்டையில், சில விநாடிகளுக்குக் ‘கள கள’ வென்று சத்தம் கேட்டது. பிறகு, அவன் அசைவற்று விழுந்துவிட்டான். ஜம்புலிங்கம் ஓயாமல் விசிறினான்; பிச்சை, ஈரத் துணியால் அவன் முகத்தைத் துடைத்தான்; வீரப்பன், அவன் மார்பைத் தொட்டுப் பார்த்தான். அவன் முகத்தில் அதிருப்தி ஏற்பட்டது. பிறகு அவன், வெங்கடாசலத்தின் தாதுவைப் பிடித்துப் பார்த்துவிட்டு, வெகு துக்கத்தோடு தலையை ஆட்டினான்.

“ஏ, மாமா! ஏன் தலையாட்டுறே?” என்று வேலன், மிகவும் பரிதாபமாகக் கெஞ்சிக் கேட்டான்.

அலமேலு துக்கத்தை அடக்க முடியாதவளாய், வாயை இறுக மூடிக்கொண்டு குமுறினாள். அச்சமும் அமைதியும், அவ்வறையில் குடிகொண்டுவிட்டன. ஒவ்வொருவர் முகத்திலும் சோகம் தாண்டமாடிற்று. வேலுனுக்கு ஆவி குலைந்து போவதுபோல் இருந்தது. அனைவரும், அளவில்லா அன்போடும் பரிதாபத் தோடும் தன்னைப் பார்ப்பதை அவன் உணர்ந்தான். அவனுக்கு மாரடைப்பது போலிருந்தது. “ஏ, மாமா! சங்கதி என்ன?” என்று கெஞ்சினான். இன்னுங்கூட, உண்மையை அவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை.

வீரப்பனுக்கு நாவில் வார்த்தை எழும்பவில்லை; எச்சிலைக் கூட விழுங்கமுடியாமல் தொண்டை கட்டிக்கொண்டது. பிறகு, கஷ்டப்பட்டுக் கனைத்துக்கொண்டு, வேலனின் தலையைத் தடவிக்கொடுத்துச் சொன்னான்: “அப்பா! வேலு! அவன் பாடெல்லாம் தீந்துபோச்சுடா! இனிமே, யாரும் அவனை இமுசை செய்ய மாட்டாங்கடா! ஐயோ! வெங்கடாசலம். என்ன விதிடா! உனக்கு இப்பயுமாடா ஆவணும்! அடபாவி! இந்தக் கதி வரு மிண்ணு நான் கனவுலேயும் நெனைக்கில்லியேடா! ஐயோ, கடவுளே!” என்று பலவாறாக வீரப்பன், மெய்ம்மறந்து புலம்ப ஆரம்பித்துவிட்டான்.

“ஐயோ! ஐயோ!” என்று தலையில் அடித்துக்கொண்டு, அல மேலு கதறிக் கதறி அழுதாள். கண்ணும் கண்ணீருமாய், வள்ளி அவளைச் சமாதானப்படுத்த எவ்வளவு முயன்றும், பயன்பட வில்லை. ஆனால் வேலன் மட்டும், குனிந்த தலை நிமிராமல் பல்லைக் கடித்துக்கொண்டு சிலைபோல் நின்றான். அவன் கண்களில் ஒரு சொட்டு ஜலமில்லை. பார்ப்போருக்கு, அவன் முகம் ஊதியிருந்ததுபோலக் காணப்பட்டது. அவன் படும் கஷ்டத்தின் கடுமையை, அவன் பிராண சிநேகிதர்களான ஜம்புலிங்கமும் பிச்சையுமே அறிந்தார்கள். அழுகைக் குரலைக் கேட்டு, அக்கம்பக்கத்தாரெல்லாம் ஓடிவந்தார்கள். அதில் ஒருத்தி, இன்னும் உயிர் இருந்தாலும் இருக்கலாமென்று சந்தேகித்துக் கிராம வைத்தியனான பரியாரி முத்தையனை

அழைத்து வரும்படி, பிச்சையைக் கட்டாயப்படுத்தினாள். பிச்சையும் அதற்கு இணங்கினான். செத்தவன் பிழைத்து விடுவானென்ற நம்பிக்கை அவனுக்கு இல்லாவிடினும், அவன் வேறு எண்ணத்தை உத்தேசித்து வெளியே சென்றான். எப்படியாவது அந்தப் 'போலீஸ் பாவி'களை, அந்தச் சமயத்தில் உள்ளே வரவொட்டாமல் செய்துவிட வேண்டு மென்பதுதான் அவன் கருத்து.

நாலைந்து வீடுகள் தாண்டிப் போனதும், அவன் கண்ட அதிசயத்தால், அவன் தன் கண்களையே நம்ப முடியாமல் போனது. மதுரை மாமனும் அந்தப் போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரும், அப்படிக் குலுங்கக் குலுங்கச் சிரித்துப் பேசுவதற்கு என்ன காரணம்? ஐயோ! மதுரை, இன்ஸ்பெக்டரைத் தட்டிக் கொடுத்துப் பேச ஆரம்பித்து விட்டானே! என்ன சுதந்திரம்! மதுரை மாமனுக்குப் பித்துபிடித்துப் போய்விட்டதோ? அப்படிச் சந்தேகிக்கவும் இடமில்லையே! இதென்ன வேடிக்கை! இவ்வாறு பிச்சை தவித்துக்கொண்டிருக்கையில், மதுரையே பிச்சையைக் கண்டதும், பேச ஆரம்பித்தான்:

“பிச்சே! பிச்சே! வேலுவும் வெங்கடாசலும் ஒரு அடி அடிச்சாங்கடா! அவங்க லச்சாதிபதி ஆயிட்டாங்கடா! சோதிச்சுச் சோதிச்சுச் சாமி கடைசியிலே கண்ணைத் தொறந்து பாத்திச்சு அப்பா! இப்போ, எனக்கே லச்ச ரூவா வந்திட்டாப்போலே இருக் குது!” என்று மதுரை, பரமானந்தத்தோடு சொன்னான்.

“நீ சொல்றது ஒண்ணும் விளங்கில்லியே மாமா!” என்று பிச்சை, திரு திருவென்று விழித்தான்.

“உனக்கு மட்டுமா? யாருக்கும் விளங்காது. பிச்சே! கதை யாட்டமல்ல இருக்குது! ஆனா, அவ்வளவும் நெசம். அப்பாவு, அதுதான் வேலுவோடே அப்பன், பினாங்குக்கு ஓடிப்போனது நீ கேட்டிருக்காயில்லே? — அது வெகுநாளைச் சங்கதி. அதுங்கிட்டேருந்து பத்து வருசமா கடுதாசு ஒண்ணும் இல்லாத்துனாலே, அது பாவம், செத்துட்டுதாக்கு மின்னிட்டு நாங்க வச்சிக்கிட்டோம். ஆனா, அது சாவவும் இல்லே; ஒண்ணுமில்லே. ஒரு

வெள்ளைக்கார யசமான் உயிரை அது காப்பாத்தின சங்கதி உனக்குத தெரியுமில்ல. (தெரியுமென்று பிச்சை தலையை ஆட்டினான்.) ஒரு ஆறு மாசத்துக்கு முன்னாலே, அந்த யசமான் செத்துப் போச்சாம். சாவுறப்போ, தன் சொத்துலே பாதியை அப்பாவுக்கு எளுதி வச்சிட்டுதாம். அது எவ்வளவின்னிட்டு நெனைக்கிறே? ஆறு லச்ச ரூவாயாம்! ஒண்ணு ரெண்டு இல்லே! யசமான் செத்த ரெண்டு மூணு வாரத்துக்கெல்லாம், இதுவும்...''

''செத்துடிச்சா!'' என்றான் பிச்சை, ஆத்திரம் பொறுக்கமாட்டாமல். ''பின்னே, என்னாங்கிறே?'' என்றான் மதுரை. ''பாவம், நம்மூருக்குப் பொறப்பட்டு வந்துடணுமின்னிட்டு, ஏற்பாடுங்க செஞ்சிக்கிட்டு இருந்திச்சாம். இருந்தாற்போல் இருந்து, ரெண்டு நாள் காச்சல் அடித்ததாம். அவ்வளவுதான்; போயிட்டுது. ஆனா, அதுக்குமட்டும் தெரிஞ்சுபோச்சாம். அதனாலே, சட்டுப் புட்டுனு உயிலு எளுதி, அந்த ஆறு லச்சத்திலே மூணு லச்சத்தை, அந்த ஊருலே இருக்குற ஏளை பாளைங்களுக்குத் தருமத்துக்காவ வச்சிட்டுதாம். மீதி மூணு லச்சத்தை, வேலுவும் வெங்கடாசலமும் ஆளுக்குப் பாதியாய் பங்கிட்டுக்கிணுமின்னு எழுதிட்டுதாம். ஒவ்வொத்தருக்கும் பணத்தைச் சேக்க வேண்டிய பொறுப்பையும், அது அந்த ஊரு சர்க்காரான் தலையிலேயே போட்டிடுச்சாம் — அதுன் யோசனைப் பாத்தியா, பிச்சே?'' என்று மதுரை, வியந்து சொன்னான்.

பிச்சை பெருமூச்சு விட்டுத் திணறினான். ''இதெல்லாம் உனக்கு யாரு சொன்னாங்க?'' என்று சொல்லிப் பிச்சை மதுரையையும் போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரையும் மாறி மாறிப் பார்த்தான்.

''இதோ, ஐயா வந்திருக்காரே; இதைச் சொல்லத்தானே வந்திருக்காரு? அந்த ஊரு சர்க்காரான், கண்ணைமூடிக்கிட்டு யாருக்காச்சும் பணம் கொடுத்திடுவானா? இன்னான்தான் வேலு, வெங்கடாசலமின்னு ருசுப்பண்ண வாணாமா? இல்லாட்டி, நானும் வெங்டாசலமின்னு சொல்லிக்கிலாம் இல்லியா? அந்த ஊரு சர்க்காரு நம்ப சர்க்காருக்கு எளுதி, அதுன் பேருலே அவுங்க நம்ப ஐயாவை அனுப்பிச்சிருக்காங்க,'' என்றான் மதுரை, ஸப் இன்ஸ்பெக்டரைச் சுட்டிக்காட்டி. ''இந்தக் கிராமத்துலே இப்பேர்க் கொத்த

ஆளுங்க இருக்காங்க; அப்பாவு உயிலுலே கண்டிருக்கறது நெசமாலும் அவுங்கதான் இன்னிட்டு, அவரும் எளுதணுமல்ல?'' என்றான்.

“அந்தச் சங்கதி, எனக்கு இங்கே வருவதற்கு முந்தியே தெரியாதா? வேலன் கேசுலேயே, எல்லாச் சங்கதியும் அடிபட்டு ரிகார்டு ஆயிருக்குதே, அப்பா. இருந்தாலும் என் கடமையைச் செய்யணும் பாரு; அதற்காக வந்தேன். அதோடு கூட, அப்போ அவனைத் துன்பத்துலே வைக்கிறதுக்கு நான் வரவேண்டியதாயிருந்தது. அதனாலே, இப்போ சுகத்துலே வைக்கறதுக்கும் நானே வந்துவிட்டேன்,'' என்று ஸப் இன்ஸ்பெக்டர் சிரித்தார்.

“ஐயையோ! எங்களுக்குத் தெரியாமே போச்சே!'' என்று பிச்சை, கைகளால் முகத்தை மூடிக்கொண்டான்.

“என்னாதுடா பிச்சை?'' என்று மதுரை திடுக்கிட்டுக் கேட்டான்.

“ஏ, மாமா! வெங்கடாசலம் மாமன் செத்திடுச்சு!''

“என்னாது! என்னடா பேத்தறே? பித்துக் கித்துப் பிடுச்சுப் போச்சா?''

“இல்லே மாமா, இல்லே! மெய்யாலும் அது போயிடுச்சே!'' என்று வெகு துக்கத்தோடு கதறிக்கொண்டு, போலீஸ் அதிகாரி யைப் பார்த்துப் பிச்சை சொன்னான்.

“எசமான், ஒங்களைப் பாத்ததும் எங்களுக்குத் திகிலாப்போச்சு. ஐயோ, சாமி! மறுபடியும் வேலுவைப் பிடிக்க வாரீங்கன்னிட்டு எண்ணிக்கிட்டோம். நடுக்கத்துலே, வெங்கடாசலம் மாமனுக்கு வலிப்பு வந்திடிச்சு. புளுவாத் தவிச்சுப் போச்சு. பொறவு, இருந்தாற்போல இருந்து, ஒரு நிமிசத்துக்கெல்லாம் உயிரு போயிடுச்சு. என்னா செய்யணுமின்னுகூட எங்களுக்குத் தெரியாமே போச்சே!'' என்று பிச்சை துக்கித்தான்.

''அவன் செத்துட்டானா! வெங்கடாசலம் செத்துட்டாô்னா! நான் நம்புல்லேடா! அட பாவி மகனே! என்னாடா செஞ்சே! அப்பா வெங்கடாசலம்! வெங்கடாசலம்! ஐயோ! ஐயோ!'' என்று மதுரை தவித்து, கனத்தால் சரிந்து விழக்கூடாதென்று பயப்படுவதுபோல், அடிவயிற்றை இரு கைகளாலும் இறுகப் பிடித்துக்கொண்டான். பிறகு அவன், 'லொங்கு லொங்கு' என்று வெங்கடாசலத்தின் வீட்டிற்கு ஓடினான்.

''ஆஹா! என்ன அநியாயம்!'' என்றார் போலீஸ் அதிகாரி: ''அட, நீங்கள் யாராவது என்னைக் கேட்டிருக்கக்கூடாது? போலீஸாருக் குக் கைது செய்வதைத் தவிர வேறு வேலை இல்லையா? எனக்கல்ல கஷ்டமாயிருக்குது? நான் வந்திராவிட்டால், கிழவன் சாக மாட்டான் இல்லையா? — அதுவும், அவனுக்குப் பெரிய பாக்கியம் வந்தபோது! சே, சே, ரொம்ப மோசம்! அட, மூளை கெட்ட பயல்களா! அநியாயமாய் ஒருவனைக் கொன்னுட்டீங்களே! ஆனால், இதற்கு நானென்ன செய்வேன்? ஓ சரி, போனது போச்சு; நான் இன்னும் கொஞ்சநாள் கழித்து வருகிறேன். உன் சிநேகி தனுக்கு நான் கட்டாயம் ஆறுதல் சொல்ல வேண்டும். அப்பவும் யாரையாவது கொன்றுவிடாதேயுங்கள்,'' என்று அவர் சலித்துக் கொண்டு, சேவகர்களுடன் போய்விட்டார்.

பிச்சை, வேலனுடைய வீட்டிற்கு ஓடினான். அங்கே குழப்பம் அதிகரித்துவிட்டது. அநேகர் வந்து கூடிவிட்டனர். பெண்பிள்ளைகள், ஒப்பாரிவைத்து அழுதுகொண்டிருந்தார்கள். வேலன், தலை யில் கைகளை வைத்துக்கொண்டு, ஒதுக்கமாய் உட்கார்ந்து கொண் டிருந்தான். அவன் வாய்க்குப் பூட்டுப் போட்டாற்போல் இருந்தது.

ஆனால் மதுரை, குழந்தைபோல் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தான். மதுரை மாமன் இவ்வளவு கோழை மனமுடையவனென்று, பிச்சை நினைக்கவேயில்லை.

''என்ன அக்குருமம்! என்ன அக்குருமம்! அட பாவி! சாவறத் துக்குத்தானா ஒனக்குச் சொத்து வந்திச்சு? வாய்க்கு எட்டினது கையிக்கு

எட்டாமே போச்சே! உன் கனவுலேகூட இவ்வளவு பணம் வருமின்னுட்டு நெனைச்சிருக்கமாட்டயேடா! இன்னும் ஒருநாள் பொளச்சு இருக்கக்கூடாதா? அட! ஒரு மணிநாச்சும் இருக்கக்கூடாதா? இந்தச் சேதியைக் காதாலே கேட்டாவது சாவக் கூடாதா? ஐயோ! எவ்வளவு லச்சம் இருந்தா என்னடா? போன உசிரு வருமா?'' என்று மதுரை புலம்பினான்.

வீரப்பனுக்குத் துக்கம் ஒரு பக்கம். பிரமை ஒரு பக்கம். விஷயம் அறியாதவன்போல் அவன் நெற்றியைச் சுளுக்கினான். போலீஸ் அதிகாரி வந்த காரணம் வேலனுக்குத் தெரியுமோ தெரியாதோ என்ற சந்தேகம், பிச்சைக்குப் பிறந்தது. போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர் திரும்பிப் போய்விட்டானென்று, அவன் வேலனுக்கு மெதுவாகச் சொன்னான்.

‘‘சப்பினிஸ்பெக்டரா! சப்பினிஸ்பெக்டரா!'' என்று மயக்கத்திலிருந்து தெளிகிறவன் போல, வேலன் திருப்பித் திருப்பிச் சொன்னான். பிறகு, கோபாவேசத்துடன் குதித்து நின்று, ‘‘அக்ருமக்காரப் பயக! போனதரம், ஒண்ணுமில்லாததுக்கு என்னை இளுத்துக்கிட் டுப் போனானுக. இந்தத் தரம், ஒண்ணுக்கு மூணா உயிரை வாங்காட்டி ஏனின்னு கேளு!'' என்று கூவினான்.

‘‘ஐயோ, வேலு! உன்னைப் பிடிச்சுக்கிட்டுப்போவ அவரு வருல்லே. உனக்கு வந்த நல்ல காலத்தைச் சொல்லணுமினு அல்ல, அவரு வந்தாரு?'' என்று பிச்சை பிடித்துக் கொண்டான்.

‘‘எனக்கு நல்ல காலம் வந்திச்சா! எங்கப்பாரு மனசு நொந்து நொந்து செத்தா, எனக்கு நல்ல காலமா? டேய், உனக்குப் புத்தி கலங்கிப்போச்சா? இல்லாட்டி, எளக்காரமாயிருக்குதா?''

மதுரைக்குத் திடீரென்று ஞாபகம் வந்தது.

‘‘அப்பா, வேலு! என் மூளை கெட்டுப்போச்சுடா — நான் சொல்ல மறந்திட்டேண்டா! அப்பாவுகூடப் போயிட்டானாமுடா! நாலஞ்சு மாசமாச்சுதாம்.

சாவுறப்போ உயில் எளுதி, உனக்கும் இந்தப் பாளாப்போனவனுக்கும் ஆறு லச்ச ரூவா வச்சிருக்கா னாம்,'' என்றான் மதுரை, செத்தவனைக் காட்டி.

''ஹ!'' என்று எல்லோரும், ஒரே மூச்சில் ஆச்சரியப்பட்டார்கள்.

''ஆஹா! என் தோப்பானாரு செத்தாரு; எங்க 'அப்பா' செத்தது; எனக்கும் ஆறு லச்சம் வந்திடுச்சு! இனிமே, எனக்கு என்னா கொறவு!'' என்று வேலன், பரிகாசமாய்ச் சிரித்தான்.

''நம்மூரெல்லாம் வாங்கிடலாமே!'' என்று ஒருவன், அடக்க முடியாத ஆச்சரியத்தோடு சொன்னான்.

''அட, ஒலகமெல்லாம் வாங்கிட்டாத்தான் என்ன?'' என்றான் வேலன், மிகவும் வெறுப்புடன்: ''எங்கப்பாருக்கு ஒதவாத சொத்து, யாருக்கு வேணும்? சாவுறவரையிலும் சொகமுண்டா? மனசுக்குச் சொகமுண்டா? நல்ல வைத்தியம் பண்ணக்கூடத் துட்டு இல்லாமே போச்சே! அது செத்தப்புறம், எனக்கு ஆறு லச்சம் வருதா? இதென்ன எளக்காரமா? அந்தச் சொத்தைக் கொண்டுபோய் ஓடப்புலே போடு! எல்லாம் ஒளிஞ்சுது, ஒளிஞ்சுது!'' என்று அவன் கைகளை உதறிக்கொண்டு சொன்னான்.

மதுரை, அவனை மெதுவாகத் தட்டிக்கொடுத்தான்: ''அப்பா, வேலு! பொறுத்துக்கோ! அப்பா பொறுத்துக்கோ! கஷ்டந்தானடா, ரொம்பக் கஷ்டமடா! ஐயோ கடவுளே! நான் அறியேனா!'' என்று வேலனுக்குச் சமாதானம் சொல்லப்போக, அவன் தன் துக்கத்தையே வெளியிட்டான்.

''என்னாத்தை அறியறது! எனக்கு ஒண்ணும் விளங்கல்லியே! கண் காணாத சீமையிலே என்னைப் பெத்த தோப்பன் செத்துட்டது இன்னா, அது எனக்கு ஏற்கில்லையே. அது எனக்கு ஒரு வேத்து மனிசன்தானே! — ஆனா, எங்கப்பாவைப் பாத்தா, ஐயோ! என் வவுற எரியுதே! ஐயோ, அப்பா! அப்பா!'' என்று, நாவில் வார்த்தை எழும்பாமல் குமுறினான் வேலன்.

“எத்தினி பேருக்கு ஒவகாரம் பண்ணிச்சு! எத்தினி பேருக்குத் தலை கொடுத்தது! அதுக்கு இந்தக்... கதியா! அந்தச் சாமிக்குக் கண்ணு இருக்குதா!” என்று அழுதான். பிறகு கண்களைத் துடைத்துக்கொண்டு, “அது செத்தப்புறம், பணம் யாருக்குத் தேவை? எனக்குக் கால் துட்டு வாணாம். நான் எங்கேநாச்சும் ஓடிப் போறேன். இதென்ன பொளைப்பு! ஒலகத்துலே நல்லது பொல் லாதது இல்லையா? எல்லாம் தலைகீளாயிருக்குதே! நான் இந்தச் சங்கதியைக் கண்டுக்கிட்டுத்தான் ஆவணும். காடோ மலையோ, பெரியவங்களைத் தேடி, அவுங்க காலுலே உளுந்திடுறேன். கருமாதி ஆவட்டும்; ஓட்டம் பிடிச்சுடுறேன்,” என்றான் அவன், கையை ஆட்டிக்கொண்டு. அவனுடைய பாவனைகளைப் பார்த்தால், மதுரைக்குப் பயமாயிருந்தது.

“வேலு, வாணாம் அப்பா! வாணாம், வாணாம்! சாவும் பொறப்பும் நம்ம கையிலேயா இருக்குது? ஆண்டவன் ஆணைக்கு மீறி யாராலே நடக்க முடியும்? பொறந்தவங்க சாவாமே இருக்க முடியுமா? துன்பப்படாத மனிசன் ஒலகத்துலே எவன் இருக்கான்? கஷ்டம் வந்தப்போ, பொறுத்துக்கணும். செத்தவங்களோடு எல்லாம் முடிஞ்சு போவுதா? பொளச்சிருக்கறவங்க சங்கதியைப் பாக்க வாணாமா? சொல்லு. அது நம்ம கடமை இல்லியா? அந்தப் பாவிக்கு ‘நத்தைக்காடு’ மேலேதான் உயிரெல்லாம். அதுலேயே அவனைப் பொதச்சு ஒரு மடம் கட்டிடலாம். அதைச் சுத்திப் பூச்செடிங்களை...”

வேலன் பரிகாசமாகச் சிரித்தான்: “என்ன யோசனை! அதுலே என்ன சொகம் அதுக்கு? பாத்திக்கிட்டா இருக்குது? அப்படி யின்னா, செத்த பேருக்கெல்லாம் எவ்வளவோ செய்யலாமே. நான் நம்புல்லே, மாமா — எனக்கு ஒண்ணுமே விளங்கில்லியே! ஆடித் தேடிச் சம்பாதிச்சுத் தலையிலே கட்டிக்கிட்டுப்போறது என்ன? இதுக்காவ, ஓய்வு ஒளிவு இல்லாமே, இப்படித் திண்டாடுவானேன்? எங்கப்பாரு கடனை நான் எப்படித் தீத்துக்குவேன்? உசிருக்கு உசிரா என்னை வளத்து வந்துச்சே! என்னாலே அதுக்கு என்ன ஒவயோகம். அது எனக்குச் செஞ்சதுலே, நூத்துலே ஒரு பங்காவது அதுக்கு நான் செய்ய வாணாமா? எப்படிச் செய்வேன்? எனக்கு யாரு வளி காட்டுவாங்க? என் நெஞ்சுலே இருக்கிற பளுவை, நீ என்னத்தே கண்டே?

என்னாலே தாங்க மாட்டுலே, மாமா! நாலும் தெரிஞ்சவங்க நம்மூருலே இல்லாமையா போயிட்டாங்க? அவுங்களைத் தேடிப் பிடிச்சு, இந்தப் பாரத்தை நீக்கிற வரையிலும், எனக்கு ஒரு வேலையும் ஒடாது. இந்த வேதனையைத் தீத்துக்க, நான் எங்கேநாச்சும் ஓடணும்! ஓடணும்!'' என்று பரிதாபப்படும்படி, கையை இதயத்தின் மேல் வைத்துக் கொண்டான்.

''வேலு! பதறாதே! பதறாதே! உன் அம்மா சங்கதி என்ன?''

''எங்கம்மாவா!'' என்றான் வேலன், வேறு நினைவுடன். அவ்வார்த்தை, என்ன என்னவோ நினைவுகளை மூட்டின. பிறகு, தன் 'அம்மா'வை உற்றுப் பார்த்தான். அவள் ஒன்றையும் கவனியாது, இதயம் உடைந்து விடுவதுபோல் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள். பிறகு, அப்படியே அவன் பார்வை வள்ளியின் மேல் விழுந்தது. வள்ளி கண்ணும் கண்ணீருமாய், உலகமனைத்தையும் மறந்து, வேலனைப் பார்த்தவண்ணம் நின்று கொண்டிருந்தாள். அவள் துக்கம் இனிமேல் கட்டுக் கடங்கா தென்பதை, அவள் துடிக்கும் இதழ்கள் வெளிப்படுத்தின. பிறகு, அவ்விருவர் கண்களும் சந்தித்த க்ஷணத்திலே, அவள் பெருமூச்சு விட்டு மூர்ச்சையாய்க் கீழே விழுந்தாள்.

வேலன் ஓடி அவளை வாரி எடுத்து, ''வள்ளி! வள்ளி!'' என்று அன்பு ததும்ப அழைத்தான். ஆனால், சில வினாடிகள் வரையில் அவளுக்குத் தெளிவு வரவில்லை; பெருமூச்சுவிட்ட வண்ணம் இருந்தாள். பிறகு மயக்கம் தெளிந்ததும், கண்களைத் திறந்து பார்த்துத் தேம்பினவாறே, ''என்னை உட்டுட்டுப் போவாதே! உட்டுட்டுப் போவாதே! நீ போறப்போ என்னையும் அளச்சிக்கிட்டு போ!'' என்று கெஞ்சினாள்.

வேலன், அவள் வெளுத்த முகத்தைப் பார்த்தான்.

அவள் விழிகளில் ததும்பும் உருக்கத்தின் வேகத்தைக் கண்டு, அவன் பிரமித்தான்.

ஒருமுறை, அந்தத் தீனமான பார்வை அவன் மனத்தை உருக்கிற்று; மற்றொருமுறை, அதன் அளவற்ற சக்தி அவனை அடக்குவதுபோல் இருந்தது. அன்பும் ஆத்மத் தியாகமும் பொங்கி யோடும் அப்பார்வையில், அவன் இரண்டொரு நிமிஷம் ஈடுபட்டு, மதிமயங்கி நின்றான். அப்பொழுது, அது இல்வாழ்க்கையின் கருத்தை ஒருவாறு விளக்குவதுபோல் அவனுக்குப் புலப்பட்டது.

பிறகு, தாழ்ந்த இனிமையான குரலில், ''உன்னைவிட்டு, ஒருநாளும் பிரியமாட்டேன்,'' என்று அவன், அவளுக்கு வாக்குத் தத்தம் செய்தான்.

முற்றிற்று